

# அன்னை தெரேசா

ஒன்பதாம் வகுப்பு

(துணைப்பாட நூல்)

# அன்னை தெரேசா

(துணைப்பாட நூல்)

ஒன்பதாம் வகுப்பு

தீண்டாமை ஒரு பாவச் செயல்

தீண்டாமை ஒரு பெருங்குற்றம்

தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்




தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை

முதற்பதிப்பு—1981
மறுபதிப்பு—1982

ஆசிரியர்

அ. மறைமலையான்,
24, வாலாசா சாலை,
அண்ணா சாலை அஞ்சல்,
சென்னை-600 002

மேலாய்வாளர்கள்

டாக்டர் மா. இராமலிங்கம்,
தமிழ்ப் பேராசிரியர்,
அரசினர் ஆடவர் கல்லூரி,
கும்பகோணம்-612 001

புலவர் தணிகை உலகநாதன்,
ஓய்வுபெற்ற தமிழாசிரியர்,
1, தணிகைத் தெரு முனை,
வில்லிவாக்கம், சென்னை-600 049

விலை: ரூ. 1—30

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி.எஸ்.எம். தாளில் இந்நூல் அச்சிடப் பட்டுள்ளது.

ஆஃப்செட் முறையில் அச்சிட்டோர்
ஸ்ரீமகள் கம்பெனி, சென்னை-600001.

# பொருளடக்கம்

# 1. அன்பின் திருவுருவம்

## அன்பு மழை

அன்பு என்பது அமைதியாகப் பொழியும் மழையைப் போன்றது. மழையில் நனைவதால் நிலம் முழுவதும் குளிர்ச்சி நிறைகிறது; மலர்ச்சி எழுகிறது; பசுமை தவழ் கிறது; பயனும் விளைகிறது. அன்பில் நனைவதால் நம் நெஞ்சம் முழுவதும் குளுமை நிலவுகிறது; மகிழ்ச்சி மலர் கிறது; இனிமை வழிகிறது; இரக்கமும் சுரக்கிறது.

எல்லாருடைய அன்பும் இன்பத்தின் ஊற்றுதான். என்றாலும் தாயின் அன்பே தலைசிறந்தது; அதற்கு இந்த உலகமே ஈடாகாது. அன்னையின் அன்பு தன்னலமற்றது; தங்கு தடை இல்லாமல் பொங்கிவரும் ஊற்றைப் போன்றது. அவ்வாறு தன்னலமே இல்லாமல் தாயின் அன்பைப் பொழி கின்ற சான்றோர்களை இந்த உலகமே தலைவணங்கிக் கொண்டாடும். அத்தகைய உலகப் புகழுக்கு உரியவராக ஒளி வீசி நிற்கிறார் ஒருவர்.

அவர்தாம் அன்னை தெரேசா.

## நேருவின் நெஞ்சம் நெகிழ்ந்தது

இரக்கம் என்னும் சொல்லின் ஓர் இனிய வடிவமாக இன்று அன்னை தெரேசா இயங்கி வருகிறார்; ஈகை புரி கிறார். அவர் காட்சிக்கு எளியவர்; பேச்சிலே இனியவர். அவரது உடையிலும் பகட்டு இல்லை; நடையிலும் செருக்கு இல்லை. அருட்கடலாகத் திகழும் அன்னை தெரேசாவின் உருவத்தைக் கண்ட அளவிலேயே உருகுகின்ற உள்ளம் படைத்தவர் பலர்.

அவ்வாறு நெஞ்சம் நெகிழ்ந்தவர்களுள் பண்டித ஜவகர் லால் நேருவும் ஒருவர். அவர் அப்படி நெகிழ்ச்சி அடைந்

தமைக்கு ஒரு நிகழ்ச்சியே சான்றாகும். அஃது எப்போது, எங்கே, எப்படி நடந்தது என்பதைக் காண்போம்:

இந்தியா விடுதலை பெற்ற பின்னர் ஒவ்வொரு துறையிலும் உயர்ந்து நிற்பவரைச் சிறப்பித்து விருதுகள் வழங்கும் திட்டத்தை இந்திய அரசு மேற்கொண்டது. ஆண்டுதோறும் இவ்வாறு விருதுகள் வழங்கும் விழா இந்தியக் குடியரசு தலைவர் மாளிகையில் நடைபெறுகிறது. 'இராஷ்டிரபதி பவன்' என அழைக்கப்பெறும் அம் மாளிகை புது டில்லியில் இருக்கிறது.

1962-ல் அன்னை தெரேசா அம்மையாருக்கு, அவர் ஆற்றிவரும் அரிய சமூகப் பணிகளுக்காக விருது வழங்கிச் சிறப்பிக்க இந்திய அரசு முடிவு செய்தது. 'பத்மஸ்ரீ' என்பது அந்த விருதின் பெயராகும். 'தாமரைத்திரு' எனத் தமிழில் அதைக் கூறுவர். அப்போது பண்டித ஜவகர்லால் நேரு இந்தியாவின் தலைமை அமைச்சராக விளங்கினார்; டாக்டர் எஸ். இராதாகிருட்டினன் இந்தியக் குடியரசு தலைவராகத் திகழ்ந்தார்.

1962 ஏப்ரல் திங்களில் 'விருதுகள் வழங்கும் விழா' மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அன்று குடியரசு தலைவர் மாளிகையில் உள்ள வரவேற்புக்கூடம் நன்றாக அழகுபடுத்தப்பட்டிருந்தது; அங்கே திராட்சைக் குலைகளைப்போலத் தொங்கும் வண்ண விளக்குகள் கண்ணைக் கவர்ந்தன.

விழாவுக்குச் செல்வாக்கு மிகுந்த பெருமக்கள் பலர் வந்திருந்தனர். தலைமை அமைச்சர் பண்டித ஜவகர்லால் நேருவும் வந்திருந்தார்.

விருதுகள் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்கள் ஒவ்வொருவராக விழா மேடைக்கு அழைக்கப்பெற்றனர். அவர்களுக்குக் குடியரசு தலைவர் இராதாகிருட்டினன் விருதுகளை வழங்கினார். அன்னை தெரேசாவின் முறை வந்தது. தமது பெயர் அறிவிக்கப்பட்டதும் அவர் மேடை நோக்கி நடந்தார்' எளிமையான ஆடையே உடுத்தி அடக்கமாகச் சென்றார்.

விருதுபெற வந்திருந்த ஏனையோர் நன்கு பளபளக்கும் கவர்ச்சியான ஆடைகளையே விழாவுக்கென்று அணிந்து வந்திருந்தனர். அன்னை தெரேசா அம்மையாரோ எப்போதும்போல் பருத்தியால் ஆன நீலக் கரைபோட்ட புடைவையும் முழு நீளக் கைச்சட்டையும் உடுத்தியிருந்தார். அவரது எளிய கோலமே விழாவுக்கு வந்த அனைவருடைய இதயத்தையும் பாகுபோல் இளகச் செய்தது.

குடியரசு தலைவரின் கையிலிருந்து அவர் விருதினை வாங்கிய காட்சி உள்ளத்தை உருக்குவதாக அமைந்தது. கொடிய நோய்வாய்ப்பட்ட ஒரு குழந்தையைத் தம் இரு கைகளாலும் பரிவோடு அன்னை தெரேசா எங்ஙனம் ஏந்தி எடுத்துச் செல்வாரோ அங்ஙனமே அந்த விருதையும் அவர் வாங்கிக்கொண்டார்.

அப்போது அவையினர் எழுப்பிய கை தட்டலால் விழா மண்டபமே அதிர்ந்தது; வேறு எவருக்குமே கிட்டாத வகையில் பார்வையாளர்களின் கையொலி முழக்கம் அன்னை தெரேசாவைக் கரைகடந்த களிப்போடு வரவேற்றது.

அடக்கப் பண்புக்கே ஓர் அணிகலனாக எளிமைக் கோலத்தில் நிற்கும் பெருமாட்டிக்கு விருதினை வழங்கும்போது, குடியரசு தலைவரின் கண்கள் பனித்தன; தலைமை அமைச்சர் நேருவின் நெஞ்சம் நெகிழ்ந்தது; விழிகள் நீரைச் சிந்தின.

விழா முடிந்தபின்னர் நேரு தமது இல்லத்துக்குத் திரும்பினார்; அவருடன் அவர்தம் தங்கை திருமதி விஜயலட்சுமி பண்டிட்டும் சென்றார். அப்போது தம் அண்ணனை நோக்கி அப் பெண்மணி, ''அன்னை தெரேசா அடக்கமாக விருது பெற்ற அந்தக் காட்சி நம் மனத்தையே உருக்குவதாக இருந்தது; இல்லையா?'' என்று கேட்டார்.

உலக அமைதிக்காகப் பாடுபடும் 'ஐக்கிய நாடுகள் ஒன்றியத்தின்' தலைவராகவும் பதவி ஏற்ற தம் தங்கையின் இந்தச் சொற்களைக் கேட்டதும் நேரு என்ன கூறினார் தெரியுமா?

''அப்போது நீ எத்தகைய உணர்ச்சியைப் பெற்றாயோ, இல்லையோ எனக்குத் தெரியாது; ஆனால், என் கண்ணீர்த் துளிகளைக் கட்டுப்படுத்துவது எனக்கு மிகமிக அரிதாக இருந்தது; அப்படியே உருகிப்போனேன்!'' என்று தழுதழுத்த படியே கூறினார்.

இதிலிருந்து அன்னை தெரேசாவின் அன்புத் திருவுருவம் நேரு அவர்களின் நெஞ்சத்தை எந்த அளவுக்கு நெகிழ்வித்தது என்பது தெரிகிறது அன்றோ?

### பி. சி. ராயின் பிறந்த நாள் செய்தி

நேரு பெருமகனார் போன்றே அவர்தம் நெருங்கிய நண்பர் ஒருவரும் அன்னை தெரேசாவின் அறப்பணி கண்டு தம் நெஞ்சத்தைப் பறிகொடுத்திருக்கிறார்.

இந்திய நாட்டு விடுதலைக்காக அரும்பாடுபட்டு அறப் போர்களில் ஈடுபட்ட வங்காளத் தலைவர்களுள் டாக்டர் பி. சி. ராய் குறிப்பிடத்தக்கவர்; 'இந்தியாவின் தந்தை' எனப் போற்றப்பெறும் மகாத்மா காந்தியடிகளின் தலைமையை ஏற்றுப் பொதுப்பணிக்கு என்றே தம் வாழ்க்கையை ஒப்படைத்துக்கொண்டவர்; பண்டித ஜவகர் லால் நேருவின் நெருங்கிய தோழர்; நேப்பாள மன்னர் போன்ற அயல்நாட்டுத் தலைவர்களுக்கும் சிறந்த நண்பர். மருத்துவக் கலையிலும் மிகச் சீரிய தேர்ச்சி பெற்றவராக இந்தியா மட்டுமன்றி, அயல்நாடுகளும் புகழும் அளவுக்கு அவர் பெருமை பெற்றுத் திகழ்ந்தார். மேலே குறிப்பிடப் பட்டுள்ள பெருந்தலைவர்களே அவரிடம் மருத்துவம் செய்து கொள்ள வந்திருக்கின்றனர் எனின், டாக்டர் ராயிடம் பொதிந்திருந்த மருத்துவக் கலைக்கூர றிவை நன்கு புரிந்து கொள்ளலாம் அன்றோ?

தொண்டின் சுடராக விளங்கிய டாக்டர் பி. சி. ராய், இந்தியா விடுதலை எய்திய பின்னர், மேற்கு வங்காளத்தின் முதலமைச்சர் ஆனார். அவரைப் போன்று ஒரு மாநிலத் தின் ஆட்சித் தலைமையை ஏற்பவரை—எத்தனையோ

உடனடிப் பணிகள், தீர்வு காண்பதற்கு அரிதான—கடுமையான சிக்கல்கள், மக்களின் நலனுக்காக நிறைவேற்றவேண்டிய நெடுங்கால—குறுகிய காலத் திட்டங்கள், எதிர்பாராத வகையில் இயற்கையின் சீற்றமான புயல், வெள்ளம் போன்றவற்றிலிருந்து பொதுமக்களைக் காப்பாற்றவேண்டிய பொறுப்புகள், எல்லையில்லாத கடமைகள் முற்றுகையிடுவது இயற்கை. அவற்றையெல்லாம் ஒழுங்குபடுத்தி உரிய நடவடிக்கை மேற்கொள்ள நேரம் ஒதுக்குவதே எந்த ஒரு முதலமைச்சருக்கும் அரிய செயலாகும். அத்தகைய நெருக்கடியான நிலையிலும் மக்களுக்குத் தாம் ஆற்றிவந்த மருத்துவத் தொண்டை டாக்டர் ராய் புறக்கணிக்கவில்லை. நாள்தோறும் காலை ஆறு மணியிலிருந்து ஒரு மணி நேரம் தம்மைச் சந்திக்கவரும் நோயாளிகளுக்கு அவர் இலவச மருத்துவ அறிவுரை வழங்குவார்.

அறப்பணி இயக்கத்தைத் தொடங்கியிருந்த அன்னை தெரேசா அந்த மருத்துவத் தொண்டு நேரத்தில் டாக்டர் ராய் அவர்களைச் சந்திப்பதை ஒரு வழக்கமாக மேற்கொண்டார். மற்ற நோயாளிகளைப் போன்று மருத்துவ அறிவுரைபெற அவர் செல்லவில்லை. ஏழைகளின் இன்னல்களைக் களைவதற்காக விண்ணப்பங்கள் கொடுக்கவே சென்றார். குடிசைப் பகுதிகளில் எங்கெங்கே குடிநீர் வசதி செய்யவேண்டும்; பள்ளிகளை நிறுவவேண்டும்; மின் விளக்குகளை எரியவிடவேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளே அவ்விண்ணப்பங்களில் அடங்கியிருக்கும். தனிப்பட்ட முறையில் தமக்கென்று மருத்துவம் பெறவோ, வேறு நன்மைகள் தேடியோ வாராமல், ஏழை—எளிய மக்களின் துயரங்களைத் துடைப்பதற்காக மட்டுமே தம்மைச் சந்திக்கவரும் அன்னை தெரேசாவைக் கண்டு டாக்டர் ராய் மிகவும் வியப்படைந்தார். அன்னையாரின் பொதுநல நோக்கு அவரைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. எனவே, முதலமைச்சர் என்னும் தமது பதவி நிலையில் தாம் என்னென்ன உதவிகள் 'செய்ய இயலுமோ அத்தனையையும் சட்ட வரம்புகளுக்கு உட்பட்டு அவர் அன்னை தெரேசாவுக்கு அளிக்க முன்வந்தார்.

'ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே!'

என்பது அதிவீரராம பாண்டியனாரின் வாக்கு.

அவ்வாறுதான் அன்னை தெரேசாவுக்கும் டாக்டர் பி. சி. ராய்க்கும் இடையே முகிழ்த்த தோழமையுணர்வு, ஆழமாக வேரோடி உறுதியாக வளர்ந்தது. ஏழைகளை வாழவைக்கும் பொதுநல நோக்கே அவர்கள் இருவரையும் அவ்வாறு இணைத்து வைத்தது. முதலமைச்சர் பொறுப்பைச் சிறப்பாக நிறைவேற்றும் பொருட்டும், எல்லாப் பார்வையாளர்களுக்கும் இணையான சந்திப்பு வாய்ப்பைத் தருவதற்கும் முன்கூட்டியே நேர ஒதுக்கீடு செய்து எவரையும் பார்ப்பது டாக்டர் ராய்க்கு வழக்கம். ஆனால், அன்னை தெரேசாவின் மிக உயர்ந்த அறப்பணிகளின் இன்றியமையாமையை எண்ணி, முன்னறிவிப்பு இன்றி எந்த நேரத்திலும் தம்மை வந்து சந்திக்கலாம் என்று டாக்டர் ராய் உளம் உவந்த வாய்ப்பளித்தார்.

அன்னை தெரேசாவிடம் அவர் எந்த அளவுக்கு ஆழமான மதிப்பு வைத்திருந்தார் என்பது அவரது எண்பதாவது பிறந்த நாளில் வெளிப்பட்டது. ஆண்டுதோறும் தமது பிறந்த நாளை எளியமுறையில் கொண்டாடுவதே டாக்டர் ராய்க்கு வழக்கம்; அன்று ஓய்வு ஏதும் எடுத்துக்கொள்ளாமல் அரசு அலுவல்களைப் புரிவதும் அவருக்கு வாடிக்கை. அந்த எண்பதாம் பிறந்த நாளிலும் அங்ஙனமே அவர் தம் அலுவலகம் சென்றார். அப்போது நாளேடுகள்—கிழமை ஏடுகளின் செய்தியாளர்கள் அவரைப் பேட்டி காண வந்தனர். அவர்கள், ''இந்த எண்பதாம் பிறந்த நாளில் தொடர்ந்து முதலமைச்சராகப் பணிபுரிவது எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்கள்.

அவர்களுடைய வினாவுக்கு, டாக்டர் ராய் அவர்களோ, ''இந்த என் பிறந்த நாளில்—இந்த முதிய வயதில்—முதன் முதலில் யாரைப்பற்றிய நினைவு எனக்கு வந்தது தெரியுமா? நாட்டின் விடுதலைக்காக எந்தத் தலைவரோடு ஒன்றி நின்று

போராடினேனோ, அந்த என் அருமைத் தலைவர் மகாத்மா காந்தியடிகளின் நினைவுகூட எனக்கு வரவில்லை; என் உயிருக்குயிரான உற்ற தோழர்—இந்திய நாட்டின் தலைமை அமைச்சர்—ஜவகர்லால் நேருபற்றிய எண்ணமும் என் நெஞ்சில் எழவில்லை; ஏன், எனக்கு மிகவும் நெருக்கமான என் உற்றார், உறவினர் எவரைப்பற்றிய சிந்தனையுமே எனக்கு வரவில்லை. ஆனால், எனது அலுவலகத்துக்குச் செல்லும் அந்த மாடிப்படிகளில் நான் காலடிவைத்து ஏறும்போது, ஒரே ஓர் எளிய உருவம் மட்டுமே என் நெஞ்சம் முழுவதும் நிறைந்திருந்தது. திக்கற்ற ஏழைகளையும், நோயாளிகளையும், குழந்தைகளையும், காப்பாற்றுவதற்காக—அவர்களின் கண்ணீரைத் துடைப்பதற்காக, தம் வாழ்வையே ஒப்படைத்துக் கொண்டு அல்லும் பகலும் அயராது உழைக்கிறாரே—அந்த அன்னை தெரேசாவின் மெலிந்த வடிவமே என் இதயம், மூளை எல்லாவற்றையுமே சுற்றி வளைத்துக்கொண்டு விட்டது,'' என்று குரல் தழுதழுக்கக் கூறினார்.

டாக்டர் ராயின் இந்த உளந்திறந்த கனிவான சொற்கள் அனைவருடைய உள்ளத்தையும் தொட்டு உருக்கின. மறுநாள் அத்தனை செய்தி ஏடுகளும் அன்னை தெரேசா பற்றிய அவர்தம் கருத்துகளுக்கு முதலிடம் தந்து வெளியிட்டன. அன்றுமுதல் அன்னையாரின் அறப்பணிகள்பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம் நாடெங்கும் பெருக்கெடுத்துப் பாயத் தொடங்கிற்று.

மேற்கு வங்க மாநில முதல்வராகமட்டுமன்றி, நாட்டின் விடுதலைப் போராட்டத் தளபதிகளுள் ஒருவராகவும் இந்தியா முழுவதும் செல்வாக்குப் பெற்றிருந்த டாக்டர் ராய் அவர்களே இந்த அளவுக்கு நெஞ்சம் நெகிழ்ந்து போனார் எனின், அன்னை தெரேசாவின் அறப்பணிகளின் சிறப்பை என்னவென்று இயம்புவது!

இவ்வாறு காண்போர் நெஞ்சங்களையெல்லாம் மெழுகாகக் கரையவைக்கும் ஆற்றல் அன்னை தெரேசாவுக்கு எங்கிருந்து வந்தது? நாட்டை ஆளுகின்ற தலைவர்களே

ஆயினும், நடைபாதையிலே நலிகின்ற ஏழை, எளிய பிணி யாளர்களே ஆயினும், அவரைப் போற்றி வணங்கும் நிலை எப்படி ஏற்பட்டது? அனைவரின் மன மாடத்திலும் அன்னை தெரேசாவின் அன்புத் திருவுருவம் அகல் விளக்காக ஒளியைப் பொழிகிறதே! எவ்வாறு?

அவரது அடக்கமான எளிய வாழ்வே, அறப்பணிகள் என்னும் கனிகள் பழுத்துக் குலுங்கும் நெடுமரமாக வளர்ந்து நிற்கிறது; பலரை வாழவைக்கிறது. இரக்கம் சுரக்கும் அவருடைய ஈர நெஞ்சும், ஈகைச் செயலும் அவரைப் புகழ் மலையின் உச்சியில் ஒரு பொன்விளக்காக ஏற்றிவைத் துள்ளன. அந்த அருள் மழையின் வாழ்க்கை வரலாற்றை இனி விரிவாகக் காண்போம்.

# 2. இளமைப் பருவம்

உலக அமைதியைக் காக்க ஓயாது உழைத்த தலைவர் பலர். அவருள் நம் இந்திய நாட்டின் முதல் தலைமை அமைச்சராக இருந்த பண்டித ஜவகர்லால் நேருவும் ஒருவர் ஆவார். அவருக்கு உற்ற நண்பராக இருவர் வாய்த்தனர். ஒருவர், யுகோஸ்லேவியா நாட்டின் ஆட்சித் தலைவரான மார்ஷல் டிட்டோ. இன்னொருவர், எகிப்து நாட்டின் ஆட்சித் தலைவரான நாசர்.

எல்லா நாடுகளுக்கிடையேயும் நல்லுறவு தழைக்கவும், நல்லமைதி நிலவவும், நடுநிலைமை சிறக்கவும் அம்மூவரும் ஆற்றிய நற்பணிகள் எண்ணில் அடங்கா. அதனால் அவர்களது ஆட்சித் தலைமையைப் பெற்றிருந்த இந்தியா, யுகோஸ்லேவியா, எகிப்து ஆகிய மூன்று நாடுகளும் உலக அரங்கில் உயர்ந்த செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன.

மார்ஷல் டிட்டோவால் மதிப்பிற்குரிய பொதுவுடைமை நாடாக விளங்கும் யுகோஸ்லேவியா நாட்டில் சுகோப்ஜி (Skopje) என்னும் ஊரில் 1910ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 27ஆம் நாள் அன்னை தெரேசா பிறந்தார். அவருடைய பெற்றோர் அல்பேனிய மொழி பேசுவோர். ஐரோப்பாக் கண்டத்தில் ஆல்ப்ஸ் மலைத்தொடர்களின் அருகே வற்றாத ஆறுகளின் வளமும், பசுமை தவழும் வயல்வெளிகளும், அலைகள் சிரிக்கும் கடலின் அழகும் சூழ்ந்த அல்பேனியாவும் யுகோஸ்லேவியாவும் அடுத்தடுத்து உள்ள நாடுகள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அன்னை தெரேசாவின் தந்தையார் ஒரு பண்டசாலைக் காப்பாளர்; தாயார் ஒரு வேளாண்மைத் தொழிலாளி. இருவருடைய குடும்ப வாழ்க்கை இன்பம் பொங்குவதாகவே அமைந்திருந்தது. அவர்களுக்கு ஓர் ஆண் பிள்ளையும்

இரண்டு பெண் குழந்தைகளும் பிறந்தன. அந்தப் பெண் குழந்தைகளுள் ஒருவரே அன்னை தெரேசா.

தம் அருமைப் பெண்மகவுக்குப் பெற்றோர் சூட்டிய பெயர் அக்னஸ் கான்ஷா பெஜாட்சூ (Agnes Gonxha Bejaxhiu) என்பதாகும். ஆனால், சிறுமியாக இருந்த அவரை 'அக்னஸ்' என்றே எல்லாரும் செல்லமாக அழைத்தனர். இருபத்தொரு வயது வரையிலுமே இந்த இயற்பெயர் அவரோடு இணைந் திருந்தது. அதன் பின்னர் 1931 முதல் தெரேசா என்னும் புதிய பெயரினைப் பூண்டார். இப்பெயர் அவர் சார்ந்துள்ள கிறித்தவ சமய விதிகளின்படி, சில நோன்புகளை மேற் கொண்டு இயேசு பெருமானின் திருப்பணிக்கே தம்மை ஒப்படைத்துக்கொண்டதால் சூட்டப்பெற்ற புதுப்பெய ராகும்.

**கல்வியில் தேர்ச்சி**

கல்வி என்பது கண்ணுக்கு நிகரானது. 'கண்ணுடையர் என்பவர் கற்றோர்'. பார்வை அற்றோருக்கு இந்தப் பரந்த உலகமும் இருண்ட குகைதான். அவரால் தம்மிச்சையாகச் சாலையிலே நடக்கவும் முடியாது; தடுமாறி விழாமல் எந்தப் பள்ளத்தையும் படுகுழியையும் கடக்கவும் முடியாது. கல்லா தார் வாழ்க்கையும் அவ்வாறு இருண்டுபோவதுதான்; இடறி விழச்செய்யும் இன்னல்கள் நிறைந்ததுதான்.

அதனாலேயே நம் ஆன்றோர்கள்,

'எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும்'

என்று கல்வியின் இன்றியமையாமையை அழுத்தமாக உரைத் தார்கள். இங்கே கல்வியின் இரு தலையாய கூறுகளான கணித அறிவையும் இலக்கிய அறிவையுமே 'எண்' என்னும் சொல்லும் 'எழுத்து' என்னும் சொல்லும் முறையே குறிக் கின்றன.

கல்வியில் தேர்ச்சி பெறுவதால் நம் வாழ்க்கை வளம் மலிந்ததாக அமைகிறது; ஒளி நிரம்பியதாக உயர்கிறது;

பிறந்த நாட்டில் மட்டுமன்றிப் பிற நாடுகளிலும் பெருமை விளங்கத்தக்க சிறப்பினைப் பெறுகிறது. இதனைக் கருத்தில் கொண்டே ஔவைப் பாட்டியும் அடியிற் காணுமாறு ஓர் அழகிய பாடலைப் பாடினார்:

'மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை; கற்றோர்க்குச்
சென்றஇடம் எல்லாம் சிறப்பு.'

இவ்வாறு தாம் செல்லும் இடங்களில் எல்லாம் சிறப்புகளைப் பெறும் வகையிலேயே அன்னை தெரேசாவும் கல்வி பயிலத் தொடங்கினார். 'ஜிம்மேழியா' (Gimmaziya) என்னும் அரசு பள்ளி ஒன்றில் அவர் சேர்க்கப்பெற்றார்.

தமது தாய்மொழியில் தேர்ச்சி பெற்ற அவர், ஆங்கில மொழி பயில்வதற்குரிய வாய்ப்பினையும் அடைந்தார். 'அறிவுலகப் பலகணி' என உலகமே கொண்டாடும் மொழி ஆங்கிலமாகும். அந்த ஒரு மொழியைக் கற்றுத் தேர்ந்தோர் அவனியையே சுற்றி வந்துவிடலாம். அந்த அளவுக்கு ஏறத்தாழ எல்லா நாடுகளிலும் அம்மொழி பரவியிருக்கிறது. தமது பதினெட்டாம் வயதில் கன்னியர் மடத்தில் பெண் துறவியர்க்குரிய சமயக் கல்வியைக் கற்பதற்காக அயர்லாந்து நாட்டின் தலைநகரான டப்ளினுக்கு அன்னை தெரேசா அனுப்பிவைக்கப்பட்டார். அங்கே உலகப் பெருமொழிகளில் ஒன்றான ஆங்கிலத்தையும் அவர் பயின்றார். பின்னர் இந்தியா வந்து மேற்கு வங்காளத்தின் தலைநகரான கல்கத்தாவில் வாழத் தலைப்பட்டதும் வங்காள மொழியையும் அவர் கற்றுக்கொண்டார்.

## இளம்வயதில் பொதுப்பணி எண்ணம்

'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார். துன்பப்படும் மக்களுக்குத் தொண்டு செய்வதே இன்பத்துள் எல்லாம் இன்பமாகும்.

மக்களுக்குப் பணிபுரியும் ஆர்வம் இளமைப் பருவத்திலேயே அன்னை தெரேசாவின் இதயத்தில் துளிர்விட்டுத் தழைப் பதற்குத் தொடங்கிவிட்டது. அவரது தொண்டு மனம் பிஞ்சுப் பருவத்திலேயே அவரைச் 'சோடாலிட்டி' (Sodality) என்னும் அமைப்பில் உறுப்பினராகச் சேரும்படி தூண்டியது.

துன்பப்படும் மக்களுக்குத் துணைபுரிவதற்காக ஏற்படுத் தப்பட்டதே அந்த இயக்கம். கிறித்தவ சமயக்கொள்கை களைப் பரப்புவதிலும் அது முனைப்புடன் செயலாற்றியது. அதில் உறுப்பினரர்கச் சேர்ந்துகொண்ட அன்னை தெரேசா, இயேசுநாதர் வலியுறுத்திய நெறிமுறைகளை நன்கு அறிய முற்பட்டார்.

கடலில் மூழ்கும் மனிதரைக் கரையேற்ற வரும் உயிர் மீட்கும் படகைப்போலத் துயரத்தில் அமிழும் மக்களின் கண்ணீரைத் துடைப்பதற்காகத் தொண்டாற்ற வந்தவர் இயேசுநாதர்.

'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' என்று பேரறிஞர் அண்ணா அடிக்கடி கூறுவார்.

அத்தகைய பொறையுடைமைக்கு ஓர் இணையில்லாத சான்றாக விளங்கியவர் இயேசுநாதர். ஈகை, இரக்கம், நீதி, ஒழுக்கம் முதலான நற்பண்புகளை மனித மனத்தில் விதைப் பதையே அவர் மாபெரும் தொண்டாகப் புரிந்தார். ஆனால், அவருடைய நெறிமுறைகளைத் தவறாகப் புரிந்துகொண் டோர் அவரைச் சிலுவையிலே அறைந்து கொன்றுவிட்டனர்:

இரக்கம் பொழிந்த இயேசுநாதர் இரக்கமின்றிக் கொல்லப் பட்ட நிகழ்ச்சி எவர் நெஞ்சிலும் உருக்கத்தை உண்டாக்குவ தாகும். இயேசுநாதரின் வாழ்க்கையைப் படித்த அன்னை தெரேசாவின் உள்ளமும் அவருக்காக உருகியது. அவர் எடுத்துரைத்த அறநெறிகளையே சீரிய வழிகாட்டும் விளக்கு களாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டது.

'இந்த மண்ணுலகில் நீங்கள் செல்வங்களைச் சேர்த்து வைக்கவேண்டா. இங்கே பூச்சியும் துருவும் அவற்றைக்

கெடுத்துவிடும்; திருடரும் அவற்றைக் கன்னம் இட்டுத் திருடுவர்.'

'வானத்துப் பறவைகளைக் கவனித்துப் பாருங்கள். அவை விதைப்பதும் இல்லை; அறுப்பதும் இல்லை; களஞ்சியங்களில் சேர்த்து வைப்பதும் இல்லை; அவற்றுக்கும் உங்கள் 'பரம பிதா'வான கடவுள் பிழைப்பூட்டுகிறார். அவற்றைவிட நீங்கள் சிறப்பானவர் அல்லரோ?'

'நீ உன் கண்ணில் இருக்கிற உத்திரத்தை உணராமல் உன் உடன்பிறந்தவனின் கண்ணில் இருக்கிற துரும்பைப் பார்ப்பது ஏன்?'

'கேளுங்கள்; கொடுக்கப்படும். தேடுங்கள்; கண்டடைவீர்கள். தட்டுங்கள்; திறக்கப்படும்.'

'ஒருவன் உன்னை வலக்கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு இடக்கன்னத்தையும் திருப்பிக் காட்டு.'

'நீதியின்மேல் பசியும், தாகமும் உள்ளவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் நெஞ்சிலே நிறைவுபெறுவார்கள்.'

'இரக்கம் உள்ளவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் உலகத்தின் இரக்கத்தைப் பெறுவார்கள்.'

'இதயத்தில் தூய்மை உள்ளவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் கடவுளைக் காண்பார்கள்.'

'நோயுள்ளவர்களைக் குணப்படுத்துங்கள்; தொழு நோயாளிகளைக் கழுவித் தூய்மை செய்யுங்கள்.'

—இயேசுநாதரின் இத்தகைய அரிய அறவுரைகள் எல்லாம் அன்னை தெரேசாவின் உள்ளத்தில் பசுமரத்தில் அடித்த ஆணிபோல் ஆழமாகப் பதிந்தன. மனத்தைக் கொள்ளை கொண்ட அவர்தம் மணிமொழிகளின்படியே மக்களுக்குத் தொண்டுபுரியும் ஆர்வத்தை அந்தப் பிஞ்சுப் பருவத்திலேயே அன்னை தெரேசா தம் நெஞ்சில் வளர்த்துக்கொண்டார்.

### பன்னிரண்டாம் வயதிலேயே பணிபுரியும் துடிப்பு

மக்கள் பணிக்காகத் தமது வாழ்க்கையையே ஒப்படைக்க வேண்டும் என்னும் உறுதிப்பாடு அன்னை தெரேசாவின்

பன்னிரண்டாம் வயதிலேயே உண்டாகிவிட்டது. அதற்கு ஏற்றாற்போல, நம் இந்திய நாட்டைப்பற்றி அவரது செவியில் விழுந்த செய்திகளும் தொண்டுபுரிவதற்காக அவர் மேற்கொள்ள எண்ணிய 'துறவு' மனப்பான்மைக்கு உரம் ஊட்டுவனவாகவே அமைந்தன.

அப்போது இந்தியத் துணைக்கண்டத்தின் வட கிழக்கில் உள்ள வங்காளம்—அஸ்ஸாம் பகுதிகளில் வாழ்ந்த மக்களை வறுமைத் தீ கடுமையாக வாட்டியது. கக்கல்—கழிச்சல் (காலரா) போன்ற கொள்ளை நோய்களும் நூற்றுக்கணக்கான உயிர்களைக் கொள்ளைகொண்டன. அவர்கள் கல்வியறிவு இன்மையாலும் அடைந்துவந்த அவல நிலைகள் பலவாகும். இப்படித் துன்பப் புயலில் சிக்கித் தவித்த மக்களுக்குக் கிறித்தவ சமயத் தொண்டியக்கத்தைச் (Christian Missionary) சார்ந்தவர்கள் ஊன்றுகோலாக உதவ முன்வந்தார்கள்.

குறிப்பாக, நம் நாட்டின் வட கிழக்குப் பகுதியில் உள்ள 'டார்ஜிலிங்' நகரை அடுத்த 'குர்சியாங்' என்னும் இடத்தில் கிறித்தவ சமய ஊழியர்கள் புரிந்த உதவிகள் உலகமே போற்றும்படியாக அமைந்திருந்தன. அவற்றைப்பற்றிக் கேள்வியுற்ற அன்னை தெரேசா, 'நாமும் அப்படி இந்தியருக்காகப் பாடுபடமாட்டோமா?' என்று ஏங்கித் தவித்தார்.

அவரது இதயத்தில் பீறிட்ட இரக்கம் என்னும் பேரூற்று, உலக வாழ்வின் இன்பங்களையெல்லாம் துறக்குமாறும் தூண்டியது; ஆசைகளாகிய தீக்கொழுந்துகளை எல்லாம் அருளாகிய புனலைக் கொட்டி அணைத்துவிட்டுக் கிறித்தவ சமயத்தினர் நடத்தும் கன்னியர் மடத்தில் சேர்ந்து 'கன்னித் துறவி'யாக்க் கடமை ஆற்றவும் அவர் துடித்தார்.

இந்த அருள் துடிப்பு—கடமை வேட்கை—அன்னை தெரேசாவின் பன்னிரண்டாம் அகவையிலேயே அவரது உள்ளத்தில் ஆழமாக வேரூன்றியது வியப்பினை அளிப்பதாகும். இதைப்பற்றிப் பம்பாயிலிருந்து வெளிவரும்

ஆங்கிலக் கிழமை இதழ் ஆசிரியர் ஒருவர் தமது விந்தை யுணர்வை வெளியிட்டார்.

''உங்களுடைய பன்னிரண்டாம் வயதிலேயே 'கன்னித் துறவி'யாகிப் பணியாற்றும் ஆர்வம் வந்துவிட்டதாகக் கூறுகிறீர்களே! ஒருவரது வருங்கால வாழ்க்கைப் பாதையை முடிவு செய்வதற்குப் பன்னிரண்டாம் வயது என்பது மிகக் குறைந்த இளம்பருவம் அன்றோ?'' என்று வினவினார். அவருக்கு அன்னை தெரேசா என்ன விடையளித்தார் தெரியுமா?

'அன்பைச் செலுத்துவதற்கு எத்துணை இளம்பருவமும் எந்தக் காலத்திலுமே இடையூறாக இருப்பதில்லை. திருமணம் செய்துகொள்வதற்கு ஓர் இளம்பெண் எப்படி ஆயத்தமாக இருப்பாளோ, அப்படித்தான் மக்கள் பணி ஆற்றுவதற்கு நானும் அப்போது ஆயத்தமானவளாக ஆகிவிட்டேன்!'

## கனவு நனவு ஆனது

இவ்வாறு தொண்டுபுரியும் அருள்வித்து அன்னை தெரே சாவின் மனப்பாத்தியில் முளைவிட்டு நன்றாகத் தழைத்துச் செழித்தாலும் அது செடியாகி, மரமாகி, நிழல் தருவதற்கு இன்னும் சில ஆண்டுகள் அவர் காத்திருக்கவேண்டியிருந்தது.

இதற்கிடையே ஆங்கிலேயர் ஆட்சியில் அடிமை இருளில் சிக்கிச் சீரழிந்த இந்தியரின் இன்னல்பற்றிய செய்திகள் அன்னை தெரேசாவின் செவிகளில் எட்டிய வண்ணமே இருந்தன. வறுமையும் பிணியும் வாட்டுவது ஒரு புறம் இருக்க, கல்விக் கண்ணைப் பெறாதவர்களாக இந்தியர் அறியாமை இருளில் மூழ்கிக் கிடப்பதும் அவரது உள்ளத்தைத் தைத்தது. அவர்களுக்குத் தொண்டு புரிவதற்காக யுகோஸ்லேவியா நாட்டிலிருந்து கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவர் சிலர் இந்தியாவை நோக்கிப் புறப்பட்டனர்.

அந்தத் தொண்டு இயக்கத்தின் முதல் குழு 1925ஆம் ஆண்டு இறுதியில் கல்கத்தாவுக்குச் சென்றது. அதே குழுவைச் சார்ந்த ஒருவர் டார்ஜிலிங் நகருக்கு அருகேயுள்ள

குர்சியாங் என்னும் ஊரில் பணியாற்றுவதற்காகப் போய்ச் சேர்ந்தார். அவர் தமது 'கிறித்தவத் தொண்டு இயக்கம்' ஆற்றும் அறப்பணிகளைப்பற்றியும் வறுமையாலும் பிணியாலும் இந்தியர் படுகின்ற இன்னல்களைக் குறித்தும் தமது தாய்நாட்டில் உள்ள இயேசுநாதர் சங்கத்திற்கு அடிக்கடி மடல்கள் எழுதினார்.

அந்த மடல்கள் தெரேசா உறுப்பினராக உள்ள 'சோடாலிட்டி' சங்கத்தில் படித்துக் காட்டப்படுவது வழக்கம். அவற்றில் அடங்கிய செய்திகளைக் கேட்கக் கேட்க, அவரது நெஞ்சில் இந்தியருக்குப் பணியாற்றவேண்டும் என்னும் வேட்கை மேன்மேலும் கொழுந்துவிட்டு எரிந்தது. அதனை எளிதில் அணைக்க இயலாத அன்னை தெரேசா ஒருநாள் தம்முடைய கிறித்தவ சமய குருவான பாதிரியாரைப் பார்த்தார்; 'கன்னித் துறவி' ஆக மாறி இந்தியாவுக்குப் போய்க் கடமையாற்றத் துடிக்கும் தமது எண்ணத்தை அவரிடம் வெளிப்படுத்தினார்; பாதிரியாரிடம் அதற்குரிய ஒப்புதலை அவர் வேண்டினார்.

இளமையிலிருந்தே இயேசு பெருமகனார் எடுத்துரைத்த அறநெறிகளில் அன்னை தெரேசாவுக்கு எத்துணை ஆழ்ந்த ஈடுபாடு உண்டு என்பதை அந்தக் கத்தோலிக்கப் பாதிரியார் நன்கு அறிந்தவர். எனினும், வாழ்க்கை இன்பங்களைப் பற்றிய ஆசைகளையெல்லாம் அறவே எரித்துப் பொசுக்கி விட்டுக் 'கன்னித் துறவி'யாகி மிகமிகத் தொலைவில் உள்ள இந்திய நாட்டுக்குத் தொண்டாற்றச் செல்லும் அளவுக்குப் பதினைந்தே அகவை நிரம்பிய ஓர் இளம்பெண்ணுக்குப் பக்குவநிலை வருவது அரிதாயிற்றே என்று அந்தப் பாதிரியார் எண்ணினார் போலும்!

அவர், "அன்பு மகளே, அக்னஸ்! உன் இரக்கமுள்ள இதயம் உயர்வானது; இந்தியாவுக்குச் செல்ல நினைக்கும் உன் விருப்பமும் நியாயமானது; உன் எண்ணம் ஈடேற உனக்கு ஒப்புதல் அளிக்கவே நானும் உளமார விரும்புகிறேன். ஆனாலும், என் அன்பு மகளே! உன் எதிர்கால வாழ்வைப்

பற்றிய இந்த முடிவை மீண்டும் சிந்தனை செய்து பார்! உணர்ச்சிக்கு ஆட்படாமல் தனிமையில் அமைதியாக உன் விருப்பத்தைப்பற்றி மீண்டும் மீண்டும் எண்ணிப் பார்! பின்னர்த் தெளிவான ஒரு முடிவுக்கு வா! கர்த்தரின் அருள் உனக்குக் கிட்டுவதாகுக!'' என்று தெரேசாவுக்கு அறிவுரை புகன்றார்.

பாதிரியாரின் இந்த அறிவுரை, அன்னை தெரேசாவுக்கு ஓரளவு ஏமாற்றத்தையே அளித்தது. ஆயினும், துறவியாகித் தொண்டாற்றவேண்டும் என்னும் அவரது ஆர்வம் சோர்ந்து துவளவில்லை. தாம் கடமையாற்றக்கூடிய காலம் விரைவில் கனியும் என்னும் தன்னம்பிக்கையோடு அவர் காத்திருந்தார். அதற்குத் தகுந்தாற்போல், வேறு சில நிகழ்ச்சித் திருப்பங்களும் ஏற்பட்டன.

அச்சமயம், கல்கத்தாவுக்குப் பணிபுரியச் சென்றிருந்த கிறித்தவத் தொண்டு இயக்கத்தைச் சார்ந்த சிலர் தங்கள் தாயகம் திரும்பினர். அவர்கள் 'லொரெட்டோ' (Loretto) என்னும் கிறித்தவக் கன்னியர் மடத்தைச் சார்ந்த பெண் துறவியர், கல்கத்தா நகரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஏழை, எளிய மக்களுக்கு ஆற்றும் இனிய பணிகளைப்பற்றி விரிவாக எடுத்துக் கூறினார்கள்; எனவே, அந்த மடத்தில் சேர்ந்துகொண்டால் அன்னை தெரேசாவின் எண்ணம் ஈடேறலாம் என்னும் நம்பிக்கையையும் ஊட்டினார்கள்.

இந்தச் செய்தி தெரேசாவுக்குத் தேனாக இனித்தது. தமது திட்டத்தைச் செயல்படுத்தும் நோக்கோடு உடனே 'லொரெட்டோ' கன்னியர் மடத்தில் உறுப்பினராக இணைந்துவிட்டார். அப்போது அவரது அகவை பதினெட்டைத் தாண்டிவிட்டது.

முன்னர் அவரை மறு சிந்தனை செய்யுமாறு அறிவுரை கூறிய பாதிரியாரும் தெரேசாவின் உறுதியான முடிவை அறிந்து உவகையே அடைந்தார்; தாம் தேர்ந்தெடுத்துக் கொண்ட பொதுப்பணிப் பாதையிலிருந்து திசைமாறி

நடவாத அவரது வைர நெஞ்சத்தை அப் பாதிரியார் உளமாரப் பாராட்டி வாழ்த்தினார்.

இவ்வாறு 'கன்னித் துறவி'யான அன்னை தெரேசா 'லொரெட்டோ' கன்னியர் மட விதிகளின்படி சில பயிற்சிகள் பெறவேண்டியவரானார். அதற்காக 1928ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் அவர் அயர்லாந்து நாட்டுக்குப் புறப் பட்டார்.

அங்கே டப்ளின் நகரை அடுத்த ரத்பார்ன்ஹாம் என்னும் இடத்தில் உள்ள 'லொரெட்டோ' கன்னியர் மடத்தில் ஓராண்டுக் காலம் பயிற்சி பெற்றார். அப்போதுதான் முன்னர்க் குறிப்பிட்டதைப்போல ஆங்கில மொழியிலும் அவர் தேர்ச்சி பெற்றார்.

அதன் பின்னர் நம் இந்திய நாட்டுக்கு வந்து சேர்ந்தார். இங்ஙனம் அன்னை தெரேசா நெடுங்காலமாகக் கண்டுவந்த கனவு நனவாயிற்று.

# 3. இந்தியாவுக்கு வருகை

இந்திய மண்ணில் அடிவைத்த அன்னை தெரேசாவின் உள்ளம் எல்லையில்லாத இன்பக் கடலில் திளைத்தது. எந்த நாட்டின்மீது தம் இளம் வயதிலேயே பரிவையும் பற்றையும் வளர்த்துவந்தாரோ, அந்த நாட்டுக்கே வந்துவிட்டதால் அவர் அடைந்த இன்பப் பூரிப்புக்கு அளவே இல்லை.

ஏழைகள் மலிந்த இந்திய நாடும் தனக்குப் பெருமை சேர்க்கவந்த அன்பு மகளை இரு கை நீட்டி வரவேற்றது. குழந்தைப்பேறு இல்லாமல் கலங்கிய ஒரு குடும்பத் தலைவி, தன் வளர்ப்பு மகளைக் கண்டதும் வாரி அணைப்பதைப் போலவே அன்னை தெரேசாவை இந்த நாடு ஏந்திக்கொண்டது; ஏற்றுக்கொண்டது. எத்தனையோ நாள்களாக அவர் கண்டுவந்த கனவுகளுக்கு—எய்த நினைத்த இலக்குப் பணிக்கு அவரது இந்திய வருகை வாயிற்கதவைத் திறந்து விட்டது.

இந்தியாவுக்கு வந்ததும் அவர் நேரே டார்ஜிலிங்கில் உள்ள 'லொரெட்டோ' கன்னியர் மடத்துக்குச் சென்றார்: அயர்லாந்து நாட்டில் பெற்றிருந்த பயிற்சிகளின் தொடர்ச்சியாக இன்னும் முடிக்கவேண்டிய ஏனைய பயிற்சிகளையும் முடித்தார்; பின்னர் வங்காள மாநிலத் தலைநகரான கல்கத்தாவுக்குச் சென்றார்; அங்கே 'தூய மேரி உயர்நிலைப் பள்ளி' புகழ்பெற்று விளங்கும் கல்விநிலையமாகும். அன்னை தெரேசா 1929ஆம் ஆண்டு சனவரியில் அப்பள்ளியின் ஆசிரியையாகப் பொறுப்பேற்றார்.

### கல்கத்தா தந்த காட்சிகள்

இந்தியப் பெருநாட்டில் மக்கள் தொகைப் பெருக்கத்தாலும், கலை, தொழில், நாகரிகம் முதலானவற்றின் வளர்ச்சி

யாலும் மிகச் சிறந்த முதன்மை வாய்ந்தனவாக மூன்று நகரங்கள் பெயர் பெற்று விளங்குகின்றன. அவை கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகியனவாம். அவற்றுள் கல்கத்தா நகரமே மிகப் பெரிய நகரம். அது பலவகையிலும் வரலாற்றுச் சிறப்புகளைக் கொண்டதாகும்.

ஆங்கிலேயர் இந்தியாவில் தங்கள் ஆதிக்க ஆட்சியை நிறுவுவதற்குத் தேர்ந்தெடுத்த முதல் தலைநகரம் கல்கத்தா தான்.

இந்தியாவின் உச்ச நீதிமன்றம் (சுப்ரீம் கோர்ட்) முதன் முதல் ஏற்படுத்தப்பட்டதும் கல்கத்தாவில்தான். அன்னை தெரேசாவைப்போல் நானிலமே புகழும் நோபல் பரிசைப் பெற்ற மாபெரும் கவிஞர் இரவீந்திரநாத தாகூர் தோன்றியதும் கல்கத்தாவில்தான்.

இங்ஙனம் எத்தனையோ சிறப்புகளைப் பெற்றுள்ள கல்கத்தா நகரில்தான் அன்னை தெரேசாவும் தமது ஆசிரியப் பணியைத் தொடங்கினார். ஆயினும், அவர் அலுவல் புரிந்த பள்ளியை ஒட்டிய கல்கத்தா நகரின் காட்சிகள் அவருக்கு மிகுந்த கவலையையே கொடுத்தன.

தூய மேரி உயர்நிலைப் பள்ளியை அடுத்த 'லொரெட்டோ' கன்னியர் மடத்தின் அறையொன்றில் அன்னை தெரேசா தங்கியிருந்தார். அதன் பலகணி வழியாகப் பார்த்தால் 'மோத்திஜில்' என்னும் சேரிப் பகுதி தெளிவாகத் தெரியும். அச்சேரிவாழ் மக்களை வறுமையும் பிணியும் கொடுமையாக ஆட்டிப்படைத்தன. பொத்தல் குடிசைகளில், கால்வயிற்றுக் கஞ்சிக்கும் வழியில்லாத ஏழைப் பாட்டாளிகள் அங்கே கண்ணீர் வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தார்கள்.

எலும்புகள் இற்றுப்போகும்படி உடலை வருத்தி எவ்வளவு தான் உழைத்தாலும் அந்த வறிய மக்களுக்குக் கிடைத்த கூலியோ அவர்களது வயிற்றுப் பசியைப் போக்குவதாக இல்லை. உண்பதற்குப் போதிய உணவு இல்லை; உடுப்பதற்கு வேண்டிய உடையில்லை; உறைவதற்கு வசதியான வீடு இல்லை. இத்தகைய கொடிய துன்பங்களால் முற்றுகை

யிடப்பட்டு உயிரோடு வாழ்வதற்கே அன்றாடம் போராடி வரும் அந்த ஏழை மக்கள் தங்கள் பிள்ளைகளைப் பள்ளி களுக்கு அனுப்பி அவர்களுக்குத் தேவையான புத்தகம், பலகை முதலானவற்றை எப்படி வாங்கித்தர முடியும்?

அருவருப்பான சூழ்நிலையில் குப்பையும் சேறும் நிரம்பிய 'மோத்திஜில்' சேரிப் பகுதியில் அந்தக் குடிசைகளையும், தாழ்த்தப்பட்ட மக்களையும் அவர்களுடைய குழந்தைகளை யும் தமது அறையிலிருந்து காணும்போதெல்லாம் அன்னை தெரேசாவின் நெஞ்சம் பரிவு உணர்ச்சியால் கரைந்து கரைந்து உருகும். 'இவர்களின் துன்பத்துக்கு விடிவுகாலமே பிறவாதா?' என்று அவரது இளகிய மனம் ஏங்கித் தவிக்கும்.

அவர் பணியாற்றிவந்த உயர்நிலைப் பள்ளியில் செல்வச் செழிப்புள்ள பணக்காரப் பிள்ளைகளே கல்வி பயின்றார்கள். ஏழைக் குழந்தைகள் அணுகவே முடியாத நிலையில்தான் அந்தப் பள்ளி இயங்கிவந்தது. அந்தப் பாகுபாட்டைக் கண்டு அவரது மனம் உள்ளூரப் பதறியது. பகட்டாக உடை உடுத்திப் பள்ளிக்கு வரும் பணக்காரச் சிறுவர் சிறுமியரைப் பார்க்கும்போதெல்லாம், கிழிந்த கந்தைகளை அணிந்தும் அணியமுடியாமலும் வாடும் பாட்டாளிப் பிள்ளைகளின் கோலமே அவரது கண்முன் தோன்றி உள்ளத்தை வருத்தும்.

சமூகத்தில் சிலர் மட்டும் பகட்டாக உண்டு, உடுத்திப் பணக்காரர்களாக இருப்பானேன்? பலர் பாடுபட்டு உழைத் தும் பட்டினி கிடந்து இறப்பானேன்? இத்தகைய சிந்தனை களையும் அந்தக் கல்கத்தாக் காட்சிகள் அன்னை தெரேசா வின் இதயக் கடலில் அலைகளை எழுப்பியவண்ணம் இருந் தன.

கல்கத்தாவில் உள்ள சேரிப் பகுதியைப்போன்ற ஒன்றை அவர் யுகோஸ்லேவியாவிலோ அயர்லாந்திலோ கண்ட தில்லை. சமூகத்தில் மேல் சாதி என்றும், கீழ்ச் சாதி என்றும் மக்களிடையே பிளவுகளை உண்டாக்கித் தீண்டத்தகாதவர் களாகவே ஒரு பிரிவு மக்களை ஒதுக்கிவைக்கும் கொடுமையை யும் அவர் அந்த நாடுகளில் பார்த்தது இல்லை.

'உலகில் வேறு எங்குமே இல்லாத இந்தச் சாதிக் கொடுமை இந்தியாவில்மட்டும் ஏன் இப்படிக் கூத்தாடு கிறது? இந்தத் தாழ்த்தப்பட்ட—பிற்படுத்தப்பட்ட மக்கள் தலைநிமிர்ந்து நடக்க வழியே இல்லையா?' என்னும் எண்ணங்களும் அவரது உள்ளத்தில் சலசலப்பை உண்டாக்கின.

ஒடுக்கப்பட்ட கீழ்ச் சாதி உழைப்பாளிகளின் குடிசைகளிலே வறுமை என்னும் தீ அணையவேண்டும்; வளம் என்னும் புனல் பாயவேண்டும். ஊனமுற்ற பிணியாளர், பேணுவார் அற்ற திக்கற்றோர், கைவிடப்பட்ட கைம்பெண்டிர் முதலானோர் வாழ்க்கையிலே துன்ப இருள் நீங்கி இன்ப ஒளி வீச வேண்டும். அதற்காக உழைப்பதுதான் உண்மையான கடவுட்பணி என்னும் உணர்வு அன்னை தெரேசாவின் உள்ளத்தில் வலுப்பெற்றது. இத்தகைய பொதுநல நோக்குள்ள இரக்க சிந்தனையே பின்னாளில் அவர் அறப்பணி இயக்கத்தைத் தோற்றுவிப்பதற்கு அடித்தளமாக அமைந்தது என்று கூறலாம்.

### புதிய பெயர் பூண்டார்

கல்கத்தா தூய மேரி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியேற்ற அன்னை தெரேசா, புவியியல் பாடத்தை மாணவர்க்குப் புகட்டிவந்தார்.

புவி முழுதும் தம்மைப் போற்றும் பணியைத் தாம் ஆற்றப்போவதை அப்போது அவர் அறிந்திருக்கவில்லை; ஆயினும், புவியியல்பற்றி அவர் பாடம் புகட்டியதும் ஒரு வகையில் பொருத்தமானதாகவே அமைந்தது எனலாம்.

மாணவ மணிகளுக்கு அவர் பாடம் சொல்லிக்கொடுக்கும் முறையே அன்பு கனிந்ததாக அமைந்திருந்தது. அதனால் நாள்தோறும் அவரது செல்வாக்கு அப்பள்ளியில் ஓங்கியது.

மற்றவர்க்குக் கல்வி புகட்டுவதற்கு ஓய்வே இல்லாமல் உழைத்த அதே வேளையில் தாமும் கிறித்தவ சமயம்பற்றிய கல்வியை அழுத்தமாகவும் ஆழமாகவும் பயின்றுவந்தார்;

இயேசு பெருமானின் அறவழியில் இறைவழிபாடு புரிவதில் முனைப்பாக ஈடுபட்டார். இவ்வாறு சமயக் கல்வியிலும் தியான வழிபாட்டிலும் தேர்ந்து தெளிந்த முதிர்ச்சி நிலைக்கு அடையாளமாக மூன்று உறுதிப்பாட்டு நோன்புகளை அவர் மேற்கொண்டார். அவை:

1. ஏழைமையை உறுதியாகக் கடைப்பிடித்தல்: ஏனெனில், ஏழைகளின் அவலங்களை அதனால்தான் உண்மையாக உணர்ந்து அவர்களிடம் உண்மையான பரிவைச் செலுத்த முடியும்.

2. கற்பைத் திண்மையாகக் கடைப்பிடித்தல்: ஏனெனில், இறைவழிபாட்டில் அதனால்தான் இதயத்தைத் திரியவிடாமல் முழுமையாக ஒப்படைக்க முடியும்.

3. பணிவைக் கடைப்பிடித்து ஒழுகுதல்: ஏனெனில், இறைவனின் நோக்கத்தை அதனால்தான் எல்லா வகைகளிலும் ஈடேற்ற முடியும்.

இவற்றை மேற்கொள்ள, இந்தியாவில் தாம் முதன் முதலில் வந்து தங்கிய டார்ஜிலிங் நகருக்கு அவர் சென்றார். அந்த 'நோன்பை—உறுதிப்பாட்டை' ஒட்டி 1931ஆம் ஆண்டு மேத் திங்களில் கிறித்தவ சமயப் பேரவை ஒன்று அங்கே கூடியது. அப்போதுதான் அவரது பெயர் மாற்ற நிகழ்ச்சியும் நடைபெற்றது.

அவர் குழந்தையாகத் தவழ்ந்தபோது அவருடைய பெற்றோர் இட்ட பெயர் அக்னஸ் கான்ஷா பெஜாட்சூ என்று முன்பே குறிப்பிட்டிருந்தோம். அவரது இருபத்தொன்றாம் வயதுவரை வழங்கிவந்த அந்தப் பெயரை மாற்றிச் சமயச் சான்றோர்கள் தெரேசா என்னும் புதுப் பெயரைச் சூட்டினர். அன்றுமுதல் எல்லாரும் செல்லமாக அழைத்துவந்த 'அக்னஸ்' என்னும் பெயர் அவரை விட்டு அகன்றது; தெரேசா என்னும் பெயரே காலமெல்லாம் நிலைக்கக்கூடியதாக அவருக்கு அமைந்தது.

ஆயினும், பல நாள்வரை தெரேசா என்று யார் அழைத் தாலும் திரும்பிப்பாராமலே அவர் சென்றுகொண்டிருந்தார். அக்னஸ் என்று கூப்பிட்டால்தான் 'ஏன்?' என்று கேட்பார். இது குறித்து அவருடைய தோழியர் வேடிக்கையாகக் கேலி பேசிச் சிரிப்பதும் உண்டு.

நாள்கள் செல்லச் செல்லப் புதிய பெயரை அவர் நன்றாகப் பழகிக்கொண்டுவிட்டார். தெரேசா என்னும் அந்தப் புதுப் பெயர் அவர் உள்ளத்திற்குத் தனி எழுச்சியை ஊட்டியது. 'அல்லல்பட்டு ஆற்றாது அழுகின்ற மக்களின் கண்ணீரைத் துடைப்பதற்கு ஏதேனும் ஓர் அறப்பணியைச் செய்தே தீரவேண்டும்' என்னும் இரக்க சிந்தனையை அது முடுக்கி விட்டுக்கொண்டே இருந்தது.

### பொதுப்பணி நோக்கு பொசுங்குவதா?

ஆசிரியைப் பணியைத் திறம்படச் செய்துவந்த அன்னை தெரேசா, பதினைந்து ஆண்டுகள் கழித்து அதே உயர்நிலைப் பள்ளியில் பதவி உயர்வு பெற்றார்; 1944ஆம் ஆண்டில் தூய மேரி உயர்நிலைப் பள்ளியின் முதல்வராக அவர் ஆனார். அவருக்குக் கிட்டிய அந்த உயர்வினைக் கண்டு ஆசிரியத் தோழியர் ஓடோடி வந்து பாராட்டினர். அவர்களுள் அன்னை சினடே என்னும் பெண் துறவி தெரேசாவிடம் தனியன்பு செலுத்தியவர். அவர் பதவி உயர்வு பெற்று நிற்கும் தம் அருமைத் தோழியை அன்போடு தழுவிக்கொண் டார்; நெற்றிமீது அன்பு முத்தமும் பதித்தார்.

தம்மீது பொழியப்படும் இந்த அன்பு மழையினால்- வாழ்த்து மலர்களால் எத்தகைய வரம்புமீறிய களிப்புணர்ச் சிக்கும் அன்னை தெரேசா இரையாகவில்லை; பதவி உயர்வு தான் வந்துவிட்டதே என்று அதிகார ஆணவத்துக்கும் அவர் பலியாகவில்லை. பாராட்டுகளையெல்லாம் அடக்கமாகவும் அமைதியாகவுமே ஏற்றார். அதே சமயத்தில் அருள் ஊற்று கசிந்துகொண்டேயிருக்கும் அவரது கனிந்த உள்ளமோ, 'இந்தப் பள்ளிக்கும் இந்தக் கன்னியர் மடத்துக்கும்

வெளியிலே நலிந்து, நைந்துகொண்டிருக்கும் ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் என்ன நன்மை செய்யப்போகிறோம்? அதை எப்படிச் செய்யப்போகிறோம்?' என்னும் வினாக் களுக்கு விடைகளைத் தேடுவதிலேயே நாட்டத்தைச் செலுத்தியது. பதவி உயர்வால் வரும் மகிழ்ச்சியைவிடப் பாதிக்கப்பட்ட மக்களுக்குப் பணிபுரிவதால் வரும் மகிழ்ச்சியே பெரிதென்று அவர் நினைத்தார். அவரது உள்ளத்தினுள் ஊற்றாகப் பீறிட்டுக்கொண்டிருந்த தொண்டுவேட்கை அவர் அடைந்த முதல்வர் பதவி வாயிலாக எதிரொலிக்கத் தொடங்கியது.

பள்ளிப் பிள்ளைகளுக்குப் பாடங்களைக் கற்பிப்ப தோடு அவர் நிற்கவில்லை; வகுப்பு நேரம் தவிர, பிற வேளை களில் ஏழைகளிடம் இரக்கமும் ஈகையும் காட்டவேண்டிய இன்றியமையாமைபற்றியும் எடுத்துரைத்தார்.

'எண்ணெய் காணாத தலையும், சளி ஒழுகும் மூக்கும், அழுக்கேறிய உடையும் உடலும் கொண்ட ஏழைக் குழந்தை களைக் கண்டு அருவருப்பு அடைதல் கூடாது; அவர்களை அருகில் நெருங்கவிடாமல் வெறுத்தொதுக்கி விரட்டக் கூடாது; பாதிக்கப்பட்ட அந்தப் பாட்டாளி மக்களுக்கு முடிந்தவரை பரிவு காட்டவேண்டும்; வெட்கத்தைவிட்டு உதவிசெய்யவேண்டும்' என்றெல்லாம் அவர் இரக்க உணர்வை இளம் நெஞ்சங்களில் விதைத்து வளர்க்க முயன்றார்.

திடீரென்று ஒருநாள், 'ஏழை மக்களுக்குப் பணிபுரியும் ஆர்வத்தைப் பள்ளிப் பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடுத் தால் மட்டும் போதுமா? அதனைச் செயல் அளவிலும் நிறைவேற்றிக் காட்டுவதுதானே நேர்மை?' என்னும் எண்ணம் எழுந்தது.

தமது எண்ணத்தை ஈடேற்ற அருகில் உள்ள 'மோத்தி ஜில்' சேரிப் பகுதியிலேயே மாணவமணிகளையும் உடன் அழைத்துச் சென்று முதலில் துப்புரவுப் பணியைத் தொடங் கினால் என்ன என்று அவருக்குத் தோன்றிற்று.

# 4. உள்ளொளி உணர்வு

ஒவ்வொரு மனிதரும் தம் வாழ்க்கைப் பயணத்தின் இலக்கு எது என்பதை இளமையிலேயே வகுத்துக்கொள்ளவேண்டும். ஏதேனும் ஒரு குறிக்கோளைக் கொண்டவரின் வாழ்க்கையே சிறப்பாக விளங்கும்; சீரான பயனையும் கொடுக்கும். பெருக்கெடுத்து ஓடிவரும் பேராறுகூடப் பயிர் விளையக் கூடிய வயலில் பாய்ந்தால்தான் பயன் உண்டு; அதுவே களர் நிலத்திலோ, கடலிலோ போய்க் கலந்துவிடுவதால் எந்த நன்மையும் ஏற்படாது. எனவே, மனித வாழ்க்கையும் வயலில் பாயும் ஆற்று நீர்போலவே பயன் விளைவிக்கக் கூடிய இலக்கைத் தேர்ந்தெடுத்து இயங்குதல் வேண்டும்.

அன்னை தெரேசா அத்தகைய நன்மைகளை நல்கும் குறிக் கோளுடன் வாழவே பெரிதும் விரும்பினார். அறியாமை இருளில் ஆழ்ந்துகிடக்கும் வறிய மக்களின் வாழ்வில் அறிவு ஒளியைப் பரப்பவேண்டும்; பிணியுற்றுத் துடிக்கும் நோயாளி களுக்குப் பெருந்துணையாய்ப் பணிபுரியவேண்டும்; கைவிடப் பட்ட குழந்தைகளுக்கும் பெண்டிர்க்கும் காப்பகமாக விளங்க வேண்டும்; கடைப்பட்ட நிலையில் உள்ள மாந்தரின் கண்ணீரைத் துடைக்கவேண்டும் என்னும் இந்தத் தொண்டு களையே அவர் தமது வாழ்க்கையின் குறிக்கோள்களாக வகுத்துக்கொண்டார்.

ஒரு நோக்கத்தை அடைய முற்படும்போது எத்தனையோ இடையூறுகளும் இன்னல்களும் குறுக்கிட்டுத் தடுக்கக்கூடும். நம் இந்தியப் பெருநாடு விடுதலை பெறவேண்டும் என்னும் உயரிய குறிக்கோளைக் காந்தியடிகள், வ. உ. சிதம்பரனார், ஜவகர்லால் நேரு, நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் முதலிய தலைவர்கள் மேற்கொண்டார்கள். அவர்களது நாட்டு விடுதலை என்னும் பெருநோக்கு நடைமுறையில் வெற்றி பெறுவதற்குள் அத்தலைவர்களுக்கு ஏற்பட்ட இடுக்கண்கள்

எண்ணற்றவை. அன்னை தெரேசாவும் தமது குறிக்கோளை நிறைவேற்றுவதற்காகத் தொடக்க நிலையிலேயே பல தொல்லைகளையும் தடங்கல்களையும் கடக்கவேண்டியவ ரானார்.

**பொதுப்பணிக்கு முதல் தடைச் சுவர்**

முதலில் 'லொரெட்டோ' கன்னியர் மடத்தில் வாழ்ந்து வந்த அவரது துறவு வாழ்க்கையே அவரது அறப்பணி ஆற்றும் குறிக்கோளுக்குக் குறுக்கே நின்றது. மண வாழ்க்கையைத் துறந்துவிட்ட மகளிருக்காகக் கிறித்தவ சமயத்தினர் நடத்தும் கன்னியர் மடங்களில் கட்டுப்பாடுகள் இரும்பு வேலி போல் உறுதியானவை. அங்குப் புகலிடம் தேடிப் புகுந்த கன்னியர் பல ஒழுங்குமுறைகளுக்கு உட்பட்டே தீர வேண்டும். ஏனைய பெண்களைப்போலத் தங்கள் இச்சைப் படியெல்லாம் அவர்கள் வெளியிலே நடமாட முடியாது. கூண்டில் அடைபடாத குருவிகள் எங்கேயும் எப்படியும் பறந்து திரியலாம்; ஆனால், கன்னியர் மடத்துப் பெண்டிர் அவ்வாறு திரிய முடியாது. தவறான—அளவுமீறிய—ஆசைகள் அனைத்தையும் கடிவாளம் இட்டு அடக்கிக் கொண்டு மிகுந்த பொறுப்புணர்வோடு கடமையாற்ற வேண்டும். அதனால்தான் வீதிகளிலோ வேறு பொது இடங்களிலோ வேட்கைகளுக்கு ஆட்படும் வகையில் வேற்று மனிதர்களுடன் தங்கள் விருப்பம்போல் கலந்து பழகுவதற்கு அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அத்தகைய விதிமுறைகளை ஒட்டியே அன்னை தெரேசா 'கன்னியர் மடம்' விட்டு வெளியே சென்று நலிகின்ற வறியவர்க்கும் பிணியாளருக்கும் நற்பணி ஆற்றுவதற்குக் கிறித்தவ சமயத் தலைவர்கள் தொடக்கத்தில் ஒப்புதல் வழங்க உடன்படவில்லை.

அந்நாளில் அன்னை தெரேசாவுக்கு ஆறுதல் அளித்து அறிவுரை கூறும் வழிகாட்டியாகத் தவத்திரு. வேன் எக்சம் என்பவர் விளங்கினார். அவர் பெல்ஜியம் நாட்டில் பிறந்தவர்; அரேபிய மொழியைக் கற்று அரேபிய நாட்டு மக்களிடம் நெருங்கிப் பழகியவர். 'இயேசு கிறித்து சபை'யைச்

சார்ந்த அவர் 'ஆன்ம குரு' என்றும் அழைக்கப்பெற்றார். கத்தோலிக்கக் கிறித்தவ சமயத்தில் உற்றார் உறவினரைத் துறந்து பொதுப்பணி ஆற்றப் புறப்படுவோருக்கு நல்வழி காட்டும் சமயத் தலைவரை 'ஆன்ம குரு' என அழைப்பது வழக்கம். தவத்திரு. வேன் அவர்களும் அன்னை தெரேசாவுக்கு 'ஆன்ம குரு'வாகவே அறிவுரைகள் நல்கித் துணை புரிந்துவந்தார். அன்னையார் 1944ஆம் ஆண்டில் என்டேலி தூய மேரி உயர்நிலைப் பள்ளியின் முதல்வர் பொறுப்பை மேற்கொண்டபோதுதான் தவத்திரு. வேன் அவர்களின் அறிமுகம் கிட்டியது.

நாள்தோறும் இறைவழிபாடு புரிவதற்காகத் தவத்திரு. வேன் அவர்கள் அந்தப் பள்ளிக்குச் சென்றுவருவது வழக்கம். அப்போதெல்லாம் தலைசிறந்த முதல்வராகப் பள்ளியை நடத்திவரும் அன்னை தெரேசாவின் ஆற்றலை நேரில் கண்டு அவர் நெஞ்சார மகிழ்ந்திருக்கிறார். அதனுடன் ஏழைகளிடம் அன்னை தெரேசா காட்டும் அருளுணர்வு அவரது இதயத்தை மிகவும் கவர்ந்தது. அதனால் இருவரிடையேயும் மதிப்புடன்கூடிய ஈடுபாடு வளர்ந்தவண்ணமே இருந்தது.

கடவுள் வழிபாட்டுக்காகப் பள்ளிக்குவந்துபோகும் தமது வழிகாட்டியும் சமய குருவுமான தவத்திரு. வேன் அவர்களிடம், திக்கற்ற ஏழைகளுக்குத் தாம் ஆற்ற விழையும் அறப்பணி குறித்து அன்னை தெரேசா தம் எண்ணத்தை வெளியிட்டார். கன்னியர் மடத்துக் கட்டுப்பாடுகளை நன்கு உணர்ந்திருந்த அந்தச் சமயத் தலைவர், வெளியில் சென்று ஆற்றக்கூடிய அறப்பணிக்குக் குறுக்கே நிற்கும் சிக்கல்களைப் பற்றி எடுத்துரைத்தார்; ஆழ்ந்து சிந்தித்த பின்னரே செயலில் இறங்கவேண்டும் என்றும் அறிவுறுத்தினார்.

அவர் கூறியதற்கு ஏற்பவே, கன்னியர் மடத்துத் தலைவியும், அன்னை தெரேசா மேற்கொள்ள நினைத்த அறப்பணி முயற்சிக்கு இசைவுதர மறுத்துவிட்டார்.

'ஒரு கன்னித் துறவி பலரும் காணும் நிலையில் கடமை ஆற்றுவதாகக் கூறிக்கொண்டு வீதியிலே அடிவைத்து வேற்று

மனிதரோடு பழகுவதாவது!' என்று கண்டனமும் தெரிவிக்கப்பட்டது.

அதனால் அன்னையார் மனம் இடிந்துபோனார். 'ஏழைகளுக்கு இரக்கம் காட்டுவதற்குக்கூட இப்படிப்பட்ட தடைச் சுவர்களை எழுப்பத்தான் வேண்டுமா? இதற்கு ஒரு கழுவாய் இல்லையா?' என்று அவரது இதயம் குமுறிற்று.

**'உள்ளொளி நாள்' உருவானது எப்படி?**

ஒருவர் எண்ணிய எண்ணம் ஈடேறாவிடில் அவர் பெரும் ஏமாற்றத்துக்கு இரையாகிறார்; அந்த ஏமாற்றம், குருத்தைத் துளைக்கும் வண்டுபோல உள்ளத்தைக் குடைவதோடு உடல் நலனையும் தாக்கக்கூடும். கடைநிலையில் உள்ள மக்களுக்குப் பரிவுகாட்ட விழையும் தமது பெருநோக்கு நிறைவேற வழியில்லையே என்னும் ஏமாற்றத்திற்கு இலக்கான அன்னை தெரேசாவும் உடல் நலம் குன்றி அல்லலுற்றார். பள்ளியின் முதல்வர் பொறுப்பும் அவரைச் சலியாது உழைக்குமாறு தூண்டி உடல் நலிவுக்கு வழிகோலியது.

இந்நிலையில், அவர் ஓய்வெடுத்துக்கொள்வதுதான் உகந்தது என்று உடன் பணியாற்றும் ஆசிரியத் தோழியர் வற்புறுத்தினர். கடமையுணர்வு மிகுந்த அன்னை தெரேசாவோ தமது உடல்நலனைப்பற்றிக் கவலையே கொள்ளாதவராகப் பள்ளிப் பணிகளிலேயே முனைந்து ஈடுபட்டார். அவரது இந்தப் போக்கு கன்னியர் மடத்தில் உடன் வாழ்ந்த மற்றவர்களுக்கு மிகுந்த அச்சத்தை அளித்தது; அவரது உடல் நலிவு கடுமையான விளைவுகளுக்கு வழிகோலுமோ என்று அவர்கள் உள்ளம் துடித்தனர்.

அன்னை தெரேசா தமது உடல்நலத்தைப் புறக்கணிப்பது 'லொரெட்டோ' கன்னியர் மடத்தின் தலைவிக்கும் எட்டியது. உடனே ஓய்வெடுத்துக்கொள்ளத்தான் வேண்டும் என்று அன்னை தெரேசாவுக்குக் கண்டிப்புடன் அவர் அறிவுறுத்தினார். மடத்துத் தலைவியின் கட்டளைக்கு மறுப்பு ஏதும்

கூறமுடியாது. எனவே, அன்னை தெரேசா இடையறாது உழைக்கத் தூண்டிய பணிச்சுமைகளிலிருந்து சற்றே ஓய்வு எடுப்பதற்குப் புறப்பட்டார்.

அவர் 'டார்ஜிலிங்' என்னும் மலை நகருக்கு ஓய்வு கொள்ளச் சென்றார். இந்திய நாட்டுக்கு வந்தபோது அவர் முதன் முதலில் தங்கியது டார்ஜிலிங்கில் உள்ள 'லொரெட்டோ' கன்னியர் மடத்தில்தான் என்பதை அறிவோம். கல்கத்தாவிலிருந்து அவர் தொடர் வண்டியில் புறப்பட்டபோது, அவருடைய தோழியர் கண்ணீர்மல்க வழியனுப்பி வைத்தனர்; மிகவும் மெலிந்துவிட்ட அன்னை தெரேசா விரைவில் உடல் தேறித் திரும்பி வரவேண்டுமே என்னும் ஏக்கத்துடனேயே அவர்கள் விடைகொடுத்தனர்.

ஆனால், 1946ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 10ஆம் நாள் மேற்கொண்ட அந்த டார்ஜிலிங் பயணம் அவரது வருங்கால வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமையும் என்று அப்போது எவருமே எதிர்பார்க்கவில்லை; அன்னை தெரேசாவே அப்படி எண்ணவில்லை.

அவர் அமர்ந்து சென்ற தொடர் வண்டி விரைந்து ஓடிக் கொண்டிருந்தது. அவர்தம் விழிகள் சாளரங்களுக்கு வெளியே இயற்கைக் காட்சிகளை வேடிக்கை பார்த்த வண்ணம் இருந்தன. இருமருங்கிலும் நீண்டுசெல்லும் மலைத்தொடர்களும் இடையிடையே வரும் பள்ளத்தாக்குகளும் பசுமை பொழியும் செடி கொடி மரங்களும் ஆங்காங்கே மலர்ந்து சிரிக்கும் காட்டு மலர்களும் அவரது மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. தமது இளம் பருவத்தில் யுகோஸ்லேவியா நாட்டைச் சார்ந்த அல்பேனியப் பகுதியில் எத்தகைய மலையெழிலைக் கண்டு மகிழ்ச்சியில் திளைத்தாரோ, அத்தகைய உவகைக் கடலிலேயே இந்தத் தொடர் வண்டிப் பயணத்தின்போதும் அவர் மிதப்பதாக உணர்ந்தார்.

இயற்கைக் காட்சிகள் தரும் இன்பத்திலேயே மூழ்கிக் கொண்டிருந்த அன்னை தெரேசா சிறிது நேரம் சென்று

இமைகளை மூடி இறைவழிபாட்டில் தோய்ந்தார். அப்போது தம் உள்ளத்தின் உள்ளேயே ஒரு புத்தொளி ஒளிர்வதை உணர்ந்திருக்கிறார்; அதனைத் தொடர்ந்து ஒரு புதுக் குரல் ஒலிப்பதைக் கேட்டிருக்கிறார்; அவரது நெஞ்சத் திரையில் நேர்த்திமிக்க ஓவியமாகப் பதிந்துவிட்ட அந்தச் சொற்கள் வருமாறு:

'ஒடுக்கப்படுபவனும், தெருவில் எவர் துணையும் அற்று இறந்துகிடப்பவனும், தொழுநோயால் உடல் நைந்து உள்ளம் வெதும்புபவனும் நானே!'

'கடைப்பட்டவர்களில் எவருக்கேனும் நீ ஏதேனும் உதவி செய்தால் அஃது எனக்கே செய்வதாகும்.'

இரக்க உணர்வைப் பெருக்குகின்ற இந்த அருமையான சொற்கள், எங்கோ மலை உச்சியிலிருந்து ஓடிவரும் அருவி போலப் பாய்ந்துவந்து அவரது இதயம் முழுதும் நிரம்பியிருக்கின்றன.

அச்சமயம் அவர் ஏதோ அதிர்ந்தாற்போன்ற பேரொலி கேட்டுத் திடுக்கிட்டு விழித்திருக்கிறார்; அவர் கைகள் தம் மேனியில் கிடந்த சிலுவையை வருடியவண்ணமே இருந்திருக்கின்றன. விளக்கவொண்ணாத புத்துணர்ச்சி ஒன்று தமது உள்ளத்திலும் உடலிலும் ஒளிக்கதிர்களாய் ஊடுருவிப் பாய்வதையும் அவர் உணர்ந்திருக்கிறார். சற்றுமுன் தாம் இமைகளை மூடி இறைவழிபாட்டில் தோய்ந்தபோது என்னென்ன சொற்கள் யாழிசைபோல இழைந்து ஒலிப்பதைக் கேட்டாரோ அதே சொற்கள் தாம் விழிகளைத் திறந்த பிறகும் தம் செவிகளிலே திரும்பத் திரும்ப எதிரொலிப்பதை அவர் கேட்டிருக்கிறார்; அந்தச் சொற்களை எல்லாம் இறைவனே வந்து உரைப்பதாகத் தம்மைப் பொறுத்தவரை அவர் எண்ணிக்கொண்டார்; அந்த உள்ளொளி, எல்லாம் வல்ல பேராற்றல் படைத்த பரம் பொருளின் விழிச்சுடர்போலவும், அந்தப் 'புதுமைக் குரல்' கடவுளே இட்ட கட்டளைபோலவும் அவருக்குத் தோன்றியிருக்கின்றன.

சில நொடிகள் அமைதியாகக் கழிந்தபின் அன்னை தெரேசா சற்றுமுன் தோன்றிய உள்ளுணர்வுக் காட்சிகளிலிருந்து மீண்டவராகத் தம் கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு புறவுலகக் காட்சிகளைப் பார்த்தார். அப்போது தம்மைச் சுமந்துவந்த தொடர் வண்டி ஒரு நிலையத்தில் நிற்பது அவருக்குத் தெரிந்தது. அதன் பழைய 'இழுவைப் பொறி' (Train Engine) மாற்றப்பட்டுப் புதிய 'இழுவைப் பொறி' இணைக்கப்பட்டதால்தான் அந்த வண்டி குலுங்கிப் பேரொலியொன்று எழுந்திருக்கவேண்டும் என்பதையும் அறிந்துகொண்டார்.

அதே வேளையில் தமது வாழ்க்கை வண்டியில் பழைய செயல்முறை 'இழுவைப் பொறி' மாற்றப்பட்டு இரக்கம் பொழியும் அறப்பணியே புதிய இழுவைப் பொறியாகச் சேர்க்கப்பட்டுவிட்டதன் அறிகுறிதான் சற்றுமுன் தமது மன மாடத்தில் கொழுந்துவிட்ட 'உள்ளொளி' என்பதையும் அவர் உணர்ந்து மகிழ்ந்தார்.

தொடர் வண்டி நின்றிருந்த அந்தச் சிறிது நேர அமைதியிலேயே அவர் தாள்களை எடுத்துத் தம் இதயத்தில் மலர்ந்த எண்ணங்களையெல்லாம் வரிசையாக எழுத்திலே வடித்தார். தம்முடைய வருங்கால வாழ்க்கை வண்டி எந்தத் திக்கை நோக்கிப் போகவேண்டும் என்பதைத் திட்டமிட முற்பட்டார்.

அந்த நிலையத்திலிருந்து தொடர் வண்டி, பயணத்தைத் தொடர்ந்தது. அன்னை தெரேசாவும் தாம் அமைக்கப் போகும் அறப்பணி இயக்கத்திற்குரிய நோக்கங்களையும், விதிமுறைகளையும், செயற்படுத்தும் வழிவகைகளையும் ஓடும் வண்டியிலேயே சிந்தித்துச் சிந்தித்து எழுதுவதைத் தொடர்ந்தார்.

இவ்வாறு ஓர் அருமையான ஆக்கப் பணிக்கு அன்னை தெரேசா அடிகோலிய அந்த 1946 செப்டம்பர்த் திங்கள் 10ஆம் நாள், அவரது வாழ்க்கை வரலாற்றிலேயே ஒரு புனிதமான பொன்னேடு என்பதில் மிகையேதும் இல்லை.

எனவேதான், அந்த இனிய நன்னாளை உலகெங்கணும் உள்ள அவர்தம் அறப்பணி இயக்கத்தினர் உள்ளொளி நாள் (Inspiration Day) ஆக ஆண்டுதோறும் உவகை மேலிடக் கொண்டாடுகின்றனர்.

## மறுப்புச் சுவர்கள்

அழகுக்கும், அமைதிக்கும், மழை வளத்துக்கும், மலையெழிலுக்கும் தொட்டிலாகத் திகழும் டார்ஜிலிங் நகரில் ஓய்வெடுத்துக்கொண்ட அன்னை தெரேசா உடல்நலம் தேறியதும் கல்கத்தாவுக்குத் திரும்பினார்.

திரும்பியவுடனேயே அவர்தம் 'ஆன்ம குரு'வான தவத்திரு. வேன் அவர்களைச் சந்தித்துத் தமது திட்டத்தைத் தெரிவிக்க முற்பட்டார்; பூச்செடிகள் மலர்ந்து சிரிக்கும் என்டேலி பள்ளித் தோட்டத்தில் அமைதியான சூழ்நிலையில் அவரிடம் தமது இயக்கம்பற்றிய குறிப்புகள் அடங்கிய தாள்களைக் கொடுத்தார். அவை ஓடிக்கொண்டிருந்த தொடர் வண்டியில் விரைவாக எழுதப்பெற்ற குறிப்புகளே. ஆயினும், விரிவான விதிமுறைகளைக் கொண்டனவாகவே அவை அமைந்திருந்தன.

அவற்றை ஊன்றிப் படித்த தவத்திரு. வேன் அவர்கள், ''கல்கத்தாவில் உள்ள 'பிஷப்' என்னும் பெரிய சமய குரு அவர்களின் ஒப்புதலுக்கு முதலில் அனுப்பவேண்டும்,'' என்று கூறி அவற்றை அன்னை தெரேசாவிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். ஆயினும், அவரது திட்டம்பற்றிப் பெரிய சமய குருவிடம் தாமே நேரில்போய் எடுத்துரைப்பதாகத் தவத்திரு. வேன் அவர்கள் ஆறுதலாகக் கூறினார்.

கல்கத்தாவில் அப்போது 'ஆண்டகை' என அழைக்கப்பெறும் பெரிய சமய குருவாக இருந்தவர் பெர்டினாண்டு பெரியர் என்பவர். அவர் எப்போதுமே மிகவும் கண்டிப்பானவர்; கிறித்தவ சமயக் கோட்பாடுகளைப் பொன்னேபோல் போற்றவேண்டும் என்னும் உறுதிப்பாட்டினால்தான் அவர் அவ்வாறு கண்டிப்பு உள்ளவராக நடந்துகொண்டார்.

ஆனால், அவர் நியாயமான காரணங்களை நேர்மையோடு மதிக்கக்கூடியவர். புறத்தோற்றத்தில் கடுமையானவராகக் காணப்பட்டாலும் கனிந்துருகும் உள்ளம் படைத்திருந்தார்.

என்றாலும், தவத்திரு. வேன் அவர்கள் முதன்முதலில் வந்து அன்னை தெரேசாவின் இயக்கம்பற்றி விளக்கிக் கூறிய போது அவர் தொடக்கத்திலேயே அதனை ஏற்க மறுத்து விட்டார். 'இப்படியோர் இயக்கம் தேவையா?' என்று எரிச்சலையும் கொட்டினார்.

பெரிய சமய குரு தவத்திரு. பெரியர் அவர்கள் இவ்வாறு மறுப்புத் தெரிவித்தமைக்குச் சில அடிப்படையான காரணங்கள் உண்டு. கடைநிலையில் தள்ளப்பட்டுக் கிடக்கும் மாந்தரைக் காப்பாற்றுவதற்காக ஓர் அமைப்பை உருவாக்குவது என்பது எளிய செயலன்று. அதற்கு நிரம்ப நிதி இருப்புத் தேவை. அதைத் திரட்டுவதற்குக் கடுமையாக உழைக்கவேண்டும். அதற்குரிய ஆற்றல் கன்னித் துறவியான அன்னை தெரேசாவுக்கு இல்லை என்பது பெரிய சமய குருவின் அப்போதைய கணிப்பாகும். மேலும், அறியாமையிலும் கொடுநோயிலும் சிக்கித் துடிக்கும் மக்களுக்காக நடத்தப்பெறும் ஓர் அறப்பணி இயக்கத்திற்குத் தேவையான கல்விப் பயிற்சியோ மருத்துவப் பயிற்சியோ அன்னை தெரேசாவுக்கு அவ்வளவாக இல்லை என்பதும் அவரது எண்ணமாகும். அடுத்து ஐரோப்பியக் கண்டத்தில் பிறந்த அல்பேனிய இனத்தவரான அப் பெண்மணிக்கு இந்திய மண்ணின் மணத்தையும் பண்பாட்டுப் பழக்கவழக்கங்களையும் புரிந்துகொண்டு எல்லாருடனும் இணங்கி நடக்கக்கூடிய பக்குவமடைந்த மனப்பாங்கு இருக்குமா என்னும் அச்சமும் அவருக்கு இருந்தது. எனவே, அன்னை தெரேசாவின் இயக்கம்பற்றிய பேச்சை எடுத்தாலே அவர் எரிந்து விழுந்தார்.

பெரிய சமய குருவின் மறுப்பு அன்னை தெரேசாவுக்கு அளவற்ற துயரத்தை அளித்தது. இந்நிலையில் வேறொரு தொல்லைக்கும் அவர் ஆட்பட நேர்ந்தது. அறப்பணி

இயக்க முயற்சிக்கு ஒப்புதல் கேட்டுப் பெரிய சமய குருவிற்கு அவர் விண்ணப்பம் அனுப்பியது லொரேட்டோ கன்னியர் மடத்துத் தலைவிக்கு அறவே பிடிக்கவில்லை; சினம் உற்ற அவர், கல்கத்தாவில் என்டேலி கன்னியர் மடத்தில் அது காறும் தங்கி வாழ்ந்த அன்னை தெரேசாவை, நெடுந் தொலைவிற்கு அப்பால் பர்த்துவான் மாவட்டத்தில் உள்ள அசென்சால் என்னும் இடத்தில் இருக்கும் லொரெட்டோ கன்னியர் மடத்திற்கு மாற்றிவிட்டார். அதனால், அன்னையின் இதயம் எவ்வளவு புண்பட்டிருக்கும் என விளக்கத் தேவையில்லை. அந்தச் சோதனை தந்த துயரச் சுமையையும் அமைதியாகவே அவர் தாங்கிக்கொண்டார்.

ஆனால், சிறிது காலமே அவர் அசென்சால் கன்னியர் மடத்தில் தங்கும்படி நேர்ந்தது. அவரை அவ்வாறு மடத்துத் தலைவி மாற்றிய நடவடிக்கை பெரிய சமய குரு தவத்திரு. பெரியர் அவர்களுக்குச் சீற்றத்தை மூட்டியது. அன்னை தெரேசாவின் அறப்பணித் திட்டத்தை அவர் ஏற்க மறுத்தாரே அன்றி, அதற்காக அந்த அருட்பெரும்புனலுக்கு மாற்றுதல் போன்ற தண்டனை தரப்படுவதை அவர் வெறுத்தார். எனவே, தாமே தலையிட்டு மடத்துத் தலைவி பிறப்பித்த மாற்றுதல் ஆணையை மாற்றி மீண்டும் கல்கத்தா என்டேலி மடத்துக்கே அன்னை தெரேசா திரும்பி வருவதற்கு ஆவன செய்தார். ஆயினும், முன்போல ஆட்சிப் பொறுப்பு எதுவும் அவருக்குத் தரப்படவில்லை.

இத்துணை இன்னல்களையும், எதிர்ப்புகளையும், ஏளனங்களையும் ஏற்றபோதிலும் தமது அறப்பணி இயக்கத்தைத் தொடங்கியே தீர வேண்டும் என்னும் அறப்போரில் அன்னை தெரேசா பின்வாங்கவே இல்லை. தமது குறிக் கோளை நிறைவேற்றுவதில் அழுத்தமான ஒரு பிடிவாதத் துடனேயே அவர் செயலாற்றினார்.

அவர் லொரேட்டோ கன்னியர் மடத்துக்கு வெளியே சென்று நலிவுற்ற மக்களுக்கு நற்பணி ஆற்ற எண்ணினாரே அன்றி, கிறித்தவ சமயநெறிக்குப் புறம்பாக நடக்க விரும்ப

வில்லை. பொதுமக்களிடம் கலந்து பழகும் நிலையிலேயே தமது அறப்பணி இயக்கத்தைச் சார்ந்தவர்கள் கட்டுப் பாடான துறவு வாழ்க்கைதான் வாழவேண்டும் என்று அவர் விதிகளை வகுத்திருந்தார். ஏனைய கன்னியர் மடங் கள் எத்தகைய ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிக் கின்றனவோ அவ்வாறே அறப்பணி இயக்கமும் இயங்க வேண்டும். அன்றியும், அந்த மடங்களைப்போல மக்களை விட்டுத் தனிமைப்படுத்திக்கொள்ளாமல் மக்களின் நடுவி லேயே உற்றுழி உதவிபுரிவதையே கடமையாக மேற்கொள்ள வேண்டும். இதுவே அன்னை தெரேசா தொடங்கவிழைந்த இயக்கத்தின் தனிச்சிறப்பான கோட்பாடு ஆகும்.

இந்த உயிர்நாடியான கொள்கையை மேலிடங்களில் உள்ள சமயத் தலைவர்களுக்கு விளங்கவைப்பதற்கே அவருக்குப் பெரும்பாடாக இருந்தது. அதற்காக அவர் மும்முனை அறப்போரில் இறங்க நேர்ந்தது. அவ்வாறு இறங்குமாறு தூண்டியவரும் தவத்திரு. வேன் அவர்களே. அவரது அறிவுரைப்படி மூன்று பெரியவர்களின் ஒப்புதலை வேண்டி அன்னை தெரேசா மூன்று விண்ணப்பங்களைத் தனித்தனியே அனுப்பிவைத்தார்.

உலகம் முழுமையிலும் உறையும் கத்தோலிக்க சமயத்தவர் அனைவருக்கும் பெருந்தலைவராக உரோமாபுரியில் உள்ள மேதகு போப் அவர்களுக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பப் பட்டது. அயர்லாந்து நாட்டின் தலைநகரான டப்ளின் நகரில்தான் பல்வேறு நாடுகளிலும் இயங்கும் லொரேட்டோ கன்னியர் மடங்களின் தலைமைப் பீடம் இருக்கிறது. அதன் தலைவிக்கும் ஒரு விண்ணப்பம் அனுப்பப்பட்டது. கல்கத்தா பெரிய சமய குரு தவத்திரு. பெரியர் அவர்களிடம் இன் னொரு விண்ணப்பம் அளிக்கப்பட்டது.

இவ்வாறு இடையறாத முயற்சிகளை மேற்கொண்ட போதிலும் எந்தப் பலனும் விளைவதாகத் தெரியவில்லை. 'பருவத்தால் அன்றிப் பழா' என்பது அவ்வைப் பாட்டியின் அமுத மொழி. அப்படித்தான் தமது கனவு நனவாகும்

காலம் கனிவதற்காக அவர் ஆண்டுக்கனக்கில் காத்திருக்க நேர்ந்தது.

எனினும், தாம் வகுத்துக்கொண்டுள்ள வாழ்க்கைப் பயணத்தின் குறுக்கே வரும் தடைகள் அனைத்தும் தகர்ந்து விடும் என்னும் தன்னம்பிக்கையுடனேயே அவர் நெஞ்சந் தளராமல் நிமிர்ந்து நடந்தார்.

# 5. தொண்டின் தொடக்கம்

'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்'

என்பது திருவள்ளுவரின் தீந்தமிழ் வாக்கு. இடையறாது முயன்று ஊக்கத்துடன் உழைப்பவர்கள் தங்கள் குறிக் கோளை அடைவதில் வெற்றியே காண்பார்கள்; தலைவிதி எனச் சொல்லத்தக்க நகர்த்தமுடியாத தடைக்கற்களைக் கூடத் தங்களுக்குப் பயன்தரும் வகையில் அவர்கள் திருப்பி வைத்துக்கொள்வார்கள்; இதுவே வள்ளுவர் வாய்மொழியின் உட்கருத்தாகும்.

அவரது அமுதத் தமிழ்வாக்கினை மெய்ப்பிப்பதைப் போலவே அன்னை தெரேசாவின் அறப்பணி முயற்சியும் வெற்றிக் கனியை எட்டிப் பறிக்கும் நாள் விரைந்து வந்து கொண்டிருந்தது. 'தலைவிதிக்கு' நிகரானதே கன்னியர் மடத்துத் துறவிப் பெண்கள் வெளியில் தொண்டாற்றக் கூடாது என்னும் விதிமுறை. அதையே மாற்றக்கூடிய ஆற்றலைக் கொண்டதாக அன்னை தெரேசா போப்பாண்ட வருக்கு அனுப்பிய விண்ணப்பம் அமைந்துவிட்டது.

1948ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் முதல் வாரத்தில் தான் அந்த நல்ல செய்தி உரோமாபுரியிலிருந்து வந்தது. போப்பாண்டவரிடமிருந்து அந்த ஒப்புதல் கடிதம் தம் கைக்கு வந்து சேர்ந்ததும் அன்னை தெரேசாவின் ஆத்ம குருவான தவத்திரு. வேன் அவர்களுக்குக் கல்கத்தா பெரிய சமயகுரு தவத்திரு. பெரியர் தம்மைக் காணுமாறு அழைப்பு அனுப்பி னார்.

அவர் தம்மைச் சந்தித்ததும், "வேன், தெரேசா நினைத்தது நடந்துவிட்டது; நீங்களே ஆணையைச் செயற்படுத்துங்கள்," என்றார்.

பெரிய சமய குருவின் குரலிலே வழிந்த மகிழ்ச்சிப் பெருக்கைக் கேட்டு வேன் அவர்கள் மிக்க வியப்பெய்தினார். அன்னை தெரேசாவின் வேண்டுகோள் வெற்றி பெற்றதில் இந்த அளவு அவர் பூரிப்படைவார் என்று வேன் அவர்கள் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில், முதன்முதலில் அறப்பணி இயக்கம்பற்றி 1947ஆம் ஆண்டு சனவரித் திங்களில் பேச்சைத் தொடங்கியபோது பெரிய சமய குரு எவ்வாறெல்லாம் எதிர்ப்புத் தெரிவித்தார் என்பது வேன் அவர்களின் நெஞ்சத் திரையில் நிழலாடிக்கொண்டேயிருந்தது.

''வேன், இவையெல்லாம் என்ன? வடிகட்டின முட்டாள் தனம் . . . தெரேசாவை அடிநாளிலிருந்தே நான் அறிவேன்; ஒரு மெழுகுவத்தியை ஏற்றக்கூடத் தெம்பு இல்லாதவள்; அவள் கேட்டதைச் செய்து முடிக்க அவளுக்குத் தகுதியில்லை,'' என்றெல்லாம் பொரிந்து தள்ளியவரே அப்பெரிய சமய குரு.

ஆனால், போப்பாண்டவருடைய ஒப்புதல் கிட்டியதும் அவரது உள்ளத்தினுள்ளே அன்னை தெரேசாவிடம் கொண்டிருந்த பரிவுப்புனல் அணையுடைந்த வெள்ளமாகப் பெருக்கெடுத்துப் பாய்ந்தது. அன்னை தெரேசாவின் திட்டத்துக்குப் போப்பாண்டவரின் ஒப்புதல் கிட்டியதில் பெரிய சமய குரு பெரியருக்கும் ஒரு சிறப்பான பங்கு உண்டு. தொடக்கத்திலே அவர் எதிர்த்தபோதிலும், பின்னாளில் உரோமாபுரிக்குச் சென்றபோது, அங்குள்ள இயேசு திருச்சபைத் தலைவரையும், கிரகோரியன் பல்கலைக் கழகப் பேராசிரியர்களையும் சந்தித்து அன்னை தெரேசாவின் இயக்கம்பற்றிய கருத்துகளை முதலில் எட்டுமாறு செய்தவர் அவரே; பிறகு உரோமாபுரியில் உள்ள போப்பாண்டவருக்கு விண்ணப்பம் அனுப்பிவைக்க மனம் உவந்து அன்னை தெரேசாவுக்கு இசைவு அளித்தவரும் அவரே. எனவேதான், அறப்பணித் திட்டத்துக்கு ஒப்புதல் கிட்டியதும் அவரும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்.

ஆயினும், வேன் அவர்களிடம் ஒப்புதல் கடிதத்தை ஒப்படைத்த பெரிய சமய குரு பெரியர், ''உடனடி

யாக இந்த நற்செய்தியைத் தெரேசாவிடம் தெரிவிக்க வேண்டும் என்னும் உங்கள் ஆர்வம் எனக்குப் புரிகிறது; ஆனால், இப்போது அவரிடம் போகவேண்டா; பள்ளி நாளில் வீணாக அங்கே பரபரப்பு ஏற்பட்டுவிடும். வரும் ஞாயிற்றுக்கிழமையே அவரைப் போய்ப் பாருங்கள்,'' என்னும் ஓர் எச்சரிக்கையும் விடுத்து அனுப்பினார்.

அவரது அன்புக் கட்டளைப்படியே தவத்திரு. வேன் அவர்கள் அடுத்து வந்த ஞாயிற்றுக்கிழமையன்று காலை என்டேலியில் உள்ள கன்னியர் மடத்துக்குச் சென்றார். அங்குள்ள வரவேற்பு அறையில் காலை உணவு அருந்தும் போது அன்னை தெரேசா அவரைக் காண வந்தார். எதிரே இருந்த மேசையில் கிடந்த நீண்ட உறையைக் கண்டதும் அது போப்பாண்டவரிடமிருந்து வந்ததுதான் என்பது அவருக்குப் புரிந்துவிட்டது.

கடற்பரப்புக்கு மேலே முழு நிலவு மெல்லத் தலையெடுக்கும்போது, கடலிலும் அதனை அடுத்த நிலத்திலும் இருள் விலகி வெளிச்சம் படருவதுபோலப் போப்பாண்டவரின் ஒப்புதல் கடித உறையைக் கண்டதும் அன்னை தெரேசாவின் அருள் முகத்தில் ஒரு தனி மலர்ச்சி மென்மையாக இழைந்தது. எனினும், எந்தவகையான ஆர்வப் பரபரப்பையும் வெளிக்காட்டாமல் அவர் வழிபாட்டுக் கூடத்தை நோக்கி நடந்தார்.

பரம்பொருளை எண்ணித் தொழுதுவிட்டுத் திரும்பிய அவர் வேன் அவர்கள் நீட்டிய உறையிலிருந்த கடிதத்தைப் படித்தார். தமக்கு வெற்றிச் செய்தியை ஏந்தி வந்த அம்மடலை அவர் அடக்கமாகவே படித்தார். தமது நீண்டநாள் கனவை நனவாக்கும் அந்த அரிய செய்தியை அவர் அமைதியாகவே ஏற்றுக்கொண்டார்.

ஆயினும், கடிதத்தைப் படித்துவிட்டு நிமிர்ந்த அன்னை தெரேசா, தமது அறப்பணி ஆர்வத்தை அடக்க முடியாதவராக வேன் அவர்களை நோக்கி விடுத்த முதல் வினா என்ன தெரியுமா?

''அப்படியானால் நான் இப்போதே சேரிக்குச் செல்லலாம் அன்றோ?''

இந்தச் சொற்களைக் கேட்டதும் வேன் அவர்களின் உள்ளம் புல்லரித்தது; உடலும் சிலிர்த்தது. அன்னை தெரேசாவின் அடிமனத்தில் இரக்கம் என்னும் நீரோட்டம் எவ்வளவு விரைவாகப் பெருக்கெடுத்துப் பாய்ந்துகொண்டிருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டதால் ஏற்பட்ட புல்லரிப்பே அது.

எனினும், எதையுமே அமைதியாகச் செய்து பழக்கப்பட்ட வேன் அவர்கள், அன்னை தெரேசா அடுத்து ஆற்றவேண்டிய கடமைகளை முறைப்படி நினைவுறுத்தத் தவறவில்லை.

''லொரேட்டோ கன்னியர் மடத்தைவிட்டு வெளியேறித் தனியாக ஓர் இயக்கத்தை நீங்கள் தோற்றுவிக்கப்போகிறீர்கள். என்றாலும், நீங்கள் பெரிய சமய குருவின் நேரிடை அதிகாரத்துக்கு உட்பட்டவர் தாமே? அவருடைய விருப்பம் என்ன என்பதையும் நீங்கள் அறிந்துகொள்ளவேண்டாவா?''

வேன் அவர்களின் இந்த அறிவுரையை ஏற்று, அன்னை தெரேசா பெரிய சமயகுரு பெரியர் அவர்களைச் சந்திக்கச் சென்றார். தமது உளமார்ந்த வாழ்த்துகளை வழங்கிய அவ்வுயரிய சான்றோர் சில அரிய கருத்துகளையும் எடுத்துரைத்தார். பிணியாளர்களுக்குப் பணியாற்றும் பெருவேட்கை கொண்டுள்ள அன்னை தெரேசா ஓரளவு மருத்துவப் பயிற்சியும் பெறுவது சாலச் சிறந்தது என்று வலியுறுத்தினார்.

அது தக்க நேரத்தில் கூறப்பெற்ற தலைசிறந்த அறிவுரை என்பதில் ஐயம் இல்லை. அதனை ஏற்றுப் பாட்னா நகர் சென்று அன்னை தெரேசா பயிற்சி பெறவேண்டியவரானார்.

### பாட்னாப் பயணம்

இன்று பீகார் மாநிலத்தின் தலைநகராக விளங்கும் பாட்னா பண்டை நாளில் 'பாடலிபுத்திரம்' என்று வழங்கப்

பெற்றது. போரை வெறுத்துப் புத்தருடைய அறநெறியைப் பரப்புவதையே தமது குறிக்கோளாக ஏற்றுக்கொண்ட மாமன்னர் அசோகர் அப்பாடலிபுத்திரத்தையே அழகு மிகுந்த தலைநகரமாக ஆக்கி ஆண்டுவந்தார். அத்தகைய வரலாற்றுச் சிறப்பு மலிந்த பாட்னாவில் அமெரிக்க மருத்துவப் பணி இயக்கம் (American Medical Missionary) ஒன்று சீரிய முறையில் மருத்துவப் பயிற்சியளிக்கும் செய்தி கல்கத்தா வரை பரவியிருந்தது. அந்த இயக்கத்தவரிடம் பயிற்சி பெறுவதே ஏற்புடையது என்று அன்னையார் எண்ணினார். எனவே, அறநெறி பரப்பிய அசோகரின் தலைநகராகிய பாட்னாவை நோக்கி அதே அறம் தழுவிய அருட்பணியாற்றும் நோக்குடைய அன்னை தெரேசா மருத்துவப் பயிற்சி பெறுவதற்குப் புறப்பட்டதும் ஒருவகையில் பொருத்தமுடைய செயலே.

அவர் இவ்வாறு பாட்னாவுக்குப் பயிற்சிபெறச் செல்வதே அவரது அறப்பணி இயக்க மாளிகைக்கு அடிக்கல் நாட்டியதாகத்தான் பொருள்படும். எனவே, அதுமுதல் லொரேட்டோ கன்னியர் மடத்துக்கும் அவருக்கும் இருந்து வந்த தொடர்பும் துண்டிக்கப்பட்டுவிடும் என்பது சொல்லாமலே விளங்கும்.

அன்னை தெரேசா தங்களைவிட்டுப் பிரிந்துவிடப் போகிறார் என்னும் செய்தியை அறிந்ததும் அந்தக் கன்னியர் மடத்தில் வருந்தாத தோழியரே இலர். அவர்களுக்கெல்லாம் ஆறுதல் அளிக்கும் வகையில் அந்த மடத்தின் தலைவி,

'போற்றவும் வேண்டா;
தூற்றவும் வேண்டா;
தொழுகை புரியுங்கள்'

என்று அறிவிப்புப் பலகையில் எழுதிவைக்க ஏற்பாடு செய்தார்.

அங்கிருந்த அத்தனை கன்னித் துறவியரிலும் அன்னை தெரேசா விலகப்போவதை அறிந்து ஆறாத் துயர் அடைந்து அழுது புலம்பியவர் அன்னை சினடே என்பவரே. முன்னர்

என்டேலி தூய மேரி உயர்நிலைப்பள்ளி முதல்வராக அன்னை தெரேசா உயர்த்தப்பெற்றபோது அவரை உச்சி மோந்து நெற்றியில் முத்தம் இட்டாரே, அதே ஆருயிர்த் தோழி அன்னை சினடேதாம் இப்போதும் பிரிவைத் தாங்காமல் பெரிதும் அரற்றினார்.

'அன்னை தெரேசா இந்தக் கன்னியர் மடத்தைவிட்டும் இந்தப் பள்ளியைவிட்டும் போகப்போகிறார் என்பதை என்னால் நம்பமுடியவில்லையே! பெருத்த அதிர்ச்சியாக இருக்கிறதே! எனது வலக்கையே முரிந்துவிட்டதுபோல் தோன்றுகிறதே! தெரேசாவின் உடல்நிலை பற்றியும் எனக்குத் தெளிவாகத் தெரியும்; அவரால் ஒரு சிறிய துன்பத்தைக்கூடத் தாங்கமுடியாதே! வேண்டுமானால் தமது நோக்கங்களை அவர் கனவாகத்தான் காணமுடியுமே தவிர அவற்றைச் செயலாக்கும் திறமை அவரிடம் சிறிதும் இல்லை. எனக்கும் வயதாகிவிட்டது. அவர் இல்லாமல் இந்தப் பள்ளியே வெறிச்சோடிப் போய்விடுமே!' என்றெல்லாம் அந்த மூதாட்டியார் ஒரு சிறுமியைப் போன்று தேம்பித் தேம்பி அழுதார்.

அவருக்குத் தேறுதல் கூறி அழுகையை அடக்குவது தவத் திரு. வேன் அவர்களுக்கே பெரும்பாடாக இருந்தது.

### அன்னையின் அறப்புரட்சி

1948ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 10ஆம் நாள் அன்னை தெரேசாவின் வாழ்க்கைப் பாதையில் மேலும் ஒரு திருப்பு முனை நாள்.

அதுகாறும் ஏனைய மேல்நாட்டுக் கன்னித் துறவியரைப் போலவே அவர் ஆடை அணிந்துவந்தார். ஆனால், அன்று முதல் ஓர் ஏழை வங்காளப் பெண்ணைப்போலவே சேலை உடுத்துக்கொள்ளத் தொடங்கினார். அதனையும் அறப் பணி இயக்கத்தின் மிக மிக மலிவான உடையாக வரையறுத்து ஏற்றுக்கொண்டார். நீலநிறக் கரைபோட்ட வெள்ளைச் சேலையே அவர் தேர்ந்தெடுத்துக்கொண்ட

எளிய ஆடை. முழுக்கைச் சட்டையுடன் அந்தப் புடைவை யினால் உடல் முழுவதையும் மூடி உடுத்துக்கொண்டு முகம் மட்டுமே தெரியும்படி நெற்றிவரை தலையிலே முக்கா டிட்டு நின்றார். அவரது எளிமைக்கோலம் இந்தியப் பண் பாட்டின் எழிலோவியமாகவே காட்சியளித்தது.

முதன் முதலில் அமைதியும் எளிமையும் தவமும் அந்த வங்காளச் சேலைக் கோலத்திலே அவரைக் கண்ட கன்னியர் மடத்துத் தோழியர் மூக்கிலே விரல்வைத்து வியப்புக் கடலில் மூழ்கினர். குறிப்பாகத் தவத்திரு. வேன் அவர்கள் அவரது இந்திய உடையைக் கண்டு திகைத்து நின்றார்.

எல்லாவற்றுக்கும் வழிகாட்டியான அவர், பாட்னா மருத்துவப் பயிற்சிக்கும் அவரை வழியனுப்பிவைக்க வந்திருந்தார்.

அன்னை தெரேசாவுக்கோ அன்று லொரேட்டோ கன்னியர் மடத்துக்கு விடைகொடுத்துவிட்டு வெளியேறுவது சொல் லொணாத மனச்சுமையையே கொடுத்தது. அஃது ஏறத் தாழ இருபது ஆண்டுகள்வரை உண்டு, உறங்கி ஒன்றிக் கிடந்த புகலிடம் அன்றோ? அங்குள்ள சாளரத்தின் வழியா கத்தானே அருகில் உள்ள 'மோத்தி ஜில்' சேரிப் பகுதியின் அவலங்களை அவரால் காண முடிந்தது? அந்தப் பரந்த சமுதாயப் பார்வைதானே அவருக்கு மடத்தைவிட்டு வெளிப் போந்து மக்களுக்குப் பணியாற்றும் அருட்கல்வியைப் புகட் டியது? கவுதம புத்தர் ஓர் அரசமரத்தின் அடியில்தான் 'உள்ளொளி' பெற்று நன்னெறியைப் பரப்பப் புறப்பட்டார் என்பர். அன்னைதெரேசாவோ அந்தக்கன்னியர்மடத்தினுள் அமர்ந்தவண்ணமேதான் 'மோத்தி ஜில்' சேரியைப் பார்த் துப் பார்த்து அறப்பணி ஆற்றும் 'உள்ளொளி'யை அடைந் திருக்கிறார். எனவே, தமக்கு நிழலாகப் புகலிடம் அளித்த கன்னியர் மடத்தை நீங்கிச் செல்வது அவரது நெஞ்சுக்குச் சுமையாகத் தோன்றியது இயற்கையே.

எனினும், மக்களோடு கலந்து பழகி அவர்களின் கண்ணீரிலும் கவலையிலும் பங்குபெறத் துடித்த அன்னை

தெரேசாவுக்கு மக்களிடமிருந்து ஒதுங்கித் தனிமைப் பட்டு நின்ற அந்த மடத்திலிருந்து வெளியேறுவதைத்தவிர வேறு வழியே இல்லை. இதற்கு முன்னர் மடத்தைச் சார்ந்த எந்தக் கன்னித் துறவியுமே இப்படி மக்கள் பணிக் காகத் தன்னை ஒப்படைத்துக்கொண்டு வீதியில் இறங்கியது இல்லை. எனவே, அந்த வகையிலும் அன்னை தெரேசாவின் செயலை ஓர் 'அறப்புரட்சி' என்றே சொல்லவேண்டும்.

அவ்வாறு புரட்சி புரிய ஆயத்தமாகி மடத்தின் வாயிலுக்கு வந்துவிட்ட அவரைத் தவத்திரு. வேன் அவர்கள் ஒரு வாடகை வண்டியில் தம்முடன் ஏற்றிக்கொண்டார். கல்கத்தாவில் உள்ள 'அவுரா தொடர்வண்டிச் சந்திப்புக்கு' (Howra Railway Junction) அழைத்துச் சென்றார். அங்குப் பாட்னா செல்லும் வண்டியில் ஏற்றி விடையும் கொடுத்தார்.

இப்படித்தான் அன்னை தெரேசாவின் அறப்பணிப் பயணம் முதன்முதலாகத் தொடங்கியது.

பாட்னா சென்று மூன்று திங்கள்கூட ஆகவில்லை; மருத் துவப் பயிற்சியில் தமக்குத் தேவையான தேர்ச்சியை அந்தக் குறுகிய காலத்திலேயே அன்னை தெரேசா அடைந்து விட்டார். 1948 அக்டோபர்த் திங்களில் வேன் அவர் களுக்குத் தீட்டிய மடலில் ''மருத்துவப் பயிற்சியை முடித்துக் கொண்டு வெளியே வருவதற்கு நான் ஆயத்தம் ஆகிவிட்டேன்,'' என்று அவர் குறிப்பிட்டிருந்தார்.

வேன் அவர்களால் முதலில் அச்செய்தியை நம்ப முடிய வில்லை. அச்சமயம் அரபிமொழி மாநாடு ஒன்றில் கலந்து கொள்வதற்காக அவர் பாட்னாவுக்குச் செல்ல நேர்ந்தது. அப்போது அன்னை தெரேசாவை அவர் சந்தித்தார். முதலில் அவரை அடையாளம் காணவே முடியவில்லை. ஏனெனில், வங்காளப் பெண்ணின் உடையில் இடப்பக்கத் தோளிலே புடைவை முன்றானை யோடு பிணைந்து சிலுவைக் குறி தொங்க அவர் காட்சியளித்தார். அவரது இந்திய எளிமைக்கோலம் கண்டு இதயம் பூரித்த வேன் அவர்கள், அவர் அடைந்துவரும்

தேர்ச்சியைப்பற்றி அவருக்குப் பயிற்சியளித்துவந்த மருத்துவரை நேரில் கண்டு வினவினார். மருத்துவம்பற்றி முன்னர் எதுவுமே அறிந்திராத அன்னை தெரேசா பின்னர் மருத்துவம் புரியும்போது தவறு ஏதும் செய்துவிடக்கூடாதே என்னும் தமது அக்கறையையும் அவர் வெளிப்படுத்தினார்.

ஆனால், அந்த மருத்துவரோ, "அன்னை தெரேசா போதிய அளவுக்குத் தேர்ச்சிபெற்றுவிட்டார்; எந்தத் தவறும் நிகழாது. துணிந்து அவரை மருத்துவம் செய்ய அனுப்பலாம்," என்று உறுதியாகவே கூறிவிட்டார்.

மருத்துவ வல்லுநரின் அந்த நற்சான்றுடன் பாட்னாவிலிருந்து அன்னை தெரேசா மூன்று திங்கள்கள் கழித்து கல்கத்தாவுக்குத் திரும்பினார்.

### 'கோமஸ்' இல்லத்தில் குடிபுகல்

*1948*ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் *21*ஆம் நாள் அன்னை தெரேசாவின் வாழ்க்கை வரலாற்றில் மேலும் ஒரு பொன்னேடு ஆகும்.

அன்றுதான் தமது அறப்பணியைத் தொடங்குவதற்காக முதன்முதலில் 'மோத்தி ஜில்' சேரியில் அவர் காலடி எடுத்துவைத்தார். அங்குள்ள ஒரு சிறு வீட்டில் பள்ளி ஒன்றை நிறுவினார். தொடக்கத்தில் இருபத்தொரு சேரிக் குழந்தைகளே அவரது சிறிய பள்ளியில் சேரவந்தார்கள்.

தீண்டத் தகாதவர்களாகப் புறக்கணிக்கப்பட்டுக் கிடந்த அந்தச் சேரி மக்களோ தங்களுடைய அழுக்கேறிய அருவருப்பான பகுதிக்கு வந்துள்ள புதிய அன்னையாரை வியப்போடு நோக்கினர். அவரது புன்சிரிப்புத் தவழும் முகமும், புத்தொளி வீசும் விழிகளும், எளிமையான உடையும் 'மோத்தி ஜில்' சேரியில் வாழும் மக்களைக் காந்தம் போல் கவர்ந்தன. அவரிடம் கல்வி கற்பதற்குத் தங்கள் குழந்தைகளை ஆர்வத்துடன் அனுப்பி வைத்தனர்.

அந்நாளைய தமது தொண்டின் தொடக்கம்பற்றித் தமது நாட்குறிப்பில் அன்னை தெரேசா,

'இந்தச் சேரிக் குழந்தைகள் ஏழ்மையின் மொத்த உருவங்கள். அவர்களைக் குளிப்பாட்டித் தூய்மை செய் தேன்; உடல்நல வழிமுறைகளைக் கற்றுக்கொடுத் தேன்; தரையையே கரும்பலகையாகப் பயன்படுத்தி னேன்; ஓய்வு நேரங்களில் நோய்வாய்ப்பட்டவர்களைச் சந்தித்தேன்'

என்று எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

எத்துணை எளிய முறையில் தமது இரக்கப் பணிகளை ஏழைகளுக்கு ஆற்றத் தொடங்கினார் அன்னை தெரேசா என்பதற்கு இந்த நாட்குறிப்பு வரிகளே நனி சிறந்த சான் றாகும்.

முதல் இரண்டு திங்கள் அவருக்கு எந்தத் துணையுமே இல்லை; தனிமையாகவே அவர் துணிவோடு தொண்டுபுரிய முற்பட்டார். நாளாக நாளாகக் கல்வி கற்க வரும் பிள்ளை களின் எண்ணிக்கை பெருகியவண்ணமே இருந்தது. அவர்கள் அத்தனை பேருக்கும் அவர் பள்ளி நடத்தும் இடம் போது மானதாக இல்லை. எனவே, ஒரு சிறிய வீடாவது தேவை என்பதை அவர் உணர்ந்தார். அதற்காக அவர் பல இடங் களில் கால்கடுக்க வீடுதேடி அலைந்தார். ஒடுக்கப்பட்ட சேரிக் குழந்தைகள் ஒதுங்கி நிற்பதற்கு நிழல்பொழியும் தனிமரமாகப் பணிபுரிய வந்தவர் அன்னை தெரேசா; அவரே ஒதுங்கி நின்று பள்ளி நடத்துவதற்கு ஒரு வீடும் கிடைக்கவில்லை.

அப்போதும் தவத்திரு. வேன் அவர்களே அவரது அலைச்ச லுக்கு முடிவு கட்டி உதவிபுரிய முன்வந்தார். அவருக்கு அறிமுகமான குடும்பத்தினர் கல்கத்தா நகரில் உள்ள கிரீக் சந்து என்னும் பகுதியில் வாழ்ந்துவந்தனர். அக் குடும்பத் தைச் சார்ந்த ஆல்பர்ட் கோமஸ், மைக்கேல் கோமஸ் என்னும் அண்ணன், தம்பி இருவருக்கும் வேன் அவர்களிடம் அளவுகடந்த மதிப்பு உண்டு. அவர்களுக்கு அன்னை தெரேசா

விடம் நேர்முகமான பழக்கம் இல்லையென்றாலும் ஆல்பர்ட் கோமஸின் மூத்த மகள் அவர் முதல்வராக முன்னர்ப் பணி யாற்றிய என்டேலி உயர்நிலைப்பள்ளியில் படித்துக்கொண் டிருந்தாள். சேரிக்குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கவும் தாம் குடியிருக்கவும் அன்னை தெரேசா வீடு தேடி அலைந்துகொண் டிருந்த சமயத்தில் அந்தக் கோமஸ் உடன்பிறப்புகளின் அன்னையார் மிகவும் உடல்நலம் கெட்டுப் படுக்கையில் விழுந்துவிட்டார்; அவருக்காக வழிபாடு புரிவதற்கு அவர் களது வீட்டுக்குத் தவத்திரு. வேன் வந்திருந்தார். அவர் ஆல்பர்ட் கோமஸிடம் அன்னை தெரேசாவின் புதிய இயக்கம்பற்றிக் கூறி, "அவருக்கு ஒரு சிறிய வீடு பார்த்துத்தர முடியுமா?" என்று கேட்டார். ஆல்பர்ட் கோமஸோ தமது இல்லத்தின் மாடிப் பகுதியை உடனே ஒதுக்கித் தருவதாக ஒப்புக்கொண்டார்.

அடுத்த நாளே கிரீக் சந்திலுள்ள அந்த வீட்டின் மாடியில் அன்னை தெரேசா குடியேறினார். அப்போது அங்கே ஒரு மேசையும் நாற்காலியும் மட்டுமே கிடந்தன. அவற்றைச் சுட்டிக்காட்டிய வேன் அவர்கள், "இந்த வசதிகள் போதுமா?" என்று கேட்டார். அதற்கு அன்னை தெரேசாவோ, "வசதி யுடன் வாழ்வதற்காக நான் இங்கு வரவில்லையே!" என்று தயக்கம் இன்றிச் சொல்லிவிட்டார்.

வசதிகள் நிறைந்த பகட்டான வாழ்வையே பெரிதாக மதிக்கும் மக்களிடையே வசதிகளைப்பற்றி எள்ளளவுகூட எண்ணாமல் அன்னை தெரேசா அந்த வீட்டில் தமது தொண்டு வாழ்வைத் தொடங்கினார்.

அப்போது அவருக்குத் துணையாக சருத்மா என்னும் பணிப்பெண் மட்டுமே வந்திருந்தார். தூய மரியன்னைப் பள்ளியில் அன்னை முதல்வராக இருந்தபோது அங்கே சருத்மாவும் பணியாற்றினார்; இப்போது அன்னையுடன் வந்துவிட்டார். அவர் கணவனை இழந்துவிட்ட கைம் பெண் என்பது குறிப்பிடத்தக்கது.

1949ஆம் ஆண்டு பிப்ரவரியில்தான் கோமஸ் உடன் பிறப்பாளரின் இல்லத்தில் அன்னை குடியேறினார்.

அதற்கு இரண்டு திங்கள்களுக்கு முன்னரே 1948 டிசம்பர் மாதத்தில் இன்னொரு சிறந்த நடவடிக்கையையும் அவர் மேற்கொண்டார். 'மோத்தி ஜில்' சேரியில் அவர் தமது பள்ளியை நிறுவியபின் அடுத்து நிறைவேறிய நிகழ்ச்சியாகும் அது. யுகோஸ்லேவிய நாட்டைச்சார்ந்த அல்பேனியப் பெண்ணான அவர், இந்தியக் குடிமகளாக (Indian Citizen) வும் தம்மைப் பதிவுசெய்துகொண்டார்.

'உரோமாபுரி நாட்டில் உள்ளபோது உரோமானியனாகவே நடந்துகொள்' என்பது ஒரு முதுமொழி. அன்னை தெரேசாவும் அவ்வாறே இந்தியக் குடிமகளாகத் தம்மை ஆக்கிக்கொண்டுவிட்டார்.

இந்திய நாட்டின்பால் ஈடுபாடுகொண்டு இங்குவந்து, இந்திய மக்களுக்கு உழைப்பதற்கு உறுதிபூண்டு, இந்திய மொழியான வங்காள மொழியிலும் ஓரளவு தேர்ச்சிபெற்று, இந்திய உடையையே உவப்போடு உடுத்துக்கொண்ட அன்னை தெரேசா இந்தியராகவே மாறிவிட்டார். அவர் அவ்வாறு மாறியதால் நம் இந்திய நாட்டுக்கே எல்லையில்லாத பெருமை ஏற்பட்டிருக்கிறது.

# 6. பிணியாளரின் பெருந்துணை

'கூடித் தொழில் செய்தால்
கோடி நன்மை பெறலாம்'

என்பது ஆன்றோர் வாக்கு. ஒற்றை ஆளாக ஒரு திட்டத்தைச் செயற்படுத்துவதைவிடப் பலரும் கூடி அதை நிறைவேற்றுவதனால் பயனும் நிரம்ப உண்டு; காலமும் மிச்சமாகும்; அதனை எளிதாகவும் முடித்துவிடலாம். தனி மனிதராக நின்று ஒருவர் வீட்டைக் கட்டுவதைவிடப் பலரும் கூடிக் கட்டும்போது அந்தக் கட்டடம் விரைவாகவும், எளிதாகவும், அழகுள்ளதாகவும் எழும்பிவிடுகிறது.

அவ்வாறே அன்னை தெரேசாவும் பலருடைய துணையோடும் தம் இயக்கத்தை வளர்க்க எண்ணினார். அன்றியும் உலக இன்பங்களையெல்லாம் முற்றிலும் துறந்துவிட்டு உருக்குலைந்து வாடும் ஏழை மக்களுக்கு உழைப்பதற்கென்றே முழுமூச்சாகத் தங்களை ஒப்படைத்துக் கொள்ளக்கூடிய கன்னித் துறவியரையே தமது இயக்க மாளிகையின் தூண்களாகத் தேர்ந்தெடுக்க முடிவுசெய்தார். அதற்காகப் பல கடுமையான கட்டுப்பாடுகளை அவர் வரையறுத்தார். அவற்றையெல்லாம் உளமார ஒப்புக்கொண்டு கடைப்பிடிக்கக்கூடிய உண்மையான உழைக்கும் பெண்களுக்கே தம்மோடு உடன் உறைந்து பணியாற்றுவதற்கு இசைவு தந்தார்.

'மோத்தி ஜில்' சேரியில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் குழந்தைகளுக்கு அன்னை தெரேசா கல்விச் செல்வம் அளித்துவரும் அருட்செயல் கல்கத்தா மாநகர் எங்கும் மெல்லப் பரவத் தொடங்கிற்று; அது பலரது உள்ளத்தையும் கவர்ந்து மகிழ்வித்தது. அவரைப்போன்றே தொண்டு புரியும் ஆர்வத் துடிப்பையும் சில இளங்கன்னியரின் இதயப் புலத்திலும் அது தூவிவிட்டது.

அவ்வாறு அன்னை தெரேசாவின் சீரிய தியாகத்தொண்டில் சிந்தையைப் பறிகொடுத்த நங்கை ஒருவர் கிரீக் சந்தில் உள்ள கோமஸ் உடன்பிறப்பாளர் இல்லத்தைத் தேடிக் கொண்டு வந்தார்; மாடிக்குச் சென்றார்; குறிப்பிட்ட அறைக் கதவைத் தட்டினார். ஓசையைக் கேட்ட அன்னை தெரேசா கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தார். தம் எதிரே நிற்கும் மெலிந்த உருவைக் கண்டதும் அவர் விழிகள் வியப்பினால் விரிந்தன. வந்திருப்பவர் தம்முடைய பழைய மாணவியருள் ஒருவரான சுபாஷிணிதாஸ் என்னும் வங்காளப் பெண்தான் என்று அவர் உடனே அடையாளங் கண்டு அறிந்துகொண்டார். ஓர் இந்துக் குடும்பத்தைச் சார்ந்த பெண் எதற்காக இத்துணை தொலைவு தம்மைத் தேடிக்கொண்டு வரவேண்டும் என்னும் திகைப்பு அவருக்கு ஏற்பட்டது.

சுபாஷிணிதாஸோ தாம் வந்துள்ள நோக்கத்தை உடனே வெளிப்படுத்திவிட்டார். ''அன்னையே, உங்களுடன் சேர்ந்து பணியாற்றவே நான் வந்திருக்கிறேன்,'' என்று உறுதியான குரலில் அவர் உரைத்தார். அவர் இங்ஙனம் கூறியதும், ''அதற்கென்ன வந்துவிடு'' என்று அன்னை தெரேசா ஏற்றுக்கொண்டுவிடவில்லை. தம் இயக்கத்தில் பங்குபெற விழைகின்றவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய கடுமையான விதிமுறைகளையெல்லாம் சுருக்கமாகச் சுட்டிக்காட்டினார். பின்னர்,

'இரக்கப் பணி ஆற்றும் இவ்வாழ்க்கை மிகவும் கடினமானது; இதன் துன்பங்களைச் சுமப்பதற்குரிய தெம்பு உனக்கு உண்டா?' என்றும் எச்சரித்தார்.

இந்த வினாவைக் கேட்டதும் சுபாஷிணிதாஸ் அஞ்சி நடுங்கவில்லை; தாம் மேற்கொண்டுவந்த முடிவில் அழுத்தமானவராகி, ''உங்கள் இயக்கத்தில் ஈடுபடுபவரின் வாழ்க்கை மிகவும் கடினமானது என்பதை நான் உணர்வேன். எனினும், எந்த இன்னலையும் ஏற்பதற்கு ஆயத்தமாகவே வந்திருக்கிறேன்'' என்றார். அவரது உள்ளத் திண்மை அன்னை தெரேசாவுக்கு அளவில்லாத உவகையை அளித்தது.

தம்மை முழுமையாக நம்பித் தமது இயக்கத்தை மதித்துத் தம்மைப்போலவே ஏழை மக்களுக்கு உழைப்பதற்குத் துணிந்து முன்வந்துள்ள சுபாஷிணிதாஸை நன்றிப் பெருக்கோடு அன்னை தெரேசா தம் அறையினுள் அழைத்துச் சென்றார். அவர்மீது தமக்குள்ள எல்லையற்ற அன்புக்கு எடுத்துக்காட்டாகத் தாம் இளமைப் பருவத்தில் எந்தப் பெயரால் அழைக்கப்பெற்றாரோ அதே 'அக்னஸ்' என்னும் புதுப்பெயரை அவருக்குச் சூட்டினார். அன்று முதல் வங்காளப் பெண்ணான சுபாஷிணிதாஸ், 'சகோதரி அக்னஸ்' என அழைக்கப்பெற்றார்.

தனித்த ஆளாக நின்று இந்த அறப்பணி இயக்கத்தை எவ்வாறு உருவாக்கி வளர்க்கப்போகிறோம் என உள்ளூர எண்ணிக்கொண்டிருந்த அன்னை தெரேசாவுக்கு சுபாஷிணி தாஸின் வருகை புதிய ஊக்கத்தையும் நம்பிக்கையையும் ஊட்டியது. சகோதரி அக்னஸ் ஆக மாறிவிட்ட அவரும் தமது தலைவியின் உள்ளக்கிடக்கையை முற்றிலும் உணர்ந்தவராக அறப்பணி இயக்க வளர்ச்சிக்கு ஆர்வத்தோடு உழைத்தார். ஏனைய கன்னித் துறவியருக்குரிய பயிற்சி இல்லத்தின் பொறுப்பையும், பின்னர்த் தலைமை இல்லத்தின் பொறுப்பையும் ஏற்கும் அளவுக்கு அவர் உயர்ந்தார். பிற்காலத்தில் அறப்பணி இயக்கத்தின் புதிய இல்லங்களை ஏற்படுத்துவதன்பொருட்டு அன்னை தெரேசா அயல் நாடுகளுக்குச் செல்லும்போதெல்லாம், அவர் மேற்கொண்டிருந்த அத்தனை பொறுப்புகளையும் இந்தியாவில் சுபாஷிணி தாஸே ஏற்று நடத்தினார். அந்த அளவுக்கு அவருடைய பணியின் செல்வாக்குப் படிப்படியாக வளர்ந்தவண்ணமே இருந்தது.

### ஏழைக்கு இலவசத் தொண்டு

1949ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில்தான் சுபாஷிணி தாஸ், அன்னை தெரேசாவிடம் சேர்ந்து 'சகோதரி அக்னஸ்' ஆனார். சில வாரங்களிலேயே வேறு சில பெண் மணிகளும் அவரைப்போன்றே அங்கு வந்து சேர்ந்தனர்.

இரண்டாவதாக வந்தவர் சகோதரி ஜொர்த் ரூத்; மூன்றாவதாக வந்தவர் டோராத்தி; நான்காவதாக வந்தவர் பங்களா தேசத்தைச் சார்ந்த மர்க்கரீத் மேரி என்பவர்.

இப்படி நாளடைவில் மிகப் பலரும் வந்து சேரச்சேர இயக்கம் விரிவாக வளரத் தொடங்கிற்று. பொதுவாக ஒருவரை வாழ்த்தும்போது 'ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோட வேண்டும்' எனக் கூறுவது தமிழ் நாட்டில் பன்னெடுங்காலமாக உள்ள ஒரு மரபு. அன்னை தெரேசாவின் இயக்கமும் ஆலமரம்போல் படர்ந்து தழைக்கும் பாங்கினைப் பெற்றது. அறுகம்புல்லைப்போல நிலைக்கும் வாய்ப்பினை எய்தியது. இந்நிலையில், இயக்கத்தை ஒரு பொது நிறுவனமாகப் பதிவு செய்வது இன்றியமையாதது என்று அன்னை தெரேசா எண்ணினார்.

அதற்குரிய சட்டதிட்டங்களையும் நடைமுறை ஒழுங்கு முறைகளையும் அவர் தொடக்க காலத்திலேயே வரைந்து வந்ததுபற்றி முன்னரே அறிந்திருக்கிறோம். அவற்றை மேலும் செப்பம் செய்து உயர்நீதி மன்றம் ஏற்கும் வகையில் வகுத்துக்கொடுத்தார். அந்த விதிமுறைகளை முதலில் கல்கத்தாப் பெரிய சமய குரு, பெரியரிடம் காட்டியபோது அவரே அயர்ந்து போனார். ஏனைய கிறித்தவக் கன்னியர் மடங்களில் கடைப்பிடிக்கும் விதிமுறைகளைவிட இன்னும் கடுமை கொண்டவையாகவே அன்னை தெரேசா அவற்றை வகுத்திருந்தார்.

'இந்த நாள்களில் இவையெல்லாம் ஒத்து வருமா?' என்னும் வினாவையும் எழுப்பினார். அவருக்குத் தக்கவாறு விடையிறுத்த அன்னையார் விதிமுறைகளின் கடுமையைக் குறைக்க உடன்படவில்லை.

தமது இயக்கத்துக்கு அறப்பணி இயக்கம் (Missionaries of Charity) என்னும் பெயரைச் சூட்டியவரும் அன்னை தெரேசாவே. இந்தப் பெயருக்கு மாற்றாக வேறொன்றைச் சூட்டலாமே என்று தவத்திரு. வேன் அவர்கள் கருத்துத் தெரிவித்தார். அதிலும் அன்னை தெரேசா விட்டுக்கொடுக்க

வில்லை; அறப்பணி இயக்கம் என்பதே தாம் ஆற்றப்போகும் பணிகளுக்குப் பொருத்தமான பெயர் என்பதில் அவர் உறுதியாக இருந்துவிட்டார்.

இறுதியில் அவரால் எழுதப்பெற்றுச் செப்பம் செய்யப் பெற்ற வடிவத்திலேயே அவரது இயக்கத்தின் சட்டதிட்டங்கள் தட்டெழுத்தில் அடிக்கப்பட்டு 1950ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 7ஆம் நாள் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் பதிவு முத்திரை பெற்றன.

அந்த விதிமுறைகளில் குறிப்பிடத்தக்க ஒன்று இயக்கத்தில் சேரும் கன்னித் துறவியர் எடுத்துக்கொள்ளவேண்டிய நோன்புகளின் உறுதிமொழிபற்றிய விதியாகும். லொரெட்டோ போன்ற ஏனைய கன்னியர் மடத்துத் துறவிப் பெண்டிர் மூன்று நோன்புகளைக் குறித்த உறுதிகளை ஏற்றுக்கொண்டாலே போதும். கற்பு, ஏழைமை, பணிவு ஆகிய இந்த மூன்று உறுதிப்பாடுகளைப்பற்றிய நோன்புகளோடு அன்னை தெரேசா நிற்கவில்லை; தமது இயக்கத்தில் பங்கு பெறும் கன்னித் துறவிகள் நான்காவதாக 'ஏழை மக்களுக்கு இலவசப் பணிபுரிதல்' என்னும் நோன்பு உறுதிப்பாட்டையும் எடுத்துக்கொள்ளவேண்டும் என்னும் விதியினையும் வகுத்தார். வேறு எந்தக் கிறித்தவ மடத்திலும் கடைப்பிடிக்கப்படாத நோன்பு உறுதிப்பாடாகும் அது.

'ஊதியம் இல்லாமலே ஏழைகளுக்கு உழைத்தல்' என்னும் இந்தத் தனிச் சிறப்பான நான்காவது நோன்பை மேற்கொள்வதில் ஓர் அடிப்படையான கோட்பாடு அமைந்துள்ளது. அந்த உறுதிப்பாட்டை எடுத்துக்கொண்டவர்கள் பணம் மிகுந்த செல்வர்களுக்கு உழைக்கவேண்டுவதில்லை; ஏழைகளுக்காக உழைக்கும்போது அதற்காகப் பணம் எதையும் ஊதியமாகப் பெறவும் கூடாது. இந்தக் கோட்பாட்டில் அன்னை தெரேசா தொடக்க காலத்திலிருந்தே ஆழ்ந்த தெளிவோடும் உறுதியோடும் செயலாற்றிவந்திருக்கிறார்.

'ஏழைகளுக்கு இலவச உழைப்பு' என்பதுதான் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்தின் உயிர்மூச்சுக் கொள்கை என்றாலும் மிகையில்லை.

**பணியாற்றத் தூண்டிய பிணியாளர்**

1950ஆம் ஆண்டில் அன்னை தெரேசாவின் இலட்சியப் பயணத்தில் ஒரு புதிய திருப்புமுனை ஏற்பட்டது. அது காறும் வாழ்ந்த ஏழைகளின் ஏற்றம்பற்றிய சிந்தனையிலேயே அவர் மூழ்கியிருந்தார்; அவர்களின் அறியாமை இருளை முதலில் அகற்றிக் கல்வி வெளிச்சத்தைப் பரப்புவதற்குரிய கடமைகளையே மேற்கொண்டிருந்தார்; இவ்வாறு வாழும் வறியவர்க்குத் துணை நின்றால்மட்டும் போதாது; சாகின்ற பிணியாளருக்கும் ஊன்றுகோலாய் உழைத்தே தீரவேண்டும் என்னும் எண்ணம் அந்த ஆண்டில்தான் அவர் மனத்தில் அழுத்தமாகப் பதிந்தது. அதற்கேற்ப நெஞ்சத்தை நெகிழ வைக்கும் நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

ஒருமுறை அன்னை தெரேசாவும், அவர் குடியிருந்த வீட்டுக்காரரான மிக்கேல் கோமஸூம் ஏதோ ஓர் அலுவலின் பொருட்டு 'டிராம் வண்டி'யில் ஏறுவதற்காக நின்றிருந் தார்கள். அந்த 'டிராம் நிறுத்தத்து'க்கு எதிரேயே அரசு மருத்துவமனை இருந்தது. இன்று 'நில்ரதன் அரசு மருத்துவ மனை' என்று வழங்கப்படும் அதற்கு அந்நாளில் 'காம்பெல் மருத்துவமனை' என்று பெயர். அதன் முகப்பில் நின்ற ஒரு பெரிய மரத்தடியில் சாலையோரமாகவே ஒரு நோயாளி முடங்கிக்கிடந்தான். அவனையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த அன்னை தெரேசா, ''கோமஸ், மிகப் பெரிய மருத்துவமனைக்கு வெளியேதான் அந்த நோயாளி விழுந்து கிடக்கிறான். ஆனால், எவருமே அவனைப்பற்றி அக்கறை கொள்ளவில்லையே!'' என்று மனம் வருந்திக் கேட்டார். அதற்குள் அவர்கள் செல்லவேண்டிய 'டிராம் வண்டி' வந்து விட்டது; எனவே, அந்த நோயாளியைப்பற்றிய பேச்சு தடைப்பட்டது.

இரண்டு மணி நேரம் கழித்து இருவரும் வீடு திரும்பினர். 'டிராம்' வண்டியை விட்டு இறங்கியவுடனேயே அன்னை தெரேசா கோமஸின் வீட்டில் அடிவைக்காமல் எதிரே உள்ள மருத்துவமனைப் பக்கமே திரும்பிப் பார்த்தார். அந்த

நோயாளி இன்னும் அந்த மரத்தடியிலேயே இறப்போடு போராடிக்கொண்டிருந்தான். அன்னை தெரேசா நேரே அவனிடம் சென்றார். எந்த நொடியிலும் உயிர் பிரியக்கூடிய நிலையில் அவனது உடல் துடித்துக்கொண்டிருந்தது. அதனைப் பார்த்ததும் அன்னை தெரேசாவின் கண்கள் கலங்கின. அந்தப் பிணியாளனை மருத்துவமனையில் சேர்த்துக்கொள்ளுமாறு அங்குள்ள அதிகாரிகளிடம் போய்க் கேட்டார். அவர்களோ மறுத்துவிட்டார்கள். அவர்களது போக்கு அவருக்கு வியப்பையும் துயரையும் கொடுத்தது.

'உயிர் பிழைக்கக்கூடியவர்களுக்குத்தான் மருத்துவம்; உயிரை இழக்கப்போகிறவர்களுக்கு மேலும் மருத்துவம் இல்லை என்பது எந்த வகையில் நீதியாகும்?' என்னும் உறுத்தல் அவரது மனத்திலே எழுந்தது. அவர் மருத்துவ மனையிலிருந்து வெளியே வந்து பார்த்தபோது அந்த மரத்தடி நோயாளி மரித்தே போனான். அந்த அவலக் காட்சியைக் கண்ணுற்ற அன்னை தெரேசாவால் அழுகையை அடக்கவே முடியவில்லை. தம் அருகில் நிற்கும் மைக்கேல் கோமஸிடம், ''. . . யாருக்குத் தெரியும்? இவன் இறப்ப தற்குமுன் ஒரு குவளை தண்ணீருக்குக்கூட ஏங்கியிருப்பான்; அதுகூடக் கிடைக்கவில்லையே என்று இவன் மனம் எப்படி யெல்லாம் துடித்திருக்கும்!'' என்று அவர் புலம்பினார். அவர் தம் கன்னமேடுகளில் கண்ணீர் அருவி பெருக்கெடுத்து வடிந்தவண்ணமே இருந்தது.

அடுத்த சில நொடிகளில் அவருடைய கண்களில் ஓர் உறுதி யும் புத்துணர்ச்சியும் பளிச்சிட்டன. அவருடைய உதடுகளி லிருந்து, ''கோமஸ், இந்த நோயாளிகள் அழகாக, அமைதி யாக் வாழத்தான் கொடுத்துவைக்கவில்லை; இவர்கள் அழகாக, அமைதியாக இறப்பதற்காவது நாம் வகை செய்யலாம் இல்லையா?'' என்னும் கருத்துமணிகள் உதிர்ந் தன.

சொன்ன அளவோடு அன்னை தெரேசா நின்றுவிட வில்லை; தம் எண்ணத்தை எவ்வாறு செயற்படுத்துவது

என்னும் சிந்தனையில் இறங்கிவிட்டார்; திட்டங்களையும் வகுக்க முற்பட்டார்.

'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்'

என்றார் திருவள்ளுவர். சிலர், 'நான் மலையையே மலர் ஆக்குவேன்; மழைச்சரத்தையே மணிச்சரம் ஆக்குவேன்!' என்றெல்லாம் தங்கள் அறிவுக்கும் ஆற்றலுக்கும் மீறிய முறையில் ஆரவாரமான வெற்றுச் சொற்களை வீசுவார்கள்; ஆனால், செயலளவில் பயனுள்ள எதையும் செய்து முடிக்க மாட்டார்கள். அத்தகைய வினைத்திட்பம் இல்லாத வீண் ஆரவாரக்காரர்களை இடித்துரைக்கும் வகையில்தான், மேற் கண்டவாறு வள்ளுவப் பெருந்தகை கூறியுள்ளார்.

அன்னை தெரேசாவோ வீண் பேச்சுக்காரர் அல்லர்; சொன்னபடி செய்துமுடிக்கும் தூய்மையான செயலாளர். எனவேதான், மைக்கேல் கோமஸ் அவர்களிடம் கூறியவாறே இறந்துகொண்டிருக்கும் நோயாளிகளுக்கு இரக்கத்தைப் பொழியும் செயல் முறைகளுக்குத் திட்டம் தீட்டினார். சாலை ஓரங்களில் சாவோடு போராடும் திக்கற்ற பிணி யாளர்களை எங்கே கண்டாலும் அவர்களைப் பரிவோடு அருகில் அமர்ந்து கண்காணிப்பதற்கு அவர் ஏற்பாடுகள் செய்தார்; அவர்களை எங்கேனும் கொண்டுவந்து சேர்த்து ஒரே இடத்தில் வைத்துக் காப்பதற்கு எண்ணினார். உடனே அதற்குத் தகுந்த வசதியுள்ள வீடு கிடைக்கவில்லை. எத்தனை நாள்கள் வெளியில் அலைந்தும் பலன் ஏதும் கிட்டாததால், கல்கத்தாவில் உள்ள தூய தெரேசா மாதா கோயிலுக்குச் சென்றார். அங்குள்ள சமய குருமார்களைச் சந்தித்து இறப்போரின் நலத்தைக் காக்க விரும்பும் தம் எண்ணத்தை வெளியிட்டார்; எங்காவது இடம் பார்த்துக் கொடுக்கும்படி கேட்டார். அங்கிருந்த சமய குருமார்கள் அந்த மாதா கோவில் அருகிலேயே ஒரு மூலையில் ஒரு சிறிய கட்டடத்தில் அங்கேயே தங்கிவிடாமல் வெளியிலிருந்து வந்து மருத்துவம் பெற்றுச்செல்லும் வகையில் ஒரு புறப்பிணியாளர்

மருந்தகம் வைத்துக்கொள்ள இசைவு தந்தார்கள். சில நாள் களிலேயே நோயாளிகள் அங்கே திரளாகக் கூடத் தலைப் பட்டார்கள்.

பிணியாளர்களுக்குப் பெருந்துணை புரியவேண்டும் என்று விழைந்த அன்னை தெரேசா வகுத்துக்கொண்ட திட்டத்தில் அந்த மருந்தகம் ஒரு சிறிய முயற்சிதான். அதைவிடப் பெரிய அளவில் ஏதேனும் செய்யவேண்டும் என்னும் பேரார்வம் அவரது உள்ளத்தினுள் கொழுந்துவிட்டுக்கொண்டே இருந் தது. இப்படி இறப்போர் நலனில் அவருக்கு ஆழமான ஈடுபாடு கொண்டதற்கு அவர் கண்ணாரக் கண்ட பல அவலக்காட்சிகளே காரணம் ஆகும்.

இது குறித்து அன்னை தெரேசாவே ஓர் இதழின் ஆசிரிய ரிடம் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார்: ''ஒருமுறை பெண் நோயாளி ஒருத்தி மருத்துவமனை ஒன்றின் எதிரே விழுந்து கிடப்பதைக் கண்டேன்; அவளது உடல் எங்கும் புண்கள் தென்பட்டன; எலிகள் அந்தப் புண்கொண்ட சதைகளைத் தின்றவண்ணம் இருந்தன; அந்த எலிகளை விரட்டியடித்து விட்டு அவள் இறக்கும்வரையில் நானே அருகில் இருந்து அவளைக் கவனித்துக்கொண்டேன்.''

இப்படித் தனித்தனியாக எத்தனை நோயாளிகளை அவர்மட்டுமே அருகிருந்து பேணிக் காக்கமுடியும்? எனவே, மிகப் பெரிய அளவில் 'இறப்போர் நல விடுதி' ஒன்றை ஏற்படுத்த அவர் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்.

# 7. இறப்போர் நல இல்லம்

கல்கத்தா மாநகரின் தென்பகுதியில் புகழ்பெற்ற காளி கோயில் ஒன்று இருக்கிறது; அஃது அமைந்துள்ள பகுதிக்குக் ‘காளி கட்டம்’ என்று பெயர். அடியார்கள் நாள்தோறும் நூற்றுக்கணக்கில் அங்கே வந்து காளி தேவியை வணங்கிச் செல்கிறார்கள். அந்த ஆலயத்தில் உள்ள பூசாரிகளின் எண்ணிக்கையே நானூற்றுக்கும் மேற்பட்டதாகும்.

இந்தியாவின் பெருமையை அமெரிக்கப் பெருநாட்டில் முதன் முதலில் சென்று பரப்பியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் விவேகானந்த அடிகள். அவருக்கு வழிகாட்டியாக விளங்கிய இராமகிருட்டின பரமஅம்சர், ஆழ்ந்த சமயப்பற்றும், மிக அழகிய உவமை நயங்களோடு கருத்துகளை வெளியிடும் அறிவாற்றலும் படைத்தவர். சாதிச் சின்னமாகிய பூணூலைத் தமது மேனியிலிருந்து கழற்றி எறியும் அளவுக்குச் சமய முதிர்ச்சியும் அவர் பெற்றிருந்தார்.

‘கலையுரைத்த கற்பனையே நிலையெனக்கொண் டாடும்
கண்மூடிப் பழக்கமெலாம் மண்மூடிப் போக . . .’

என்றெல்லாம் உண்மையான கடவுள் வழிபாட்டை மக்களுக்கு உணர்த்தி மிக இனிய தமிழில் அருமையான பாக்களைப் பாடியவர் வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள். தென்னிந்தியாவில் வாழ்க்கைக் கப்பலுக்கு ஒரு கலங்கரை விளக்கம்போலவே கருதப்பெறுபவர் இவ் வள்ளலார். இவருக்கு இணையானவராக வட இந்தியாவில் கொண்டாடத் தக்கவரே வங்காள மண்ணில் தோன்றிய இராமகிருட்டின பரமஅம்சர். அத்தகைய புகழ்பூண்ட சமயச் சான்றோர் கல்கத்தா ‘காளி கட்டத்தில்’ உள்ள காளி தெய்வத்தையே மிகவும் விரும்பி வழிபாடு புரிந்தார் என்பார்கள்.

அடியார்கள் திரளாகக்கூடும் அந்தக் காளி கோயிலை ஒட்டி 'தர்ம சாலா' என்னும் பெரிய கட்டடம் ஒன்று உள்ளது. அது, பயணிகள் தங்கும் விடுதியாகப் பயன்பட்டுவந்தது. அந்தக் கட்டடத்தில், 'இறப்போர் நல இல்லம்' ஒன்றை அன்னை தெரேசா ஏற்படுத்த எண்ணினார்; அதற்காகக் கல்கத்தா மாநகராட்சி அதிகாரிகளையும் காவல்துறை ஆணையரையும் அணுகினார். அவரது நற்பணியின் நல்ல விளைவுகளை நன்குணர்ந்த அவர்கள், அவரது வேண்டுகோளுக்கு ஒப்புதல் அளித்தனர்; 'தர்ம சாலா' கட்டடத்தை அவரது திட்டத்திற்கென ஒதுக்கிக் கொடுத்தனர்.

பொதுவாக, உயிரோடு இருக்கின்ற மாந்தரிடம் இரக்கம் காட்டுவதுதான் எவரிடத்தும் உள்ள இயல்பான பரிவு உணர்ச்சியாகும்; இறக்கப்போகிறவர் என உறுதியாகத் தெரிந்துவிட்ட ஒருவரிடம் அந்த அளவுக்கு அக்கறைசெலுத்தி ஆதரிக்கும் போக்கு மக்களிடையே வழக்கமாக இருப்ப தில்லை. அன்னை தெரேசாவோ அத்தகைய புறக்கணிப்புப் போக்குக்கு முற்றிலும் மாறுபட்டவர். எனவேதான், 'வறுமையிலும் பிணியிலும் சிக்கித்தவிக்கும் மக்கள், உயிரோடு உள்ளபோதுதான் அமைதியான—அழகான— வாழ்க்கை வாழ்வதற்கு வாய்ப்பு அற்றவர்களாக வாடி னார்கள் என்றால், உயிரைப் பிரியும்போதாவது அவர்கள் அமைதியாக, அழகாகச் சாவைத் தழுவுகின்ற பேறு பெறட்டுமே!' என்று அவர் எண்ணினார். அந்த எண் ணத்தையே ஓர் உயிர்க்கொள்கையாக வகுத்துக்கொண்டு 'இறப்போர் நல இல்லம்' அமைக்கும் முயற்சியில் அவர் ஈடுபட்டார்.

அவ்வாறு அவர் முதன் முதல் ஏற்படுத்திய 'இறப்போர் நல இல்லத்துக்கு' அவர் வங்காளி மொழியில் சூட்டிய பெயர் 'நிர்மல் இருதயம்' (Nirmal Hiruday) என்பதாகும். 'தூய்மை யான உள்ளம்' என்பதே இதன் பொருள். தூசுகளை நீக்கித் துப்புரவு செய்தால்தான் வீடு பொலிவோடு விளங்கும்; மாசு மறுவற்ற மனத்தோடு பணிபுரிந்தால்தான் மக்களிடம்

மதிப்பு வளரும். அத்தகைய தூய்மையான உள்ளம் கொண்டோரின் தொண்டு நிகழும் இடம் என்பதைச் சுட்டிக் காட்டும் வகையில்தான், உடலிலே மாசு, மறுவாகிய பிணி களைக் கொண்டவரைத் துப்புரவு செய்து பேணும் இல்லத் துக்குப் பொருத்தமான முறையில் 'நிர்மல் இருதயம்' என்னும் அந்தப் பெயரை அன்னை தெரேசா அளித்தார் போலும்!

1952ஆம் ஆண்டில்தான், தமது 'அறப்பணி இயக்கத்தின்' சார்பில், அன்னை தெரேசா மேற்கண்டவாறு முதல் 'இறப்போர் நல இல்லத்தைக்' கல்கத்தாக் காளி கட்டம் பகுதியில் தோற்றுவித்தார். நான்கு பெரிய சாலைகள் கூடும் பரபரப்பு மிகுந்த பகுதியிலேயே அந்த இல்லம் அமைந் திருக்கிறது. அதில் நுழைந்தவுடன் எதிர் எதிரே இரண்டு திண்ணைகள் இருப்பதைக் காணலாம். அவற்றில் ஆண் நோயாளிகள் படுத்திருப்பார்கள். இரு திண்ணைகளுக்கும் நடுவில் உள்ள 'இடைகழி' வழியாக உள்ளே சென்றால் பிணியாளர்களைக் குளிப்பாட்டும் அறை காணப்படும். அங்கேதான் நோயாளிகளின் அழுக்கேறிய ஆடைகளைக் கன்னித் துறவியர் துவைக்கின்ற வேலையும் நடக்கிறது. குளியல் அறையைத் தாண்டி உட்புறம் சென்றால் பக்க வாட்டில் நீளமான கூடம் இருக்கும். இடப்புறமாக இடை வெளி விடப்பட்ட இரண்டு திண்ணைகள் உள்ளன. அவற்றில் இறப்பை நெருங்கிக்கொண்டிருக்கும் பெண் நோயாளிகள் படுத்துக்கிடப்பதைப் பார்க்கலாம். இரண்டு பிரிவுகளாக உள்ள இந்த இல்லத்தில் ஆண்கள் பகுதியில் 60 நோயாளிகளும் பெண்கள் பிரிவில் 60 நோயாளிகளும் ஒரே சமயத்தில் தங்கியுள்ளார்கள். கடந்த கால் நூற்றாண்டுக் காலத்தில் கைவிடப்பட்ட பிணியாளர்கள் ஏறத்தாழ எழுபதாயிரம் பேர் அங்கே அடைக்கலம் அளிக்கப்பட்டிருக் கிறார்கள்.

நிலைகுலையா மலை

தூய்மையான தொண்டு உள்ளத்துடன்தான் தூய்மை யான ஓர் இல்லத்தை இறப்போர் நலன்களைக் காப்பதற்காக

அன்னை தெரேசா தோற்றுவித்தார். எனினும், அப்பழுக் கற்ற அவரது அறப்பணியிலும் சிலர் ஐயப்பாடு காணும் நிலை உருவாயிற்று. 'நிர்மல் இருதயம்' இல்லத்தை அடுத்துள்ள காளி கோயிலுக்குத் திரண்டுவரும் ஆயிரக் கணக்கான அடியார்களும் அங்குள்ள நானூற்றுக்கும் மேற் பட்ட பூசாரிகளுமே அவ்வாறு ஐயப்பாடு கொண்டனர். கத்தோலிக்கக் கிறித்தவ சமயத்தைச் சார்ந்த அன்னை தெரேசா இந்து சமயத்தைச் சார்ந்த ஏழைகளையும் நோயாளிகளையும் தமது அறப்பணி இயக்கத்தின் வாயிலாகச் சமய மாற்றம் செய்யக்கூடும் என்று அவர்கள் ஐயம் கொண்டனர்.

நாளடைவில் அந்த ஐயப்பாடு என்னும் சிறு கனற்பொறி, அச்சமாக வளர்ந்து, பின்னர் ஆத்திரப் பெருந்தீயாகவும் கொழுந்துவிட்டு எரியத் தலைப்பட்டது. அன்னை தெரேசா வின் அருட்செயலைத் தவறாகக் கற்பனை செய்துகொண்ட அவர்கள் சொல்லளவில் கண்டனக்கணை தொடுத்ததோடு நிற்கவில்லை; செயல் அளவிலும் எதிர்ப்பைக் காட்டி வன் முறையிலும் இறங்கினார்கள். காளி கோயிலை அடுத்துள்ள 'தரும சாலா' கட்டடத்தைவிட்டு இறப்போர் நலன் இல்லத்தை எப்படியாவது அப்புறப்படுத்திவிடவேண்டும் என்பதே அவர்களது நோக்கம்.

அவர்களின் வசை மொழிகள் அன்னையாரின் செவிகளைத் தீய்த்தன; வன்முறைச் செயல்கள் நெஞ்சத்தை நடுக்குறச் செய்தன; அறப்பணி இயக்கத்தைச் சார்ந்த கன்னித் துறவியர் எந்த நேரத்தில் எத்தகைய இடுக்கண் வருமோ என்று தங்கள் நெஞ்சம் அதிர்கின்ற நிலையிலேயே அஞ்சி அஞ்சிப் பணியாற்றினர். அதனால், காவல்துறையின் பாது காப்புடன் தங்கள் கடமையைப் புரியும் சூழ்நிலைக்கும் அவர்கள் ஆட்பட்டனர். அப்போது கல்கத்தா மாநகரின் காவல்துறை ஆணையராக அலுவல் புரிந்தவர் நிராத் சவுத்திரி. அன்னை தெரேசாவிடம் அவர் அளவில்லாத பற்றுதலும் மதிப்பும் கொண்டிருந்தார். காளி கோயில் அடியார்களும்

பூசாரிகளும் நடத்தும் எதிர்ப்புக் கிளர்ச்சிகளை ஒடுக்க முடியாமல் அவரும் திணறிக்கொண்டிருந்தார்.

இத்தகைய கடுமையான எதிர்ப்புக் கணைகளைக் கண்ணுற்ற தவத்திரு. எக்சம் வேன் அவர்களே மனம் இடிந்து போனார். எனவே, இறப்போர் நலன் காக்கும் அறப்பணி முயற்சியைக் கைவிட்டுவிடுமாறு அன்னை தெரேசாவிடம் அவரே அழுத்தமாக வற்புறுத்தினார்.

''எத்தகைய கடுமையான மழை பெய்தாலும் கொடுமை யான புயல் வீசினாலும் உறுதியாக ஓங்கி நிற்கும் மலை ஒருபோதும் அசைவதில்லை. உயர்ந்த நெறிகளைப் பூண்ட நெஞ்சுறுதிகொண்ட சான்றோர்களும் எத்தகைய எதிர்ப்புகள் வந்தாலும் நிலைகுலையமாட்டார்கள்'' என்றார் கவுதம புத்தர்.

அன்னை தெரேசாவும் அந்த நெருப்புக் கணைகளுக்கு நிகரான எதிர்ப்புகளைக் கண்டும் நெஞ்சங் குலையாமல் நிமிர்ந்தே நின்றார்; அஞ்சி நடுங்காமல் அறப்பணியைத் தொடர்ந்தார். தம் ஆன்ம குருவான தவத்திரு. வேன் அவர்களின் வற்புறுத்தலையும் மீறி, 'தரும சாலா' கட்டடத்தைவிட்டு 'நிர்மல் இருதயம்' இல்லத்தை அப்புறப் படுத்தக்கூடாது என்பதில் உறுதியாக நின்றார். அப்போது தம்முடைய ஆன்ம குருவுக்கு அவர் அளித்த சுருக்கமான விடை இதுதான்:

''இறக்கின்ற எல்லாருக்கும் இன்றியமையாதது இந்த இல்லம்.''

எவருடைய அரவணைப்புமின்றி இருக்கின்ற நோயாளி களுக்கு அமைதியும் ஆறுதலும் அளிக்கவே அந்த இல்லத்தை அன்னை தெரேசா தோற்றுவித்தார். ஆனால், அந்த இல்லத்தில் அடைக்கலம் தேடி வந்த பின்னரும் இறக்கின்ற நோயாளிகளுக்கு அமைதி ஏற்படாத வகையிலேயே காளி கோயில் பூசாரிகளும் அடியார்களும் ஓய்வே இல்லாமல் கூச்சலை எழுப்பினர்; குழப்பங்களை விளைவித்தனர்; கலகங்களைத் தூண்டிவிட்டனர். அவர்களுடைய வன்முறைப்

போக்கால் நோயாளிகள் அச்சத்திற்கு இரையாகி அமைதி இழப்பதை அன்னை தெரேசா கண்ணுற்றார். இந்தச் சிக்கலுக்கு எவ்வாறேனும் தீர்வு காணவேண்டும் என்று எண்ணிய அவர் நேரே கோயில் பூசாரிகளிடமே சென்றார்.

''என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள்; என்னை நம்பி வந்துள்ள ஏழைகளைத் தொல்லைப் படுத்தாதீர்கள்; அவர்கள் அமைதியாக இறக்கட்டும்,'' என்று உள்ளம் உருக முறையிட்டார்.

அப்படியும் எதிர்ப்பாளர்களின் கல்மனம் கரையவில்லை; அதற்கு இன்னும் சிறிது காலம் செல்லவேண்டியிருந்தது.

### எதிர்ப்பாளர் ஏவிய கணை

அதே நேரத்தில், நேரடிக் கிளர்ச்சிகளில் ஈடுபட்டுக்கொண்டிருந்த எதிர்ப்பாளர்கள் தங்கள் தாக்குதல் கணையை வேறொரு கோணத்திலும் தொடுக்க முற்பட்டார்கள். ஆளுங்கட்சியைச் சார்ந்த அரசியல் தலைவர் ஒருவரை அணுகித் தங்கள் நோக்கத்தை ஈடேற்றிக் கொள்வதில் முனைந்தார்கள். இந்து சமயத்தைச் சார்ந்தவர்களைத் தமது கிறித்தவ சமயத்திற்கு இழுப்பதற்காகவே தரும சாலைக் கட்டடத்தில் அன்னை தெரேசா இல்லம் ஏற்படுத்தியிருப்பதாக அந்தத் தலைவரின் மனத்தில் அழுத்தமாகப் பதியுமாறு முறையிட்டனர். தம்முடைய கட்சியைச் சார்ந்த தம்மைப் பெரிதும் பின்பற்றி நடக்கின்ற இளைஞர்களே அவ்வாறு வந்து முறையிட்டதால் அவர்களுடைய வேண்டுகோளுக்கு அவரால் செவிசாய்க்காமல் இருக்கமுடியவில்லை.

எனவே, அவர்களை அமைதிப்படுத்தும் முறையில், "அந்த அம்மையார் மட்டும் நீங்கள் கூறுகிறபடி சமயமாற்ற வேலையில் ஆழ்ச்சியாக ஈடுபட்டிருக்கிறார் என்பது உண்மையாக இருக்குமானால், அவரை எப்படியாவது அங்கிருந்து அப்புறப் படுத்தாமல் நான் விடமாட்டேன்," என்று சூளுரைத்தார். அவரது உறுதிமொழியைக் கேட்டு எதிர்ப்பாளர்களும் உவகை வெறியோடு ஆர்ப்பரித்தனர்.

ஒருநாள் திடீரென்று உண்மை நிலையை நேரில் கண்டறிய 'நிர்மல் இருதயம்' இல்லத்திற்கு அந்த அரசியல் தலைவர் சென்றார். அப்போது அன்னை தெரேசாவும் அங்கே நோயாளிகளைக் கவனித்துக்கொண்டிருந்தார். தலைவரைக் கண்டதும் அவர் அன்போடு வரவேற்றார்; அந்த இல்லத்தைத் தாமே உடன்வந்து சுற்றிக் காட்டுவதாகவும் உரைத்தார். குற்றங் காணும் நோக்குடன் வந்திருந்த அவ்வரசியல் தலைவரோ அன்னை தெரேசாவின் அன்பார்ந்த அழைப்பை ஏற்கவில்லை. "நானே இல்லத்தைச் சுற்றிப் பார்த்துக் கொள்கிறேன்; எவரது துணையும் எனக்குத் தேவையில்லை" என்று முகத்தில் அறைந்தாற்போல் கூறிவிட்டார்.

பின்னர், தாமே தனியாக அந்த இல்லத்தின் ஒவ்வொரு பகுதியையும் பார்வையிட்டார். அவ்வாறு அவர் சுற்றி வரும்போது உறுப்புகள் நைந்துதொங்கும் உருக்குலைந்த நோயாளிகள் சாவோடு போராடுவதைக் கண்டார். அவர்களைப் பரிவோடு கண்காணிக்கும் கன்னித் துறவியரின் பணிகளையும் அவர் பார்த்தார். பிணியாளர்களுக்கு, அவர்கள் கனிவோடு மருந்து கொடுப்பதும், உணவு ஊட்டுவதும், ஊசிமூலம் மருந்து செலுத்துவதும் நெஞ்சை நெகிழவைக்கும் காட்சிகளாகத் தோன்றின. புன்னகை தவழும் பூ முகத்துடன் அவர்கள் புரியும் ஒவ்வொரு பணிவிடையும் அந்த அரசியல் தலைவரின் நெஞ்சத்தை உருகவைத்தது.

இல்லத்தைப் பார்வையிட்ட பின்னர் அவர் வெளியே வந்தபோது வாயிலில் தமது வருகைக்காக எண்ணற்ற இளைஞர்களும் முதியவர்களும் காத்திருப்பதைக் கண்டார். அவர்கள் அன்னை தெரேசாவை எப்படியும் அங்கிருந்து அப்புறப்படுத்துவதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டு வந்து திரண்ட எதிர்ப்பாளர்கள். அரசியல் தலைவர், அவர்களை நோக்கி, "இந்தப் பெண்மணியை இங்கிருந்து எப்படியும் வெளியேற்றிவிடுவேன் என்று உங்களுக்கு நான் வாக்குக் கொடுத்துவிட்டுத்தான் இங்கு வந்தேன். அந்த வாக்குறுதியில் எந்த வித மாற்றமும் இல்லை; அதை நான் நிறைவேற்றியே

தீருவேன். ஆனால், அதற்கு ,முன்னால் உங்களிடம் ஒரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன்; இங்குள்ள அருவருக்கத் தக்க நோயாளிகளையெல்லாம் முகம் சுளிக்காமல் இந்தக் கன்னியர் கவனிக்கின்றனர். இவர்கள் புரியும் பணிவிடைகளைச் செய்வதற்கு நீங்கள் உங்களுடைய தாய்மாரையும், தங்கை, தமக்கையரையும் இங்கே அழைத்துவரவேண்டும். அவர்கள் அப்படிப் பணிவிடை புரிய வந்துவிட்டால் பிறகு அன்னை தெரேசாவை அப்புறப்படுத்துவது என் பொறுப்பு. உங்கள் தாய்மாரும் உடன்பிறப்புப் பெண்களும் இங்குப் பணிவிடை செய்ய வரும்வரை அவரை வெளியேற்றுவதற்கு நானே உடன்படமாட்டேன். ஏனெனில், அதோ அந்தக் கோயிலில் காளிதேவதை கல்லில்தான் இருக்கிறாள்; ஆனால், இந்த இல்லத்திலோ உயிருள்ள தேவதையே இருக்கிறாள்!'' என்று கூறினார்.

அரசியல் தலைவரின் இந்த வேண்டுகோளைக் கேட்டதும் எதிர்ப்பாளர்களின் இரும்புபோன்ற இதயமும் மெழுகாக உருகத் தொடங்கியது. அவரது சொல் ஒவ்வொன்றும் அவர்களது ஆத்திரத் தீக்கொழுந்துகளை அணைத்துவிட்ட அருவிநீர் என்றே சொல்லலாம். கெட்ட நாற்றம் வீசுகின்ற நைந்துபோன சதைப் புண்களுடன் பிணமாகிக்கொண்டிருக்கும் பிணியாளர்களைத் தொட்டுத் தூக்கிச் சீராட்டிக் காக்கும் பொறையுணர்ச்சி அந்தக் கன்னியர் அளவுக்குத் தங்கள் தாய்மாருக்கும், தங்கை, தமக்கையருக்கும் இருக்க முடியாது என்பதை எதிர்ப்பாளர்கள் புரிந்துகொண்டார்கள். எனவே, தலை குனிந்தவண்ணம் அவர்கள் கலைந்து போனார்கள். அதற்குப் பின்னர் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்தின்மீதிருந்த கசப்புணர்ச்சி படிப்படியாகக் கரைந்தேபோயிற்று.

### மாநகராட்சி மறுக்கவில்லை

இதற்கிடையே கல்கத்தா மாநகராட்சிக் கூட்டங்களிலும் அன்னை தெரேசாவின் இறப்போர் நல இல்லத்துக்கு

எதிர்ப்புக் குரல் எழுப்பப்பட்டது; கண்டனத் தீர்மானமும் கொண்டுவரப்பட்டது.

அதுபற்றிய கருத்துப் பரிமாற்றம் நடைபெற்றபோது மாநகராட்சித் தலைவர் உறுப்பினர்களிடம் சில வினாக்களை எழுப்பினார்:

''அன்னை தெரேசா தருமசாலையில் மரிப்போருக்காக இல்லம் நடத்துவதற்கு எதிர்ப்பு உண்டா? அந்தப் பணியை அவர் அங்கே தொடர்ந்து நடத்த ஒப்புதல் தரலாமா, தரக் கூடாதா? அந்த இடத்தைவிட்டு அவரை உடனே வெளி யேற்ற வேண்டுமா? அப்படி வெளியேற்றினால் இறப்போருக் காக அவர் புரியும் பணியைத் தொடர்வதற்குத் தகுதியான வேறோர் இடத்தைத் தருவதற்கு உங்களில் யாரேனும் ஆயத்தமாக இருக்கிறீர்களா?''

அவருடைய இந்த வினாக்களுக்கு அந்தக் கூட்டத்தில் சரியான விடை கிடைக்கவில்லை. பெரும்பாலான உறுப்பி னர்கள் பேசாமல் அமைதியாகவே இருந்துவிட்டார்கள். இருவர் மட்டுமே அன்னை தெரேசாவின் அறப்பணியைக் கண்டித்துத் தங்களின் சமயப்பற்றைக் காட்டிக்கொள்ளும் வகையில் சாடினார்கள். அவர்களும் இறப்போரைப் பேணிக் காப்பதற்குரிய மாற்று இடம் எதையும் தருவதற்கு முன்வர வில்லை; அத்தகைய தகுதியான வேறோர் இடம் எங்கே இருக்கிறது என்று சொல்வதற்கும் அவர்களால் இயலவில்லை. எனவே, மரிப்போரின் நலனைக் காக்க இன்னும் வசதியான மாற்று இடம் கிடைக்கும்வரை தருமசாலைக் கட்டடத்தி லேயே அன்னை தெரேசா தமது அறப்பணியைத் தொடர்ந்து நடத்தலாம் என்று மாநகராட்சி முடிவு செய்தது. அது மட்டுமன்றி, 'நிர்மல் இருதயம்' இல்லத்திற்குத் திங்கள் தோறும் நிதிக்கொடை வழங்கவும் அது முன்வந்தது. ஆனால், அன்னை தெரேசா அத்தகைய நிதியுதவி தேவை யில்லை என்று மாநகராட்சிக்குத் தெரிவித்துவிட்டார்.

நெஞ்சங்கவரும் நிர்மல் இருதயம்

'சுடச் சுடப் பொன் ஒளிவீசும்; அரைக்க அரைக்கச் சந்தனம் மிகுதியாக மணக்கும்' என்பர்.' அவ்வாறே உண்மையை உணராதோர் எதிர்க்க எதிர்க்க அன்னை தெரேசாவின் 'இறப்போர் நல இல்லமும்' மேன்மேலும் சிறந்து விளங்கலாயிற்று. நடை பாதைகளில் நாற்றமடித்துக் கேட்பாரற்றுக் கிடந்த பல பிணியாளர்களுக்கு நிழல் தரும் மரமாக அந்த 'நிர்மல் இருதய' இல்லம் விளங்கியது; நெஞ்சொடிந்து பிணமாகிக்கொண்டிருந்த அவர்களுக்கு அமைதியான சாவைத் தழுவுவதற்கு அருமையான வாய்ப்பை அளித்தது.

அங்கே அன்னை தெரேசா தமது கத்தோலிக்கக் கிறித்தவ சமயப் பிணியாளர்க்கு மட்டுமன்றி இந்து, முஸ்லீம், பௌத்தம், சமணம் முதலான எல்லாச் சமயங்களையும் சார்ந்த பிணியாளர்களுக்கும் புகலிடம் அளித்து வருகிறார். கடவுள் நம்பிக்கை உடைய நோயாளிகள்தாம் அங்கே இடம் பெற முடியும் என்பதும் இல்லை; 'உழைப்பு ஒன்றே மனிதரை உயர்த்தும்; கைகளைக் கட்டிக்கொண்டு சோம்பேறிகளாக இருப்பவர்களைக் கடவுளும் காப்பாற்ற மாட்டார்' என்னும் கொள்கையுடைய பகுத்தறிவாளர்களும், பொதுவுடைமை இயக்கத்தைச் சார்ந்தவர்களும் அந்த 'இறப்போர் நல இல்லத்'தில் இனிய அரவணைப்பைப் பெற்றுவருகிறார்கள்.

பிணியாளர்களிடையே சாதி, சமய, இன, மொழி வேறுபாடு எதையுமே பாராட்டாமல் அன்னை தெரேசா நடுநிலையோடுதான் நடந்துவருகிறார். இதனால் அறப்பணி இயக்கத்தின் சார்பில் அவர் சமய மாற்ற வேலையில்தான் ஈடுபட்டிருக்கிறார் என்று தொடக்க காலத்தில் சிலர் சாட்டிய குற்றச்சாட்டு அடிப்படையே இல்லாத வெறும் புரளியே என்பது விரைவில் புலனாயிற்று.

அதற்கு எடுத்துக்காட்டாக ஒரு வியத்தகு நிகழ்ச்சியும் நடைபெற்றது.

அன்னை தெரேசாவின் இறப்போர் நல இல்லம் தரும சாலையை விட்டு அப்புறப்படுத்தப்படவேண்டும் என்பதற்காக முழுமூச்சோடு போராடுவதில் முன்னணியில் நின்றவர்கள் காளி கோயில் பூசாரிகளே. அவர்களுள் தலைமைப் பூசாரிக்குரிய தகுதிபடைத்த ஒருவர் எலும்புருக்கி நோய்க்கு இலக்கானார். என்னென்னவோ மருத்துவம் செய்தும் அவரது உடல்நலம் தேறவில்லை; நாளுக்கு நாள் அவர் நலிந்துகொண்டே வந்தார். அவர் இறக்கப்போவது உறுதி என்று தெரிந்ததும் அவரது உற்றார் உறவினர் அவரைப் புறக்கணிக்க முற்பட்டுவிட்டனர். இந்நிலையில் அன்னை தெரேசாவின் 'நிர்மல் இருதய' இல்லம் அவருக்குப் புகலிடம் அளித்தது. கன்னித் துறவியர் கனிவோடு அவரைக் கவனித்துப் பணிவிடை யளித்தனர். தங்களின் அறப்பணி இயக்கத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்த பூசாரிதானே என்று அவரை வெறுத்து ஒதுக்கவில்லை; மிகுந்த அக்கறை யுடனேயே அவரை ஆதரித்தார்கள். அவர்களுடைய பெருந்தன்மையான தொண்டு மனப்பான்மை காளி கோயிலின் ஏனைய பூசாரிகளிடம் பெரும் மனமாற்றத்தை ஏற்படுத்திற்று.

ஒருநாள் காலை வேளையில் அன்னை தெரேசா பிணியாளர்களைக் குளிப்பாட்டும் பணியில் தாமே நேரடியாக ஈடுபட்டிருந்தார். எலும்புருக்கி நோய்க்கு இரையாகிக் கொண்டிருந்த அந்தப் பூசாரி அவர் இருக்குமிடத்துக்கு வந்தார்; அன்னை தெரேசாவின் முன்னர் விழுந்து அவர் தம் கால்களைத் தம் கைகளால் தொட்டு ஒற்றிக்கொண்டார். பின்னர் எழுந்து, ''கடந்த முப்பது ஆண்டுகளாக நான் காளி தேவதைக்குப் பணி செய்து வருகிறேன். அந்தத் தெய்வத் தாய் இப்போது என் கண்முன்னே மனித உருவில் நிற்பதை நான் காண்கிறேன். இவ்வளவு காலமாகக் காளிக்கு நான் செய்த பூசை வீண்போகவில்லை. தன் காலடியில் உயிர்விட

எனக்கு அவள் வரம் தந்துவிட்டாள்,'' என்று உள்ளம் உருக, கண்ணீர் பெருகக் கூறினார்.

இறக்கும் தறுவாயில் அந்தப் பூசாரி உரைத்த இந்தச் சொற்களே அன்னை தெரேசாவின் அறப்பணிக்குக் கிட்டிய அருமையான வெற்றி மாலைகள் அல்லவா? பகைமை பாராட்டிய ஒருவரே பணிந்து வந்து தொழுது நின்ற காட்சி உலகில் வேறெங்குமே காண இயலாத விந்தை நிகழ்ச்சி அன்றோ?

'வாய்மையே வெல்லும்!'

என்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டுமோ?

# 8. குழந்தைகள் காப்பகமும் தொழுநோயாளர் இல்லமும்

அன்னை தெரேசா லோரேட்டோ கன்னியர் மடத்தை விட்டுப் பொதுத் தொண்டு புரியும் புனிதமான குறிக் கோளுடன் வெளியுலகில் அடிவைத்தபோது, கோமஸ் உடன் பிறப்பாளர் இல்லத்தில் அவர் குடியேறினார் என்று படித் தோம். அதே இல்லம்தான் தொடக்கத்தில் அவரது அறப் பணி இயக்கத்தின் செயலகம் ஆகவும் விளங்கியது. சுபாஷிணி தாஸ் என்னும் கன்னித் துறவியைத் தொடர்ந்து உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து கன்னியர் பலர் அன்னை தெரேசா வின் தலைமையில் அறப்பணியில் பங்குபெற அங்கு வந்த தால் அந்த இல்லத்தில் இட நெருக்கடி ஏற்பட்டது.

தாம் அங்கே குடியேறிய புதிதில் அந்த இல்லத்தின் முதல் மாடியில் ஒரு சிறு பகுதியைமட்டுமே அவர் பயன்படுத்தி வந்தார். பின்னர், கன்னியர் எண்ணிக்கை உயர உயர அந்த முதல் மாடி முழுவதுமே அவர்கள் தங்குவதற்குத் தேவைப் பட்டது. சிறிது காலம் சென்று, அந்த இல்லத்தின் இரண்டாவது மாடியையும் அமர்த்திக்கொண்டார். நான்கு ஆண்டுகளில் அதுவும் போதவில்லை. எனவே, வேறொரு பெரிய வீட்டில் குடியேறவேண்டிய கட்டாய நிலை உருவா யிற்று.

கல்கத்தாவில் 'லோயர் சர்க்குலர்' வீதியில் உள்ள இல்லம் மூன்று அடுக்குகள் கொண்ட மாடி வீடாகும். வளர்ந்து வரும் தமது அறப்பணி இயக்கத்தின் செயலகமாகத் திகழ் வதற்கு அத்தகைய பெரிய மாளிகைபோன்ற கட்டடம் தேவையே என்பதை அன்னை தெரேசா உணர்ந்தார். இயக்கத்தைச் சார்ந்த கன்னியர் தங்குவதற்குமட்டுமன்றி அவர்களுக்குப் பயிற்சியகம் அமைக்கவும் அது பயன்படும்

என்று தோன்றிற்று. எனவே, பரந்த மதிலுக்கு உட்பட்ட அந்தப் புதிய இல்லத்துக்குக் கிரீக் சந்திலுள்ள வீட்டிலிருந்து தமது அறப்பணி இயக்கச் செயலகத்தை அன்னை தெரேசா மாற்றினார்; அவரும் ஏனைய கன்னித் துறவியரும் அங்கு வந்து குடியேறினர்.

1953 பிப்பிரவரியில் இந்தக் குடியிருப்பு மாற்றம் நிகழ்ந்தது. அன்று முதல் இன்றுவரை அதே லோயர் சர்க்குலர் வீதிக் கட்டடம்தான் அவரது அறப்பணி இயக்கத்தவரின் செயலகமாகவும் விளங்கிவருகிறது. கல்கத்தாவில் உள்ள புனித தெரேசா ஆலயத்திலிருந்து பத்து மணித்துளி நடை தூரத்திலேயே அந்த இல்லம் அமைந்திருக்கிறது.

### சேய்களுக்குத் தாயகம்

''பெற்றதாய் மடியின் மீது
யாழ்கிடப் பதுபோல் பிள்ளை
உற்றிடும்; 'அம்மா!' என்னும்
அவ்விசை அமிழ்தின் ஊற்றாம்!''

என்று பாவேந்தர் பாரதிதாசனார், தமது 'குடும்ப விளக்கு' நூலில் குழந்தையைப்பற்றிப் பாடியிருக்கிறார்.

இசைவாணர் ஒருவரின் மடியில் யாழ் என்னும் இனிய இசைக்கருவி கிடப்பதைப்போல, தாயின் மடியில் குழந்தை படுத்துக்கிடக்கும் என்று மிக அழகான ஒரு காட்சியைக் கவிதையாக அவர் தீட்டியிருக்கிறார். அந்தக் குழந்தை அம்மா! என அழைப்பதே ஓர் இனிய இசைதான் என்றும், அந்த ஒலி அமிழ்தத்தின் ஊற்று என்றும் அவர் இன்பம் சுரக்கும் வரிகளையும் வடித்திருக்கிறார்.

ஆனால், இவ்வுலகில் பிறக்கும் குழந்தைகளில் சில தாயின் மடியே என்ன என்று அறியாமலே அழிகின்றன; 'அம்மா!' என்று அழைக்கமுடியாமலே இறக்கின்றன. வறுமை நெருப்பின் கொடுமையில் சிக்கிய தாயின் வயிற்றில் பிறந்த குழந்தைகளும் திருமணம் ஆகாமலே கன்னியாக உள்ள பெண்களின்

வயிற்றில் தோன்றிய பிள்ளைகளும் திக்கற்றோராகிக் குப்பைத் தொட்டிகளில் வீசப்படுகிறார்கள்; கோயில் வாசல்களில் போடப்படுகிறார்கள்; கடல், குளம், கேணி போன்ற நீர் நிலைகளிலே எறியப்படுகிறார்கள்.

இவ்வாறு தாயின் அன்பையும் அரவணைப்பையும் இழந்துவிட்ட பச்சிளங் குழந்தைகளுக்குத் தாயாக நின்று பாதுகாக்கும் அறப்பணியை மேற்கொள்ளவும் அன்னை தெரேசா முடிவெடுத்தார். அவர் கண்கூடாகக் கண்ட ஒரு காட்சியே இந்த முடிவைச் செயற்படுத்துமாறு அவரைத் தூண்டியது.

1955ஆம் ஆண்டில், ஒருநாள் காலை வேளை. யாரோ ஒருவரைக் காண்பதற்காக அன்னை தெரேசா உந்து வண்டியில் போய்க்கொண்டிருந்தார். வண்டியின் கண்ணாடிக் கதவுகளைத் திறந்துவைத்துச் சாலையின் இருமருங்கிலும் புலப்படும் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே செல்வது அவர் வழக்கம். அன்றும் அவ்வாறே அவர் பயணம் செய்தார். நான்கு நெடுஞ்சாலைகள் கூடும் ஒரு நாற்சந்தியை ஒட்டிய குறுகலான தெருவில் போகும்போது, திடீரென்று 'நிறுத்துங்கள்' என்று ஓட்டுநரிடம் கூறினார். வண்டி நின்றது. உடனே பரபரப்புடன் அந்த நாற்சந்தியின் ஓரமாகவுள்ள குப்பைத்தொட்டியை நோக்கி அவர் விரைந்தார். அதில் நிரம்பி வழிந்த குப்பை கூளங்களுக்கு மேலே ஒரு காகிதப் பொதி அப்படியும் இப்படியுமாக அசைந்தவண்ணம் இருந்தது. உயிரற்ற ஒரு காகிதப் பொட்டலம் தானாக அசையமுடியாது அன்றோ? எனவே, உள்ளே ஏதோ ஓர் உயிருள்ள பொருள் இருக்கவேண்டும் என்னும் எண்ணத்துடனேயே அவர் குப்பைத்தொட்டியருகே சென்றார். அவர் நினைத்ததைப்போன்றே அந்தக் காகிதப் பொதியில் குழந்தை ஒன்று இருந்தது. அதை அப்படியே வாரி அணைத்துக்கொண்டு அன்னை தெரேசா வண்டியை நோக்கித் திரும்பினார்.

பஞ்சினும் மென்மையான அந்தப் பிஞ்சுக் குழந்தை சில மணிக்கு முன்னரே பிறந்திருக்கவேண்டும் என்று தோன்றி

யது. ''யார் பெற்ற பிள்ளையோ? அதன் அன்னை என்ன நிலையில் இருக்கிறாளோ? ஏன் இப்படிக் குப்பைத்தொட்டியில் வீசிவிட்டுப் போனாளோ? அதன் தாய் அதற்குப் பால் ஊட்டக்கூடமுடியாமல் பட்டினிக் கொடுமையால் செத்துக் கொண்டிருக்கலாம்; தன்னோடு தன் குழந்தையும் பசியினால் மடியாமல் யார் கண்ணிலாவது பட்டு எப்படியாவது வாழட்டும் என்றும் அவள் இப்படிக் குப்பைத்தொட்டியிலே அதை வீசிவிட்டுப்போயிருக்கலாம். அல்லது திருமணம் ஆகாத ஒரு பெண்ணுக்குத் தவறாகப் பிறந்த சேயாகவும் இருக்கலாம்; அது தன்னோடு இருந்தால் தன்னை யாரும் திருமணம் புரிந்துகொண்டு குடும்ப வாழ்க்கை நடத்தமாட்டார்களே என்னும் தன்னலத்தோடும் அவள் அதை வீசி விட்டுப்போயிருக்கலாம். ஆனால், இப்படித் தாயின் அன்பை யிழந்து, தாயின் மடியில் தவழமுடியாத—அன்னையை 'அம்மா' என அழைக்கமுடியாத பச்சிளங் குழந்தைகள் திக்கற்றவர்களாக அழியத்தான் வேண்டுமா? அவர்களும் ஏன் வாழக்கூடாது? அவர்கள் வளர்ந்து பெரியவர்கள் ஆனால் மற்றவர்களுக்குத் துணையாகப் பணியாற்ற முடியுமே! இந்த ஆதரவற்ற குழந்தைகளைப் பேணி வளர்க்க ஒரு காப்பகம் இருத்தல் நல்லதன்றோ?''

இத்தகைய எண்ண அலைகள் அன்னை தெரேசாவின் இதயம் என்னும் கடலில் எழும்பிக் குதித்தன. காகிதப் பொதியில் மறைந்துகிடந்த அந்தக் குழந்தையைக் கையில் ஏந்தியவாறே அவர் வண்டியில் ஏறினார். தாம் யாரைச் சந்திப்பதற்குப் புறப்பட்டாரோ, அவரைப்பற்றிய நினைவு இப்போது அகன்றுவிட்டது. அந்தக் குழந்தையைத் தக்க வாறு காப்பாற்றவேண்டும் என்னும் எண்ணமே அவரிடம் மேலோங்கி நின்றது. எனவே, லோயர் சர்க்குலர் வீதியில் உள்ள தமது அறப்பணி இயக்க இல்லத்திற்கே வண்டியைத் திருப்புமாறு ஓட்டுநரிடம் கூறினார். அன்று அந்தக் குழந்தையைக் குளிப்பாட்டி அதற்குப் பணிவிடை செய்யும்போதே, அவரது உள்ளத்தில் ஒரு பெரிய திட்டம் உருவாகிவிட்டது. தாயின் அரவணைப்பை இழந்த திக்கற்ற குழந்தைகளுக்கும்

உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கும் காப்பகம் ஒன்றை அமைத்தே முடிப்பது என்பதே அத்திட்டம்.

'சிசு பவனம்'

அதனை நிறைவேற்றுவதற்காக அன்னை தெரேசா வீடு தேடி அலைந்தார். அவருக்குத் துணையாக மைக்கேல் கோமஸும் சென்றார். லோயர் சர்க்குலர் வீதியிலேயே ஒரு வீடு வெற்றிடமாக இருப்பதாகச் செய்தி கிடைத்தது. அந்த வீட்டுக்கு உரிமையாளனான அர்மேனியன் மிக்காடி என்பவன் ஒரு குடிகாரன்; பேராசை மிகுந்தவன்; தன் வீட்டுக்கு மாதக் குடிக்கூலியாக முந்நூறு ரூபா கேட்டான். அப்பெருந் தொகையை எப்படிக் கொடுக்கமுடியும் என்று அன்னை தெரேசாவுக்கு மலைப்பாக இருந்தது. எனவே, அந்த வீட்டை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளாமல் அவர் திரும்பி விட்டார்.

ஆனால், 'குழந்தைகளுக்காக எப்படியும் ஒரு காப்பகம் அமைத்தாகவேண்டுமே!' என்னும் ஏக்கம் மட்டும் தூக்கத்தி லும் அவரது நெஞ்சைத் துளைத்தவண்ணம் இருந்தது.

ஒருநாள் அன்னை தெரேசா முன்னர்த் தாம் குடியிருந்த மைக்கேல் கோமஸ் இல்லத்துக்கு வந்தபோது அங்கு ஒரு குடும்பப் பெண் அழுதுகொண்டிருப்பதைக் கண்டார்; காரணம் என்னவென்று கேட்டார். ''என் கணவர் வருவா யில் பெரும்பகுதியை மது குடிப்பதற்கே செலவு செய் கிறாரே. இந்நிலை தொடருமானால் நானும் என் பிள்ளை களும் வீடு வாசல்களை இழந்து நடுத்தெருவில்தான் நிற்க வேண்டும்; நீங்களேனும் என் கணவருக்கு அறிவுரை கூறிக் குடிப்பதைத் தடுக்கமாட்டீர்களா?'' என்று அவள் முறை யிட்டாள்.

அவள் சென்ற பிறகு மைக்கேல் கோமஸிடம் அன்னை தெரேசா, ''நமது குழந்தைகள் காப்பகத்துக்கு அந்த அர்மேனியன் மிக்காடி வீட்டையே அமர்த்திவிடுவோம்; முந்நூறு ரூபாவுக்கே நாம் ஒப்புக்கொண்டுவிடுவோம்;

அவனிடம் பேசி மேற்கொண்டு ஆகவேண்டியவற்றை முடித்து விடுங்கள்'' என்றார்.

அதைக்கேட்டதும் மைக்கேல் கோமஸுக்கு வியப்பாக இருந்தது. ''அவ்வளவு மிகுதியான தொகையைக் கொடுக்க இயலாது என்பதனால்தானே முன்னர் அந்த வீட்டைக் கைவிட்டோம்? இப்போது உங்கள் பழைய முடிவில் மாற்றம் ஏன்?'' என்று கேட்டார்.

அதற்கு அன்னை தெரேசா புன்னகை புரிந்தவாறே என்ன சொன்னார் தெரியுமா?

''மதுவைக் குடிக்கும் ஒரு தீய செயலுக்காக ஒரு மனிதன் ஒரே நாளில் பெருந்தொகை செலவு செய்யும்போது குழந்தைகள் காப்பகம் அமைக்கும் ஒரு நல்ல செயலுக்காக மாதம் முந்நூறு ரூபா ஏன் கொடுக்கக்கூடாது?'' என்று கூறினார்.

பெற்ற அன்னையராலேயே புறக்கணிக்கப்பட்டுவிட்ட பிஞ்சுக் குழந்தைகளைப் பேணிக்காக்கப் பிச்சை எடுத்தேனும் நன்கொடைகள் திரட்டியேனும் அந்தப் பெருந்தொகையைக் குடிக்கூலியாகக் கொடுத்துவிடலாம் என்று அன்னை தெரேசா முடிவு செய்தார். அவரது எண்ணப்படியே மைக்கேல் கோமஸ் அந்த அர்மேனியன் மிக்காடியிடம் பேசி முடித்தார். அவனது வீடு குழந்தைகள் காப்பகம் ஆக மாறியது. அதற்கு 'சிசு பவன்' (Sishu Bhavan) என்று அன்னை தெரேசா பெயர் சூட்டினார்.

இதுதான் கைவிடப்பட்டுக் கவனிப்பாரற்ற குழந்தைகளையும் உடல் ஊனமுற்ற குழந்தைகளையும் பேணிக் காப்பதற்காகக் கல்கத்தா நகரில் எழுந்துள்ள 'சிசு பவன்' பிறந்த வரலாறு ஆகும்.

சேய்நல விடுதி செய்வது என்ன?

அன்னை தெரேசா ஏற்படுத்தியுள்ள குழந்தைகள் காப்பகம் எவ்வாறு துணைபுரிகிறது, என்னென்ன பணிகளைச் செய்

கிறது என்னும் செய்திகளையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

கல்கத்தா மாநகரில் குப்பைத்தொட்டிகளிலோ வேறு மறைவிடங்களிலோ வீசியெறியப்படும் குழந்தைகள் காவல் துறையினராலோ, தனி மனிதராலோ இங்கே கொண்டுவரப் படுகின்றனர். சில நேரங்களில் 'சிசு பவன்' இல்லத்தின் வாயிலிலேயே யாருக்கும் தெரியாமலே சிலர் குழந்தை களைப் போட்டுவிட்டுப் போய்விடுவதும் உண்டு; அந்தக் குழந்தைகளையும் உள்ளே எடுத்துச்சென்று அறப்பணி இயக்கக் கன்னியர் அரவணைத்துக் காக்கின்றனர். சில வேளைகளில் ஆலயங்களில் போடப்படும் குழந்தைகளும் இங்கே கொண்டுவரப்படுகிறார்கள். இவை தவிர, பிள்ளைப் பேற்று மருத்துவ மனைகளில் பெற்ற அன்னையரால் கைவிடப் பட்டுக் கதறும் குழந்தைகளும் இங்கே சேர்க்கப்படுகிறார்கள்.

ஒருமுறை கல்கத்தா மருத்துவ மனை அதிகாரிகளிட மிருந்தே அன்னை தெரேசாவுக்கு ஒரு செய்தி வந்தது. தங்கள் கட்டுப்பாட்டில் உள்ள தாய்—சேய்நல மருத்துவ மனைகளில் 102 கைவிடப்பட்ட குழந்தைகள் உளர் எனத் தெரிவித்தனர். அத்தனை குழந்தைகளையும் தாமே ஏற்றுக்கொள்வதாக அன்னை தெரேசா உடனே ஒப்புக்கொண்டார். மாநகராட்சி அதிகாரிகளையும் மருத்துவத்துறை அதிகாரிகளையும் திக்கற்ற குழந்தைகள்பற்றிய சிக்கல் திணறும்படி செய்து கொண்டிருந்தது; அதற்கு இத்துணை எளிதாகத் தீர்வு கிடைப்பதற்கு அன்னை தெரேசா வழிவகுப்பார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. தங்கள் சுமையை இறக்க முன்வந்த அறப்பணி இயக்கத் தலைவிக்கு அந்த அதிகாரிகள் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்தார்கள்; அவருடன் எல்லா வகைகளிலும் ஒத்துழைக்கவும் முன்வந்தார்கள்.

இவ்வாறு 'சிசு பவனம்' என்னும் குழந்தைகள் காப்பகத் துக்குக் கொண்டுவரப்படுபவர்கள் அவரவர் வயதுக்கேற்ப அணி அணியாகப் பிரிக்கப்படுகிறார்கள். ஈன்றணிமைக் குழந்தைகள், சில மாதக் குழந்தைகள், ஓராண்டுக்

6

குழந்தைகள், அதற்கு மேற்பட்ட மிகுதியான வயதுள்ள சிறுவர்—சிறுமியர் என்று அவர்கள் வகைப்படுத்தப்படு கிறார்கள். இத்தகைய பகுப்புக்கு ஏற்ப அவர்களுக்கு உணவு, உடை, கல்விப் பயிற்சி முதலானவற்றுக்கு ஏற் பாடுகள் செய்யப்படுகின்றன.

இவர்களில் உடல் ஊனமுற்ற குழந்தைகள் தனிப்பகுதியில் வைத்துப் பேணப்படுகிறார்கள். இங்கே வளர்கின்ற குழந்தைகள் திடமான உடல்வளம் பெறுவதோடு தேர்ந்த கல்விப் பயிற்சியுடன் தெளிந்த மனவளம் பெறவும் அன்னை தெரேசா ஆவன செய்துள்ளார். இதனால் அவர்களது எதிர் காலம் இருண்டுபோகாமல் சிறப்பாகத் திகழும் என்பதில் ஐயம் இல்லை. இவ்வாறு அழகாக—திடமாக—வளரும் திக்கற்ற குழந்தைகளைப் பிள்ளைப் பேறு இல்லாத செல்வர் 'தத்தெடுத்து' அழைத்துச் செல்வதும் உண்டு.

இப்படிப் பெற்றெடுத்த அன்னையரால் கைவிடப்பட்ட பிள்ளைகளை வளர்த்து ஆளாக்குவதோடு 'சிசு பவனம்' தன் அறப்பணியைச் சுருக்கிக்கொள்ளவில்லை. வேறோர் அரிய திருப்பணியையும் அது செய்கிறது. வறுமையில் வாடும் ஏழைகளின் குழந்தைகளுக்கு உணவுப் பொருள்களை வழங் கும் ஈகைப் பணியையும் அது மேற்கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு நாளும் மதிய உணவு வழங்கப்படுகிறது. அதற்குத் தேவையான உணவுப் பொருள்களைத் திரட்டி வைக்கும் பெரும் பொறுப்பையும் அன்னை தெரேசாவும் அவர்தம் 'உடன் உழைப்புத் தொண்டர்களும்' மேற்கொண் டிருக்கிறார்கள். நாள்தோறும் பிற்பகலில் 'சிசு பவன'த்தின் முகப்பில் இந்த உணவு வழங்கலை எதிர்நோக்கி இடுப்பில் குழந்தைகளை ஏந்தியவாறே ஏறத்தாழ எழுபது அன்னைய ரேனும் காத்துக்கிடப்பதைக் காணலாம். ஒருநாள் அங்கே உணவு வழங்கப்படவில்லை என்றாலும் அந்தப் பச்சிளங் குழந்தைகள் எல்லாம் பட்டினியால் துடிக்கும் நிலைதான் ஏற்படும். அந்தக் குறையும் ஏற்படாமலே அன்னை தெரேசா, அன்னையர் உள்ள குழந்தைகளையும் காப்பாற்று

கிறார். எனவே, 'சிசு பவனம்' என்பது கேட்பாரற்ற குழந்தைகளுக்குமட்டும் காப்பகமாக விளங்கவில்லை; தாய் அன்பு இழக்காத சேய்களுக்கும் நிழல்தரும் கனிமரமாகப் பணியாற்றுகிறது.

அடுத்து, வேலை வாய்ப்புக் கிடைக்காமல் திண்டாடும் சேரியில் உள்ள ஏழைப் பெண்களுக்கு வேலை வாய்ப்பு நிலையமாகவும் 'சிசு பவனம்' விளங்குகிறது. உயிர் வாழ்க்கைக்கு உணவு, உடை, உறைவிடம் மூன்றும் இன்றியமையாத் தேவைகள் ஆகும். இந்தத் தேவைகளை நிறைவு செய்துகொள்ள ஒவ்வொருவருக்கும் பணம் வேண்டும். கையில் காசு இல்லாதவர் உயிர் இருந்தும் உண்மையில் வாழாதவரே. அதனால்தான் பண்டை நாளிலேயே பார் புகழும் பெண்பாற் புலவராகத் திகழ்ந்த அவ்வைப் பாட்டி,

'கல்லானே ஆனாலும் கைப்பொருள் ஒன்(று) உண்டாயின்
எல்லாரும் சென்றங்(கு) எதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்;மற் றீன்றெடுத்த தாய் வேண்டாள்;
செல்லா(து) அவன்வாயிற் சொல்'

என்று பாடினார்.

இத்துணை இன்றியமையாத பொருட்செல்வம் ஒருவருக்குக் கிட்டவேண்டுமெனில் அவர் ஏதேனும் ஊதியம் தரக் கூடிய அலுவலை மேற்கொண்டால்தானே முடியும்? இந் நாளிலோ அலுவல் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. நிறைந்த பொருள் வளத்தோடு படித்துப் பட்டம் பெற்றுள்ள நிலையிலும் வேலை கிடைக்காமல் பலர் அலைவதைப் பார்க்கலாம். இந்நிலையில் படிப்புக்கே வழியில்லாத—பசியாற்றவும் உணவில்லாத—தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த சேரியில் வாழும் வறிய மக்களுக்கு வேலை கிடைப்பது இன்னும் அரிதே அன்றோ? அத்தகைய சேரிப் பெண்டிரும் ஊதியம் பெறுகின்ற வகையில்தான் அன்னை தெரேசா ஓர் அருமையான வாய்ப்பினை உருவாக்கியுள்ளார். அந்தப்

பெண்டிர்க்குச் 'சிசு 'பவன'த்தில் குழந்தைகளுக்குப் பணி புரியும் செவிலித் தாயர் வேலை தந்துவருகிறார். இதிலிருந்து அவரது குழந்தைகள் காப்பகம் தாழ்த்தப்பட்ட மக்களின் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் நிலைய மாகவும் விளங்குகிறது என்பதை அறியலாம்.

நிர்மல கென்னடி இல்லம்

கல்கத்தா லோயர் சர்க்குலர் வீதியில் முதலில் அமைந்த அந்தச் 'சிசு பவனம்' ஏற்பட்டுப் பதினாறு ஆண்டுகள் கழித்து, மற்றுமொரு குழந்தைகள் காப்பகத்தையும் அன்னை தெரேசா கல்கத்தாவில் எழிலுற அமைத்துள்ளார்.

எதிரேதான் அன்னை தெரேசாவின் புதிய குழந்தைகள் காப்பகம் பொலிவோடு நிற்கிறது. பசுமையான மரங்களும் புல்வெளியும் சூழ அஃது எழுந்து நிற்கும் எழிலே தனிச் சிறப் புடையது. அதற்கு 'நிர்மல கென்னடி இல்லம்' என அவர் பெயர் சூட்டியுள்ளார்.

அமெரிக்கக் குடியரசு தலைவர்களுள் ஏழைக் குடிசையில் தோன்றிய ஆபிரகாம் லிங்கனுக்குப் பிறகு புகழோடு பதவியில் உள்ளபோதே உயிர் நீத்தவர் ஜான் கென்னடி. ஆபிரகாம் லிங்கனைப் போன்றே நீக்கிரோக்களின் அடிமைத் தளையை உடைத்தெறியப் பாடுபட்டு உலகப் புகழ் பெற்றவர் கென்னடி. அவரது பெயரும் அமையுமாறு இந்தப் புதிய குழந்தைகள் காப்பகத்தை அன்னை தெரேசா நிறுவியமைக்கு ஒரு காரணம் உண்டு.

1971ஆம் ஆண்டில் பாகிஸ்தான் அரசுக்கு எதிராக அதன் ஒரு மாநிலமான கிழக்கு வங்காளத்தைச் சார்ந்த மக்கள் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டனர். அப்போது நடைபெற்ற கடும்போரில் வீடுகளை இழந்த ஒரு கோடிக்கு மேற்பட்ட மக்கள் புகலிடம் தேடி நம் இந்திய நாட்டை நோக்கி ஓடிவந்தனர். மாற்றுத் துணிக்குக்கூட வழியில்லா மல் வயிற்றில் பசி நெருப்பையும் கண்ணிலே நீரையும் ஏந்தி

வந்த அவர்களுக்குக் கனிவோடு புகலிடம் அளித்து அன்னை தெரேசா அருள் மழை பொழிந்தார். வான் ஊர்தி நிலையத்துக்கு எதிரேயுள்ள இடத்தில் அவர்கள் தங்கு வதற்கு உறைவிடமும் , உண்பதற்கு உணவும், உடுப்பதற்கு உடையும் கிடைப்பதற்கு வழிவகை செய்தார்.

அமெரிக்கக் குடியரசு தலைவராக இருந்த ஜான் கென்னடி யின் குடும்பத்தில் இன்று உலகறிந்த தலைவராகத் திகழ் கின்றவர், அவருடைய கடைசி இளவலான எட்வர்டு கென்னடி அமெரிக்க நாடாளுமன்றத்திற்குச் செனட்டர் ஆகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள செல்வாக்கு மிக்க தலைவர் ஆவர். கிழக்கு வங்கத்திலிருந்து புகலிடம் தேடிவந்த மக்களுக்காக அன்னை தெரேசா நடத்திவந்த புகலிட முகாம்களை அவர் இந்தியா வந்தபோது நேரில் சென்று பார்வையிட்டார்; அங்கு நடைபெறும் அறப்பணி இயக்கத் தவரின் அயராத தொண்டுகளைக் கண்டு வியப்புக் கடலில் ஆழ்ந்தார்.

அவர் அன்னை தெரேசாவின் இரக்கம் மலிந்த சிறப்புப் பணிகளைப் பாராட்டி ஊக்கமூட்டுவதற்கு அறிகுறியாக ஒரு பெருந்தொகையைப் பரிசாக அளிக்க முன்வந்தார். தம்முடைய தந்தையார் பெயரில் அமைந்த 'ஜோசப் கென்னடி ஜூனியர் அறக்கொடை' என்னும் அமைப்பி லிருந்து ஐம்பதாயிரம் டாலர்கள் நன்கொடை கிடைக்க ஏற்பாடு செய்தார். அந்தப் பரிசிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டுதான் 'நிர்மல கென்னடி சிசு பவன்' என்னும் எழில்மிக்க புதிய குழந்தைகள் காப்பகத்தை அன்னை தெரேசா ஏற்படுத்தியுள்ளார்.

அமெரிக்க நாட்டுக் கென்னடி குடும்பத்திலிருந்து பெற்ற பணத்தினால் உருவான காப்பகம் என்பதை உலகறியச் செய்யவே 'கென்னடி' என்னும் பெயரையும் அந்தக் கட்டடத்திற்கு அவர் சூட்டியுள்ளார். இதிலிருந்து அன்னை தெரேசாவின் நன்றிமறவா நற்பண்பை நாம் உணரலாம்.

## தொழுநோயாளர் இல்லம்

மற்றவர்களால் புறக்கணிக்கப்பட்ட மனிதர்களிலேயே அன்னை தெரேசாவின் இரக்கம் பொங்கும் மனத்தில் மிகுதியான இடத்தைப் பற்றி நிற்பவர்கள் தொழுநோயாளர் களே.

தொழுநோய் என்பது மனிதர்களைப் பீடிக்கும் பிணிகளி லேயே கொடுமையான காட்சியைத் தரும் நோயாகும். ஏறெடுத்துப் பார்க்கவே இயலாதவாறு அருவருப்பு அளிக்கும் நோய் அது. அதற்கு இரையானவர்களின் உடலுறுப்புகள் சில இடங்களில் தடித்தும் புடைத்தும் சில இடங்களில் சிறுத்தும் தேய்ந்தும் அழுகிப்போய்ச் சீழும் குருதியும் கசிந்து காணப்படும். கறையான் புற்றுப்போல மனிதரின் உருவத்தையே மாற்ற வல்ல கொடுமையான தொழுநோய் கொண்டவர்களைச் சொந்த மனைவி, மக்களே தொடு வதற்கு அஞ்சுவர்; அவர்களைத் தொலைவில் தள்ளியும் வைப்பர்.

அவ்வாறு புறக்கணிக்கப்பட்டுவரும் தொழுநோயாளிகளுக் கும் ஊன்றுகோலாக நின்று அன்னை தெரேசா உறுதுணை புரிகிறார்; அவர்களைத் தொட்டுத் தூக்கிக் குளிப்பாட்டித் துப்புரவு செய்து உடல்நலம் பேணுகிறார்; அவர்களும் வாழப் பிறந்தவர்களே என்னும் நம்பிக்கையையும் அவர் களுக்கு அவர் ஊட்டி வருகிறார்.

காப்பாற்றுவார் யாருமற்றுச் சாவோடு போராடும் நோயாளிகளுக்கென்று 'இறப்போர் நல இல்லம்' அமைக்கும் போதே தொழுநோயாளிகளுக்கும் தொண்டு புரியும் எண்ணம் அவரது நெஞ்சில் துளிர்விடத் தொடங்கிவிட்டது. அதற்கு அடையாளமாக ஒரு புதிய திட்டத்தைக் கல்கத்தா மாநகரில் அவர் செயற்படுத்த முனைந்தார்.

உலகெங்கணும் நான்கு கோடி பேர் தொழுநோய்க்கு ஆளாகியிருக்கலாம் எனக் கணிக்கப்பட்டுள்ளது; அவர்களுள் இந்தியாவில் மட்டும் இருபது நூறாயிரம் பேர்களுக்கு மேற் பட்டவர்கள் தொழுநோய் கண்டு நைந்து மடிகிறார்கள்.

இந்தியப் பெருநாட்டிலேயே கல்கத்தா தான் தொழு நோயாளிகள் மிகுதியாக வாழும் மாநகரம் எனக் கூறப்படுகிறது.

இந்நிலையில் அவர்களின் துயரக் கண்ணீரைத் துடைக்கும் நோக்கோடு, அவர்களுக்கென்று நன்கொடை திரட்டும் நன்னாள் ஒன்றை அன்னை தெரேசா தொடங்கி வைத்தார். 'தொழுநோயாளிகள் நன்கொடை நாள்' என்று அதற்குப் பெயரும் சூட்டினார். கல்கத்தாவின் வரலாற்றிலேயே தொழுநோயாளிகளின் நல்வாழ்வுக்காக முதன் முதல் இப்படி ஓர் அறப்பணி நாளைத் தோற்றுவித்த பெருமை அன்னை தெரேசா ஒருவரையே சாரும்.

அந்த நன்கொடை நாளில், அவரது இயக்கத்தைச் சார்ந்தவர்கள் உண்டியல்களை ஏந்திக்கொண்டு அந்தப் பெரிய நகரெங்கும் அலைந்து திரிந்து தேனீக்களைப்போல நிதியைத் திரட்டுவார்கள்; அந்த உண்டியல்கள்மீது 'தொழுநோயாளிகளை உங்கள் பரிவுள்ளத்தால் தொடுங்கள்!' என்னும் சொற்றொடர் எழுதி ஒட்டப்பட்டிருக்கும்; அது பார்ப்போர் நெஞ்சைத் தொடாமல் விடாது. அதைக் கண்ணுறும் ஏழைகளும் பணக்காரர்களும் தத்தம் வருவாய் நிலைக்கேற்ப வாரி வாரி வழங்குவார்கள். ஏழைகள் காசுகளையும், பணக்காரர்கள் காசோலைகளையும் உண்டியல்களில் போட்டு நிரப்புவார்கள்.

இவ்வாறு பெருமளவில் குவியும் நிதியைக்கொண்டு தொழு நோயாளிகளுக்கென்று தனியாக இல்லம் அமைக்க அன்னை தெரேசா எண்ணினார். முதலில் கல்கத்தாவின் புறநகர்ப் பகுதியைச் சார்ந்த கோப்ரா என்னும் இடத்தில் 'தொழு நோய் அகம்' ஒன்று தோற்றுவிக்கப்பெற்றது. அவரது அறப்பணி இயக்கத்தைச் சார்ந்த தொண்டர்கள் அருவருப்பான உடலுறுப்புகளைக் கொண்ட அந்நோயாளிகளை முகம் சுளிக்காமல் பேணிக்காத்தனர். தொடக்கத்தில் 150 தொழுநோயாளிகள் தங்கி ஆதரிக்கப்பட்டார்கள்.

பின்னர், கல்கத்தா மாநகர் வளர்ச்சித்திட்டப்படி கோப்ரா பகுதி அந்தப் பெருநகரின் ஒரு கூறாக இணைக்கப்பெற்றது.

அதுகாறும் மக்கள் நடமாட்டமே இல்லாமல் வெற்றிடமாய் வெறிச்சோடிக் கிடந்த அந்தப் பகுதியில் எல்லாத் தரப்பு மக்களுக்கும் குடியிருப்பு வீடுகள் கட்டும் திட்டம் ஒன்றை மாநகராட்சி தீட்டியது. இதனால் ஏனைய மக்களுக்கு இடையூறு ஏற்படாமல் இருக்கும்பொருட்டு அங்கிருந்த தொழுநோய் அகத்தை மாற்றும் நிலை நேர்ந்தது.

கல்கத்தாவுக்குக் கிழக்கே இருபத்தைந்து கி.மீ. தொலைவில் புதிய தொழுநோயாளர் இல்லம் ஏற்படுத்தப்பட்டது. அது 'டிட்டகார்ட் தொழுநோயாளர் இல்லம்' என வழங்கப் படுகிறது. தாழ்வாகக் கூரை வேயப்பெற்ற எளிய விடுதியே அது. அன்னை தெரேசாவின் அரிய அறப்பணித் திட்டங்களில் ஒன்றாகப் பல தொழுநோயாளிகளுக்கு மறுவாழ்வு தரும் மகிழ்ச்சிப் பூங்காவாக அது விளங்குகிறது.

உலகில் தொழுநோயாளிகளுக்கு வாழ்வளிக்கும் அறச் செயல்களில் இதற்கு முன்னரும் சில சான்றோர்கள் பாடுபட்டிருக்கிறார்கள்.

நம் இந்திய நாட்டின் விடுதலைக்காக அறப்போர்களில் ஈடுபட்டு அரும்பாடுபட்ட மகாத்மா காந்தியடிகள் தொழு நோயாளிகளைக் கண்டு மனம் உருகியவர்களுள் குறிப்பிடத் தக்கவர். அருவருப்பே அடையாமல் அவர்களுக்குப் பணி விடை செய்வதைப் பெரும் பேறாகவே எண்ணிக் கடமை யாற்றினார். படுத்திருக்கும் தொழுநோயாளியை அவர் பார்வையிடும் காட்சியைக் கொண்ட படங்களை அவரைப் பற்றிய நூல்களிலும் படத்தொகுப்புகளிலும் நாம் காண லாம். அவை எல்லாம் தொழுநோயாளிகளிடம் காந்தி யடிகள் கொண்டிருந்த கனிவான அருள் உணர்வுக்கு அழ கான அடையாளங்களாகும்.

அடுத்துக் குறிப்பிடத்தக்கவர் டாக்டர் ஸ்வைட்சர் என்பவர் ஆவார். ஜெர்மன் நாட்டில் தோன்றிய அவர் மருத்துவத் துறை வல்லுனராகவும் விளங்கினார். தென்னாப்பிரிக்கா நாட்டில் தொழுநோய்க் கொடுமைக்கு நீக்கிரோ மக்கள் பெரும்பாலோர் இரையாவதை அறிந்து அவர் அங்கே

போய்க் குடியேறினார்; தமது திறமை அனைத்தையும் வெளிப்படுத்தி அவர்களுக்கு மருத்துவம் அளித்தார். அவரது சீரிய பணியைப் பார்முழுதும் பாராட்டியது. 'தமிழ் மறை' என்னும் புகழுக்குரிய திருக்குறளை அவர் ஜெர்மன் மொழியில் பெயர்த்தெழுதிப் பெருமை பெற்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அவருக்குப் பிறகு தொழுநோயாளிகளுக்கு என்று ஓர் இல்லத்தை உருவாக்கத் தொண்டு புரிந்து அனைத்துலகும் புகழும் வண்ணம் புகழ் ஒளிவீசி நிற்பவர் அன்னை தெரேசா அவர்களே ஆவார்.

# 9. உலகம் தழுவும் ஒளிச்சுடர்!

கதிரவனின் ஒளிவெள்ளம் உலகம் முழுவதும் பாயவல்லது; பயன்களை விளைவிப்பது; உயிர்கள் அனைத்தையும் வாழ வைப்பது; அவற்றுக்கு வளமும் வழங்குவது. அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கமும் அவ்வாறே இன்று உலக நாடுகள் பலவற்றிலும் அணையா விளக்காக ஒளிவீசித் திகழ் கிறது. இருண்ட வீட்டில் விளக்கை ஏற்றுவதைப்போல ஆதர வற்ற—புறக்கணிக்கப்பட்ட பலருடைய வாழ்க்கையில் தன்னம்பிக்கை விளக்கை அழகாக எரியவிடுகின்றது.

உண்மையிலேயே ஒருவருடைய வீட்டில் விளக்கேற்றி வைக்கும் பணியையும் அன்னை தெரேசா ஒருமுறை செய் திருக்கிறார். ஆஸ்திரேலிய நாட்டில்தான் அந்த அரிய நிகழ்ச்சி நடைபெற்றது. அங்கே தமது இயக்கத்தைச் சார்ந்த மடம் ஒன்றை முதன்முதலில் நிறுவுவதற்காக அவர் மெல்போர்ன் நகர் போய்ச்சேர்ந்தார். இந்தியாவைப் போன்று ஆஸ்திரேலியா ஏழைகளின் குடிசைகளைக்கொண்ட நாடு அன்று; பரந்த நிலப்பரப்பை உடையதாக இருப்பினும் குறைந்த மக்கள் தொகையுடனும் நிறைந்த செல்வங்களுட னும் அது திகழ்கிறது. அங்கே நடைபாதைகளில் நலியும் பாட்டாளிக் குடும்பங்களையோ, கைவிடப்பட்ட கடும் பிணி யாளர்களையோ அவ்வளவாகக் காணமுடியாது. எனினும், வரம்புமீறி மதுவைக் குடித்துவிட்டு வன்முறைக் குற்றங்களில் ஈடுபட்டுச் சிறைக்குச் சென்று திரும்பியதால் தங்களுடைய வாழ்க்கையைத் தாங்களே அழித்துக்கொண்டு புறக்கணிக்கப் பட்ட சிற்சில மனிதர்களைப் பார்க்கலாம்.

### ஏற்றிய விளக்கு எரிகிறது

அத்தகைய குடிகாரக் கிழவர் ஒருவர் ஆதரவற்று அல்லல் உறுவதை அன்னை தெரேசா கேள்வியுற்றார்; அவரது

இல்லத்துக்குச் சென்றார்; துணை யாரும் இன்றித் தனிமை யில் வாடும் முதியவரைச் சந்தித்தார். அப்போது கிழவர் தங்கியிருந்த அறை தூசுகள் படிந்து சிலந்திகள் ஆங்காங்கே பெரும் வலைகள் பின்னும் அளவுக்கு அலங்கோலமாக இருந்தது.

''உங்கள் அறையை நான் துப்புரவு செய்யட்டுமா?'' என்று அன்னை தெரேசா கேட்டார். முதியவர் அதற்கு இசைந் தார். வீட்டைப் பெருக்கித் துப்புரவு செய்யும்போதே நீண்ட மேசையின் ஓரத்தில் சிறிய மின்விளக்கு ஒன்று அன்னை தெரேசாவின் கண்ணில் பட்டது. அது பல நாள் களாக ஏற்றப்படவில்லை என்பதைப் பார்த்தவுடனேயே அவர் தெரிந்துகொண்டார். எனவே, அதனை நன்கு துடைத்துவிட்டு, ''இந்த விளக்கை நீங்கள் ஏன் பயன்படுத் துவது இல்லை?'' என்று கேட்டார்.

முதியவரோ அவரது கேள்விக்கு விடையாகச் சில வினாக் களைத் திருப்பி எழுப்பினார்:

''யாருக்காக இந்த விளக்கை நான் ஏற்றவேண்டும்? என்னைப் பார்க்க யார் வருகிறார்? என் தனிமையை இந்த விளக்கு வெளிச்சம் விலக்கிவிடுமா?''

துயரச் சுமையைத் தாங்கமுடியாமல் வெளிவந்த இந்தச் சொற்கள் அன்னை தெரேசாவின் உள்ளத்தைத் தொட்டன. அவர் முதியவருக்கு ஆறுதலாக, ''சரி, உங்களைச் சந்திப்ப தற்கு எங்கள் அறப்பணி இயக்கத்தைச் சார்ந்த கன்னியர் இங்கே வருவர். அவர்கள் வந்தால் நீங்கள் இந்த விளக்கைத் தவறாமல் எரியவிடவேண்டும்,'' என்று கூறினார். அதன் பின்னர் அன்னை தெரேசா கல்கத்தாவுக்குத் திரும்பி விட்டார்.

மூன்று திங்கள்கள் சென்றன. ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த அறப்பணி இயக்கக் கன்னியரிடம் அன்னை தெரேசா விடம் அளிக்குமாறு மடல் ஒன்றை அந்த முதியவர் அனுப்பி யிருந்தார்; அதில்,

''என் மதிப்பிற்குரிய அன்னை அவர்களுக்கு,

உங்களுக்கு என் உளம் நிறைந்த நன்றி. நீங்கள் என் வீட்டில் ஏற்றிவைத்த விளக்கு இன்னமும் எரிந்துகொண் டிருக்கிறது!'' என்று எழுதியிருந்தார்.

அன்னை தெரேசா தனிமையில் தவித்த அந்த முதியவர் வீட்டில் மட்டுமா விளக்கை ஏற்றிவைத்தார்? தம்முடைய அறப்பணிகளால் எத்தனையோ கடைப்பட்ட மனிதர்களின் வாழ்க்கையில் எல்லாம் வண்ண விளக்குகளை ஏற்றிய வண்ணமே இருக்கிறார். அவர் ஆஸ்திரேலியாவில் மட்டு மன்று; உலகில் ஏழைகள் வாழும் எல்லா நாடுகளிலுமே விளக் கேற்றி வருகிறார்.

## 'நான் தாகமாக இருக்கிறேன்'

முதன் முதலில், தமது அறப்பணி இயக்கத்தைக் கல்கத்தா நகரில் தோற்றுவித்தபோது அந்த நகரத்தின் ஏழைகளுக்கும் பிணியாளர்களுக்கும் தொண்டு செய்யவேண்டும் என்னும் எண்ணமே அன்னை தெரேசாவிடம் ஏற்பட்டிருக்கவேண்டும். குடிசைப் பகுதிகளுக்கும் தொழுநோயாளிகளுக்கும் பெயர் பெற்று விளங்கும் கல்கத்தாவைத் தாண்டித் தாம் கடமை யாற்றக்கூடிய காலம் வரும் என்று அவர் கனவுகூடக் கண் டிருக்கமாட்டார். ஏனெனில், கையிலே சிறு தொகையும் இன்றி, 'லோரேட்டோ' கன்னியர் மடத்தைத் துறந்து வீதியிலே அடிவைத்தவர் அவர். தகுந்த பொருளாதார வலிமை இல்லாமல் எந்த ஓர் அமைப்பும் தழைத்துச் செழிக்க முடியாது. எனவே, வறிய நிலையிலேயே வறியவர்களுக் காகத் தொண்டு செய்யப் புறப்பட்ட அன்னை தெரேசா, தாம் ஆற்றப்போகும் அறப்பணி, உலகெங்கும் பரவும் என்று அப்போதே எண்ணியிருப்பார் என்பதற்கு இடம் இல்லை. என்றாலும், தன்னம்பிக்கையும் தளரா முயற்சியும் கொண்டு அவர் தொடங்கிய இயக்கம் பாரிலுள்ள பல்வேறு நாடுகளிலும் வேரோடிக் கிளைத்துத் தழைக்கலாயிற்று.

இந்தியாவிலேயே கல்கத்தாவைத் தாண்டி அறப்பணி இயக்கத்தினர் அடுத்துத் தொண்டு புரியச்சென்ற நகர் சாஞ்சி

ஆகும். அங்குள்ள கத்தோலிக்கக் குருமாரின் துணையோடு அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்க இல்லம் அங்கே தோற்றுவிக்கப்பெற்றது.

அதனை அடுத்து இந்தியத் தலைநகராம் புது டில்லியிலேயே தம் இயக்கத்தின் கிளையொன்றை ஏற்படுத்த அன்னை தெரேசா பெரிதும் விழைந்தார். அவரது விருப்பம் ஈடேறு வதற்குச் சுவிட்சர்லாந்து நாட்டின் தூதுவராக இந்தியத் தலைநகரில் பணியாற்றிய குத்தாத் என்னும் அறிஞர் துணை புரிந்தார். தமது நாட்டிலிருந்து தேவையான பண உதவி யைப் பெற்றுத்தருவதற்கும் அவர் முன்வந்தார். அதனுடன், அந்நாளில் இந்தியத் தலைமை அமைச்சராக இருந்த பண்டித ஜவகர்லால் நேரு அவர்களிடம் தமக்குள்ள நெருங்கிய நட்பைப் பயன்படுத்தி அவரிடம் அன்னை தெரேசா ஆற்றி வரும் அறப்பணிகள் குறித்தும் அந்தச் சுவிட்சர்லாந்து நாட்டுத் தூதுவர் சிறப்பாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். அவரது தொடர்பினால் சிறுவர் விடுதி ஒன்றைத் தமது இயக்கத்தின் சார்பில் புது டில்லியில் ஏற்படுத்துவது அன்னை தெரேசாவுக்கு எளிதாயிற்று.

அதன் தொடக்க விழாவில் கலந்துகொள்ளத் தம் நண்பர் வி. கே. கிருஷ்ணமேனன் அவர்களுடன் ஜவகர்லால் நேருவும் வந்திருந்தார். அவர்களை வரவேற்றுச் சிறுவர் இல்லத்தைச் சுற்றிக் காண்பித்த அன்னை தெரேசா வழிபாட்டுக் கூடத்தில் மாட்டப்பட்டிருந்த இயேசுநாதரின் திருவுருவைக் காட்டி, "இவர் என் தலைவர்," என்று குறிப்பிட்டார். அதன் கீழே "நான் தாகமாக இருக்கிறேன்," (I thirst) என்னும் சொற்கள் பொறிக்கப்பட்டிருந்தன. கிருஷ்ணமேனன் அவற்றையே திரும்பத் திரும்ப உரக்கப் படித்தார். வழிபாட்டுக் கூடத்தை விட்டு வெளியேறியதும் அந்தச் சொற்களுக்குரிய பொருள் என்னவென்று கேட்டார்.

"இயேசு பெருமான் சிலுவையில் அறையப்பட்டபோது நா வறண்டது. 'நான் தாகமாக இருக்கிறேன்' என்றார். இங்கே தண்ணீருக்காக ஏற்பட்ட 'தாகம்' எனப் பொருள்

கொள்வது உலக நடைமுறையை ஒட்டிய எளிய பொருள். ஆனால், இந்தச் சொற்களுக்கு வேறு ஆழமான பொருள் உண்டு. உலகில் நெடுங்காலமாக அன்புக்கும் ஆதரவுக்கும் ஏங்கும் கடைநிலையில் உள்ள ஏழை உள்ளங்கள் எண்ணற்றவை இருக்கின்றன. அந்த உள்ளங்களின் அன்புக்கும் ஆதரவுக்கும் உரிய ஏக்கத்தைத்தான் இயேசு பெருமான் உருவகப்படுத்திக் கூறியிருக்கிறார்; அவர்களுக்கு ஏற்படும் அந்த உள்ளத் தவிப்பைத்தான் தமக்கு உண்டான 'தாகம்' எனக் குறிப்பிட்டிருக்கிறார்,'' என்று அன்னை தெரேசா விளக்கம் அளித்தார்.

அதைக் கேட்டதும் இந்த அறப்பணித் தலைவியின் ஆழமான அறிவுத் தெளிவை உணர்ந்து, வி. கே. கிருஷ்ண மேனனும் பண்டித ஜவகர்லால் நேருவும் வியப்புக் கடலிலே ஆழ்ந்தார்கள்.

பின்னர், அந்தக் குழந்தைகள் இல்லத் திறப்பு விழா நிகழ்ச்சிகள் தொடங்கியபோது அன்னை தெரேசா தாம் ஆற்றிவரும் பணிகள் குறித்து ஓரளவு விளக்க விரும்புவதாகக் கூறினார். ஆனால், நேரு அவர்களோ, ''உங்கள் இயக்கத் தொண்டுகளைப்பற்றி நீங்கள் விளக்கவேண்டிய தேவை இல்லை. ஏனெனில், உங்களைப்பற்றியும் நீங்கள் புரியும் ஒவ்வொரு தொண்டைப்பற்றியும் நான் விரிவாகவே தெரிந்து கொண்டிருக்கிறேன். அப்படித் தெரிந்துகொண்டிருப்பதால் தான் இந்த நிகழ்ச்சியில் பங்குபெற நான் வந்திருக்கிறேன்'' என்று புன்னகையோடு கூறினார்.

இந்தியத் தலைமை அமைச்சரின் இந்தச் சொற்களே அன்னை தெரேசாவின் அறப்பணிகளுக்கு நிகரில்லாத புகழ் மாலைகளாக அமைந்து மகிழ்வித்தன.

### தமிழகத்தில் அறப்பணி இயக்கம்

தமிழ்நாடு அறவுணர்வுகளைப் போற்றுவதிலும் அறப் பணிகளை ஆற்றுவதிலும் தொன்றுதொட்டுப் பெருமை பெற்று விளங்கிவருகிறது. இங்கும் அன்னை தெரேசாவின்

அறப்பணி இயக்கத்தின் ஒளிக்கதிர்கள் மெள்ள மெள்ளப் படர்ந்துகொண்டிருக்கின்றன.

கோயம்புத்தூர், பஞ்சாலைகள் மிகுதியாக உள்ள தொழில் நகரம். பல்லாயிரக்கணக்கில் பாட்டாளித் தொழிலாளர்கள் இங்கே வாழ்கிறார்கள். சுற்றுவட்டத்தில் தேயிலைத் தோட்டங்களும் காஃபித் தோட்டங்களும் பசுமை மண்டிக் காட்சியளிக்கும். அங்கும் ஆயிரக்கணக்கில் தொழிலாளர்கள் அலுவல் புரிகின்றனர். அந்த ஏழைத் தொழிலாளர் குடும்பங்கள் பல நன்றியோடு கொண்டாடும் அளவுக்கு அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கக் கிளை ஒன்று கோயம் புத்தூர் நகரிலும் சுற்றுப்புறக் கிராமங்களிலும் தொண்டாற்றி வருகிறது.

தமிழ்நாட்டின் தலைநகரமாகிய சென்னை, இந்தியாவின் முப்பெரும் நகரங்களில் ஒன்று. பல்வேறு தொழில்களுக்கும், வாணிகங்களுக்கும் மையமாக விளங்கும் இது, மிகப் பெரிய துறைமுகப்பட்டினமும் ஆகும். உலகிலேயே இரண்டாவது மிக நீண்ட கடற்கரை அமைந்துள்ள பெருமையும் இந் நகருக்கு உண்டு. மிக அழகிய மாளிகைகள் வானைமுட்டும் அளவுக்கு இங்கே வளர்ந்துவருவதைக் காணலாம். ஆயினும், வயிற்றுக் கஞ்சிக்கு வழியில்லாமல் வாடுகின்ற ஏழைகளைக் கொண்ட குடிசைப் பகுதிகளுக்கும் இங்கே குறைவு இல்லை. சென்னையில் அழகான நெடுஞ்சாலைகளும் செல்கின்றன; அதே சாலைகளின் ஓரங்களில் மழையில் நனைந்து, வெயிலில் பொசுங்கும் நடைபாதைக் குடும்பங்களும் நிறைந்த எண்ணிக்கையில் வாழ்கின்றன. இங்ஙனம் புறத்தோற்றத்தில் பகட்டான காட்சிகளையும் அகத்தளவில் வறுமையின் காரிருளையும் சுமந்துநிற்கும் சென்னை மாநகரிலும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் அடக்கமாகப் பணியாற்றி வருகிறது; இங்குள்ள இராயபுரம் பகுதியில் அதன் கிளையொன்று அமைந்துள்ளது.

சென்னையை அடுத்துள்ள எண்ணூர் மிகப் பெரிய அனல் மின் நிலையம் எழுந்துள்ள ஊராகும்; ஆயிரக்கணக்கில்

ஏழைத் தொழிலாளிகள் வாழும் பகுதி. அங்கும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கக் கிளை தன் தொண்டினைப் புரிந்துவருகிறது.

காஞ்சிபுரம், சென்னையிலிருந்து எழுபது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க நகரம். பண்டை நாளில் பல்லவப் பேரரசர்களின் தலைநகராக இது விளங்கியது. திராவிடச் சிற்பக் கலையின் செழுமையை இங்குள்ள இருநூற்றுக்கும் மேற்பட்ட கோவில்களில் காணலாம். நேர்த்தி மிகுந்த நெசவுத் தொழிலில் தலைசிறந்து விளங்கும் இந்நகரம் பகட்டான பட்டுப் புடைவைகளுக்குப் புகழ் பெற்றுத் திகழ்கிறது. இதன் சுற்று வட்டத்தில் ஏழை நெசவாளிகள் எண்ணற்றோர் தறியோடு போராடுவதைப் பார்க்கலாம். இங்கும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் தன் கடமைகளைக் கனிவோடு நிறைவேற்ற முற்பட்டிருக்கிறது.

வேலூர், வட ஆர்க்காடு மாவட்டத்தின் தலைநகர். பழைமையான அரண்மனைக் கோட்டையைக் கொண்ட நகரம். இங்கும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கக் கிளை தொடங்கப்பட்டுள்ளது.

அமிழ்தினும் இனிய தமிழ் வளர்த்த பெருமைக்குரிய பெருநகரம் மதுரை. தமிழ்நாட்டில் சென்னைக்கு அடுத்தபடியாக மிகுதியான மக்கள் தொகையைக்கொண்ட மாநகரம் இது. சங்கம் கண்டு தமிழைத் தழைக்கச்செய்த பாண்டிய மன்னர்களாலும், பின்னாளில் நாயக்க மன்னர்களாலும் சிற்பக் கலையெழிலும் கட்டடக் கலையழகும் சிறந்து விளங்கும் இந்நகரில் நாற்புறமும் கோபுரங்களைக்கொண்ட மீனாட்சி கோவில் பார்க்கத்தக்கதாகும். இங்கும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் தன் அருட்கடமைகளை ஆற்ற முனைந்துள்ளது.

எனினும், தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில், அன்னை பணியின் இயக்கம் மெள்ள மெள்ளத்தான் வளர்ந்துவருகிறது.

''தமிழகத்திலிருந்து மிகப் பல இளைஞர்களும் இளம் பெண்களும் வேண்டும்'' என்று அன்னை தெரேசாவே ஒரு முறை கூறியிருப்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

**அயல் நாடுகளில் அன்னையின் இயக்கம்**

இந்திய நாட்டுக்கு வெளியேயும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்தின் ஒளிக்கதிர்கள் மெள்ள மெள்ளப் படரத் தொடங்கின. அவ்வாறு அவரது இயக்கத்தின் கிளை தோன்றிய முதல் அயல் நாடு, இலத்தீன் அமெரிக்க நாடு களில் ஒன்றான 'வெனிசுலா'வாகும். 1965ஆம் ஆண்டு சூலைத் திங்களில் அந்த முதல் வெளிநாட்டு மடம் ஏற்படுத் தப்பட்டது. அதனை அடுத்து அதே தென்னமெரிக்கக் கண்டத்திலேயே கொலம்பியா, பொலிவியா, பிரேசில் ஆகிய நாடுகளிலும் இல்லங்கள் திறக்கப்பட்டன.

அயல் நாடுகளில் இவ்வாறு இயக்கம் பரவி வரும்போது அன்னை தெரேசாவுக்கு உரோம் நகரிலிருந்தே அழைப்பு வந்தது. மேதகு போப் ஆண்டவர் அவர்களே அழைப்பு விடுத்திருந்தார். அதைக் கண்டு அன்னையார் பெருமிதம் கொண்டார்; பேரின்பமடைந்தார். போப் ஆண்டவர் உலகம் முழுவதிலும் உள்ள கத்தோலிக்கக் கிறித்தவ மக்கள் அனை வருக்கும் வணக்கத்திற்குரிய மாபெருஞ் சமயத் தலைவர். அவரது ஆட்சிப்பீடம் அமைந்த உரோம் நகர் ஒரு தனி நாடாகவே விளங்குகிறது. உலகம் எங்கணும் உள்ள கத்தோலிக்கக் கிறித்தவ சமயத்தின் திருச்சபைகள் அத்தனைக்கும் ஆட்சித் தலைவராகவும் போப் ஆண்டவர் திகழ்கிறார். அவரது ஒப்புதல் ஆணையைப் பெற்ற பிறகு தான் லோரேட்டோ கன்னி மடத்தைத் துறந்து வெளியே வந்து அன்னை தெரேசாவால் அறப்பணி இயக்கத்தைத் தோற்றுவிக்கமுடிந்தது. எனவே, பரந்த உலகெங்கும் சிறந்த மதிப்பினைப் பெற்றுத் திகழும் போப் ஆண்டவர் அவர்களே, தமது உரோம் நகருக்கு வந்து அறப்பணி இல்லம் அமைக்கு மாறு அழைப்பு விடுத்ததை ஒரு பெரும் பேறாகவே அன்னை தெரேசா எண்ணி மகிழ்ந்தார்.

அவரும் அவரது இயக்கத்தைச் சார்ந்த கன்னியரும் உடனே உரோம் நகர் சென்றனர். அதனைச் சுற்றிய புற நகர்ப் பகுதிகளில் வறுமை தாண்டவமாடி மக்களை வாட்டியது. அங்குள்ள குடிசைப் பகுதியிலேயே கன்னித் துறவியர் தங்கினர். ஏழைகளின் நடுவே ஏழைகளாகவே உண்டு, உடுத்து, உறங்கினர். பட்டினி கிடக்கும் மக்களின் பசியைப் போக்கப் பிச்சை எடுப்பதற்கும் வெட்கப்படாமல் இக் கன்னியர் கடைத் தெருவுக்குச் சென்றனர். பொது மக்கள் இவர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்றனர். இவர்களுள் பலர் ஐரோப்பாக் கண்டத்தைச் சார்ந்தவர்களாக இருந்த போதிலும், உரோம் நகர மக்கள் இவர்களை 'இந்தியச் சகோதரிகள்' என்றே அழைத்தனர். இவ்வாறு மேதகு போப் ஆண்டவரின் ஆட்சிப்பீடம் அமைந்த உரோம் நகரிலேயே அறப்பணி இயக்கத்தினர் ஆற்றிய அளப்பரிய தொண்டுகள், அன்னை தெரேசாவுக்கு மேலும் செல்வாக்கைத் தேடிக்கொடுப்பனவாக அமைந்தன.

உரோம் நகர் இல்லத்திற்குப் பிறகு, இயக்கம் கால்கொண்ட நாடு ஆஸ்திரேலியாவாகும். அந்நாட்டைச் சார்ந்த திரு. மக்கீ என்னும் செல்வர் ஒருமுறை இந்தியா வந்து அன்னை தெரேசாவைச் சந்தித்தார். ஒரு பெருந்தொகையை எடுத்து அவர் முன்னே மேசைமீது வைத்து, ''இது தொடக்கம் தான்'' என்றார். அந்தப் பணத்தை கையில் எடுத்துக் கொண்ட அன்னை தெரேசா, வேறுவகைகளில் அதைப் பயன்படுத்த விரும்பவில்லை. ஆஸ்திரேலியாவில் உள்ள புறக்கணிக்கப்பட்ட ஏழைகளுக்கும் பிணியாளர்களுக்கும் தொண்டுபுரியக்கூடிய சூழ்நிலைகளைப்பற்றிக் கேட்டறிய முற்பட்டுவிட்டார். திரு. மக்கீயுடன் மேற்கொண்ட உரையாடலைத் தொடர்ந்து 1969ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் முதன் முறையாக அவர் ஆஸ்திரேலியா சென்றார். அங்கே பழங்குடி மக்களிடையே பணியாற்றுவதற்குரிய திட்டங்களைத் தீட்டினார். பின்னர் அதே ஆண்டு செப்டம்பர்த் திங்களில் முதல் அறப்பணி மடம் பூர்க் என்னும் இடத்தில்

நிறுவப்பெற்றது. அதற்குப் பிறகுதான் மெல்போர்ன் நகரிலும் இயக்கக் கிளை 1970 ஏப்ரலில் ஏற்படுத்தப்பட்டது.

ஆஸ்திரேலியாவை அடுத்து மத்திய கிழக்கு நாடுகளிலும் அறப்பணி இயக்க இல்லங்கள் அமைக்கப்பெற்றன. அங்கே ஜோர்டான் நாடும் ஏமன் நாடும் முதலில் அத்தகைய பேற்றினைப் பெற்றன.

மத்திய கிழக்கு நாடுகள் 'ஒரே கடவுள்' என்னும் கொள்கையுடைய மூன்று சமயங்களின் பிறப்பிடமாகும். யூதம், கிறித்தவம், இசுலாமியம் ஆகிய மூன்று சமயங்களையும் சார்ந்த மக்களிடையே பணியாற்றுவது அறப்பணி இயக்கத்தவருக்கு ஒரு புதிய பட்டறிவையே தந்து உவகையூட்டியது.

### துணைவர்கள், உடன்-உழைப்பாளர்கள்

நெடுமரம் ஒன்று நீண்டகாலம் நிலைத்து நின்று நிழல் கொடுக்கவும் பழம் வழங்கவும் அதன் ஆணிவேர் ஆழமாக மண்ணில் வேரோடினால்மட்டும் போதாது; அதனைச் சுற்றிலும் எண்ணற்ற சல்லிவேர்களும் துணை நிற்கவேண்டும். அவ்வாறுதான் அறப்பணி இயக்கத்தின் ஆணிவேராக அன்னை தெரேசா விளங்குகிறாரெனில் அவருக்குத் துணையாகப் பல்லாயிரம் தொண்டர்கள் உலகெங்கணும் பணியாற்றுகிறார்கள். அவர்களுள் இரண்டு வகையினர் உண்டு. இரவு–பகல் எந்த நேரமும் அறப்பணி இயக்கத்தின் வேலைகளிலேயே தங்களை முழுமையாக ஈடுபடுத்திக்கொள்பவர்கள் ஒரு வகையினர்; தங்களுக்குக் கிட்டும் ஓய்வு நேரங்களில்—விடுமுறை நாள்களில் அவ்வப்போது இயக்கப் பணிகளைப் புரிந்துவிட்டுத் திரும்பிச் செல்கின்றவர்கள் இன்னொரு வகையினர். முன்னவர், துணைவர்கள் எனச் சொல்லப்பெறுகிறார்கள்; பின்னவர், உடன்-உழைப்பாளர்கள் (Co-workers) என அழைக்கப்பெறுகின்றனர்.

தமது இயக்க வளர்ச்சிக்குப் பண உதவி செய்பவர்களை அன்னை தெரேசா வரவேற்கிறார் என்றாலும் அவர்களை

விடத் தங்கள் உடல் உழைப்பைத் தந்து பணிபுரிய முன் வருகிறவர்களையே அவர் பெரிதும் விரும்புகிறார். அவரது எண்ணப்படியே முழுநேர உழைப்பையும் பகுதிநேர உழைப்பையும் இயக்கத்திற்குத் தருவதற்காக வந்தவர்களே இந்தத் துணைவர்களும் உடன்-உழைப்பாளர்களும் ஆவர்.

புண்ணுக்குக் கட்டுப்போடும் துணிகளை உருவாக்குதல், மருந்தகங்களுக்குத் தேவையான சில்லறைப் பொருள்களைத் திரட்டுதல், சிறுவர்—சிறுமியருக்குத் தேவையான கல்விச் சாலைப் பொருள்கள், விளையாட்டுப் பொருள்கள் முதலான வற்றைச் சேமித்தல், நோயாளிகளுக்கு மருத்துவம் புரிவதில் துணை நிற்றல், அவர்களுக்குத் தேவையானவற்றைத் தேடித் தருவதில் விரைந்து செயலாற்றுதல் முதலான அலுவல்களை இவர்கள் மேற்கொள்கிறார்கள். இயக்கத்தின் சார்பில் இல்லத் திறப்பு விழாவோ, வேறு நிகழ்ச்சிகளோ நிகழவேண்டுமாயின், அந்த இடங்களைத் தோட்டிபோலத் துப்புரவு செய்து அத்தனை ஏற்பாடுகளையும் முறையாகச் செய்து முடிப்பவர்களும் இவர்களே.

அறப்பணி இயக்கத்தில் முழுமூச்சாகத் தம்மை ஒப்படைத்துக்கொள்ள முதன்முதல் அன்னை தெரேசாவிடம் இணைந்தவர் சுபாஷிணி தாஸ் என்று முன்னர்க் குறிப்பிட்டுள்ளோம். அவரைப் போன்றே 'துணைவர்' நிலையில் தொண்டாற்றுவதற்கு முதன்முதலில் முன் வந்தவர், செல்வி 'ழக்ளின் தெ தெக்கர்' என்பவர் ஆவர். இவர் பெல்ஜியம் நாட்டைச் சார்ந்த பெண்மணி. இவரே ஒரு நோயாளி; பதினேழு முறை அறுவை மருத்துவத்துக்கு ஆளானவர். ஆயினும், தம்மைப்போன்ற நோயாளிகளுக்குப் பணிவிடைகள் புரிவதையே இன்பப் பேறாக இவர் எண்ணி உழைக்கின்றார்.

''அன்பர் பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்ப நிலை தானேவந் தெய்தும் பராபரமே''

என்பது தாயுமானவர் தூய வாக்கன்றோ? அறப்பணி இயக்கத்தால் உடல்நலன் தேறிப் பயன் அடைந்த நோயாளி களும், புகலிடம் அளிக்கப் பெற்ற கடைநிலையாளர்களும்

அந்த இயக்கப் பணிகளுக்கே தங்களை ஒப்படைத்துக் கொண்டு உழைப்பதற்காக ஓர் அமைப்பை இந்தப் பெல்ஜியம் பெண்மணி உருவாக்கினார். இதன் வாயிலாகப் பல துணை வர்கள் அன்னை தெரேசாவின் அடிச்சுவட்டில் தொண் டாற்ற முன்வந்திருக்கிறார்கள். முதலில் இரண்டு ஆண்டுகள் மட்டுமே செல்வி ழக்ளின் தெ தெக்கர் இந்தியாவில் பணிபுரிந் தார். அவரது உடல்நிலை நலிவுற்றதால் தம் தாயகமான பெல்ஜியத்துக்குத் திரும்பிச் சென்றுவிட்டார். எனினும், அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்துக்குத் துணை யாக அவர் ஆற்றத்தொடங்கிய தொண்டு எவ்வகையிலும் நலிவடையவில்லை.

அவரைப் போன்றே அறப்பணி இயக்கத்துக்குத் துணை நிற்கும் உடன்-உழைப்பாளர்களுள் முதன்மையான வராகக் குறிப்பிடத்தக்கவர் திருமதி ஆன் பிளைக்கி. ஆண்டு தோறும் இயேசுநாதர் பிறந்த நாள் விழாவின்போது ஒரு விருந்து நடத்துவது அன்னை தெரேசாவின் வழக்கம். அப்போது சிறுவர்—சிறுமியர்க்கு விளையாட்டுப் பொருள் களை அவர் பரிசுகளாக அளிப்பார். அத்தகைய விளை யாட்டுப் பொருள்களைத் தமது சொந்த முயற்சியில் திரட்டி அவரிடம் ஒப்படைப்பதற்கு ஆன் பிளைக்கி முன்வந்தார். பொதுப்பணி புரிவதில் அவருக்குள்ள ஆர்வத்தைப் புரிந்து கொண்ட அன்னை தெரேசா வேறு சில பொறுப்புகளையும் மேற்கொள்ளுமாறு அவரைத் தூண்டினார். முதலில் இயேசு நாதர் பிறந்த நாளில் கிறித்து சமயக் குழந்தைகளுக்கு விளை யாட்டுப் பொருள்கள் மட்டுமன்றிப் புத்தாடைகள், காலணிகள் வாங்குவதற்கும் பணம் திரட்டித்தருமாறு கேட்டுக்கொண்டார்; அடுத்து, இசுலாமியக் குழந்தைகளுக் கும் இந்துக் குழந்தைகளுக்கும் பொருள்கள் வாங்க நிதி திரட்டுமாறு வேண்டினார். பின்னர், தொழுநோயாளிகள் பணிக்காக நன்கொடை திரட்டும் பொறுப்பையும் ஆன் பிளைக்கியிடம் அன்னை தெரேசா ஒப்படைத்தார். இப்படித் தான் 'உடன்-உழைப்பாளர்' (Co-workers) அமைப்பு 1954 முதல் உருவெடுத்தது.

அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் என்னும் பெரிய ஆல்மரத்தின் நெடிய விழுதுகளுள் ஒன்றாகவே இந்த 'உடன்-உழைப்பாளர்' அமைப்பும் துணை நிற்கிறது. கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவ மணிகள் ஆகியோர் தங்கள் விடுமுறைக் காலங்களை வீணாக்காமல் இந்த அமைப்பில் சேர்ந்து தொண்டு செய்கிறார்கள். குடும்ப வாழ்க்கையில் உள்ள கணவன்—மனைவியரும் தங்கள் அலுவல் நேரந் தவிர ஓய்வு வேளைகளில் இதில் பங்கு கொண்டு உழைக்கிறார்கள். பொருள் வளம் இருந்தும் மன அமைதி இழந்த செல்வர்களும் உடன்-உழைப்பாளர் களாக முழுமையாகத் தங்களை ஈடுபடுத்திக்கொண்டு பணி யாற்ற முன்வருகிறார்கள். பல்வேறு நாட்டவரும், பல மொழியாளர்களும், பல இனங்களைச் சார்ந்தவர்களும், பல சமயத்தவர்களும் எத்தகைய வேறுபாடும் இன்றி இந்த அமைப்பிலே தங்களை இணைத்துக்கொண்டு, நோயாளி களுக்கும், திக்கற்ற சிறுவர்க்கும், ஏனைய கடைப்பட்ட மாந்த ருக்கும் தம்மாலான கடைமைகளைப் புரிகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. உலகில் எந்தெந்த நாடுகளில் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் உள்ளதோ அங்கெல்லாம் உடன்-உழைப்பாளர்களும் பெரும்பாலும் ஊழியம் புரி வார்கள்.

தங்கள் சொந்தக் குடும்பக் கடமைகளை மறக்காமலே எவரும் உடன்-உழைப்பாளராக உழைக்கலாம். பலதரப் பட்ட துறைகளைச் சார்ந்தவர்களும் தங்கள் ஓய்வு நேரங் களில் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்தில் சேர்ந்து ஏழைகளிடம் பரிவு காட்டவேண்டும் என்பதே இதன் நோக்கம். பண வசதி படைத்தவர்களும் இந்த அமைப்பில் இணைந்துகொள்கிறார்கள். எனினும், அன்னை தெரேசா, அவர்களிடம் பொருள் கொடையை எதிர்பார்க்கவில்லை; உழைப்புக் கொடையையே எதிர்பார்க்கிறார்.

இந்தியாவில் மிகப் பெரிய செல்வக் குடும்பங்களில் பிர்லா அவர்களின் குடும்பமும் ஒன்று. அவருடைய அருமை மகள் ஒருமுறை நோய்வாய்ப்பட்டபோது, அன்னை தெரேசாவைப்

பார்க்கவேண்டும் என்னும் ஆவல் கொண்டார். அவரது விருப்பத்தை நிறைவேற்ற அன்னை தெரேசா சென்றார். அப்போது அந்தப் பெண்மணி, ''உங்கள் அறப்பணி இயக் கத்திற்காக இந்தப் பணத்தை வைத்துக்கொள்ளுங்கள்,'' என்று கூறி, பதினைந்தாயிரம் ரூபாவுக்குக் காசோலை தந்தார். அத்துணைப் பெருந்தொகையை நன்கொடையாக அளித்த அந்த நங்கையிடம் அன்னை தெரேசா என்ன கேட்டுக்கொண்டார் தெரியுமா?

''எனக்குப் பணம் பெரிது அன்று; நீ உடல் நலம் தேறிய வுடன் உன் ஓய்வு நேரத்தில் ஏழைகளுக்காக உழைக்க வேண்டும். அதையே நான் பெரிதும் விரும்புகிறேன்,'' என்றார்.

ஒருமுறை கல்லூரி மாணவியர் சிலர் அன்னை தெரேசா வைக் காண வந்தனர். அவர் ஆற்றிவரும் அறப்பணிகளுக் காக அவரைப் பாராட்டுவதற்காக அவர்கள் வந்தார்கள். ஆனால், அவர்களை நோக்கி, ''வரும் ஞாயிற்றுக்கிழமை தில்ஜாலா என்னும் இடத்தில் மனநோய்கொண்ட குழந்தை களுக்காக உங்கள் நேரத்தைச் செலவிடமுடியுமா?'' என்று அன்னை தெரேசா அன்போடு கேட்டுக்கொண்டார். அவரது அன்புக் கட்டளையை அக்கல்லூரி மாணவியரால் எவ்வாறு மீறமுடியும்? இவ்வாறுதான் ஊக்கமூட்டி 'உடன்-உழைப் பாளர்கள்' பலரை ஈர்க்கின்ற பேராற்றலாகவும் அவர் விளங்குகிறார்.

'உடன்-உழைப்பளார்' அமைப்பு, அறப்பணி இயக்கத் தின் பெருமைக்குரிய ஒரு கடமை அணி என்பதில் ஐயப் பாடே இல்லை.

### அறப்பணியில் சகோதரர் ஆண்ட்ரு

பெண் குலத்தின் பேரொளியாகத் திகழும் அன்னை தெரேசா தமது அறப்பணி இயக்கத்தின் முழுமையான தொண்டர்களாகக் கன்னிப் பருவத்திலேயே 'துறவு' நிலை மேற்கொண்ட பெண்களையே இணைத்துக்கொண்டு பணி

யாற்ற முற்பட்டார். ஆனால், அவரது இயக்கத்தால் பரிவு காட்டப்படுகிறவர் பெண்டிர்மட்டும் அல்லர்; ஆடவரும் காக்கப்படுகின்றனர். எனவே, தொண்டு மனப்பான்மை யுடைய ஆடவரின் துணையும் இயக்கத்திற்குத் தேவை ஆயிற்று.

இந்நிலையில், ஆஸ்திரேலிய நாட்டைச் சார்ந்த கிறித்து சமயத் துறவியான சகோதரர் ஆண்ட்ரூ என்பவர் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்தில் ஈடுபட்டுத் தொண்டாற்ற முன்வந்தார். அவரது தலைமையில் 1963ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 23ஆம் நாளில் 'ஆண் உடன் பிறப்புகள் அறப்பணி இயக்கம்' (Brothers of Charity) தோற்றுவிக்கப்பெற்றது. அவரது அரிய முயற்சியால் ஆண் தொண்டர்களுக்கான இந்த அமைப்பு உறுதியாகவும் பரவலாகவும் வளர்ந்து பல்வேறு அறப்பணிகளை ஆற்றி வருகிறது.

குடிசைகளில் வாழும் ஏழை மக்களிடையே கல்வி விளக்கை ஏற்றிவைத்தல், இறப்போர் நல இல்லத்திலும் தொழு நோயாளிகள் இல்லத்திலும் ஆண் நோயாளிகளுக்கு ஊன்று கோலாய் உதவிபுரிதல், ஏனைய கடைப்பட்ட மக்களுக்குக் கைகொடுத்துத் தூக்கிவிடுதல் முதலான நற்பணிகளை இந்த 'ஆண் உடன் பிறப்புகள் இயக்கம்' புரிந்துவருகிறது. அவற்றுடன் நில்லாமல் வியட்நாம் போரில் படுகாயம் உற்ற வர்களுக்குப் பரிவு காட்டுவதிலும் இவ்வியக்கம் நிகரற்ற தொண்டுபுரிந்தது.

அன்னை தெரேசாவுக்கு சகோதரர் ஆண்ட்ரூவிடம் அளவற்ற நன்மதிப்பு உண்டு; அவரைத் தமது இயக்கத்தின் இன்றியமையாத தூணாகவே எண்ணிப் போற்றுகிறார்.

# 10. நாடிவந்த நன்கொடைகள்

வறியவர்களை வாழவைக்கும் வள்ளல் பண்பு மனிதப் பண்புகளிலேயே மாண்புடைய ஒன்றாகும். அவ்வாறு கொடை வள்ளல்களாகத் திகழ்வோரைக் குன்றின்மேலிட்ட விளக்காக மன்பதை என்றென்றும் கொண்டாடிப் போற்றும். அத்தகைய கொடைவள்ளல்களாகத் தமிழகத்தில் எண்ணற்றோர் இருந்திருக்கின்றனர். முல்லைக்குத் தேர் ஈந்த பாரி, மயிலுக்குப் போர்வை அளித்த பேகன், புலவர் ஒருவரின் வறுமையைப் போக்கத் தன் தலையையே தரத் துணிந்த குமணன் முதலானோர் வரலாற்றில் அழியா இடம்பெற்றுள்ள வள்ளல்களில் சிலர் ஆவர்.

'இல்லை' என வருவார்க்குத் தம்மிடம் இருக்கின்ற பொருளை இடுகின்றவரே உயர் குலத்தவர் என்றும், ஈயாதவர் இழிகுலத்தவர் என்றும் அவ்வையார் அழுத்தமாக எடுத்துரைத்துள்ளார்.

''சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.''

என்பது அவரது அருமையான பாடல்.

இத்தகைய வள்ளல் பண்பை வளர்க்கின்ற பணியிலும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கம் ஈடுபட்டுள்ளது எனின் மிகையன்று. ஏனெனில், இரக்கம் பொங்கும் இதயம் படைத்தவர்கள் நல்கும் நன்கொடைகளை நம்பித்தான் அவரது தொண்டுப் பயணம் தொடங்கியது; இன்றும் தொடர்கிறது. ஏழைகளாயினும், செல்வராயினும் அவரவரின் வருவாய் நிலைக்கேற்ப வாரி வழங்கப்பெறும்

நன்கொடைகளே, இந்த இயக்கத்தின் அச்சாணி எனவும் கூறலாம்.

**விந்தை நிகழ்ச்சிகள்**

கல்கத்தா 'மோத்திஜில்' சேரியில் முதன்முதலில் அடி வைத்துப் பள்ளி ஒன்றை நிறுவியபோது அன்னை தெரேசா வின் கையில் ஐந்து ரூபா மட்டுமே இருந்தது. அதன் பின்னர், அவரது தன்னலமற்ற தொண்டினைக் கண்டவர்கள் தாமாகவே அவருக்கு நன்கொடைகள் நல்க முன்வந்தார்கள். ஒரு திறந்தவெளியில் குடிசைகளுக்கிடையேதான் அவரது முதல் பள்ளி தொடங்கியது; அப்போது அங்கே எழுதுவதற் குக் கரும்பலகையோ, அமர்வதற்கு நீண்ட பலகையோ, நாற் காலிகளோ இல்லை. அரிச்சுவடி படிக்கும் குழந்தைகளுக்கு வங்காளி மொழி எழுத்துகளைத் தரையில் உள்ள புழுதியில் எழுதித்தான் அவர் கற்பித்திருக்கிறார். பிறகு ஒருவர் மேசை ஒன்றை நன்கொடையாகத் தந்தார். அதனை யடுத்து நாற்காலிகளும், கரும்பலகையும் அன்பளிப்புகளாக வந்தன. இப்படித் தொண்டின் தொடக்க நிலையில் அவர் அல்லல் அடைந்தபோது, ஒருநாள் ஒருவர் சிறுதொகை எடுத்து நீட்டி னார். அதைக் கண்டு வியப்புற்ற அன்னை தெரேசா, ''எதற்கு இந்தப் பணம்?'' என்று கேட்டார். அதற்கு அந்தக் கொடையாளரோ, ''ஒரு பள்ளி அமைக்க . . .'' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அவரது அறச்செயல் அன்னை தெரேசாவின் உள்ளத்தில் புதியதோர் ஆர்வத்தைத் தோற்றுவித்தது. 'நாமும் இப்படி நன்கொடைகள் திரட்ட முற்பட்டால் இன்னும் பெரிய நற்பணிகள் செய்யலாம்போல் இருக்கிறதே!' என்று அவர் எண்ணினார். அந்த ஆர்வத்தின் உந்தல் தந்த ஊக்கமே 'இறப்போர் நல இல்லம்' போன்ற பெரிய திட்டங்களை அவர் தீட்டுவதற்குத் தூண்டுகோலாய் அமைந்தது.

ஆயினும், பணத் தட்டுப்பாடு அவ்வப்போது எழுந்து அன்னை தெரேசாவையும் அவரது அறப்பணி இயக்கத்தை

யும் அலைக்கழிக்கச் செய்தது. சில நாள்களில் உணவுக்குத் தேவையான அரிசி இன்றியும் அவர்கள் வாடியிருக்கிறார்கள். கோமஸ் உடன் பிறப்பாளர் இல்லத்தில் குடியிருந்தபோது பட்டினித் துன்பத்தைப் பல நாள்கள் அவர்கள் சுமக்க நேர்ந்திருக்கிறது. அத்தகைய நெருக்கடி நேரங்களில், ''கோமஸ், கையிருப்பில் அரிசி இல்லை; இரண்டு அல்லது மூன்று படி கொடுத்து உதவமுடியுமா? கடனாகவே தாருங்கள்; திருப்பித் தந்துவிடுவேன்,'' என்று வீட்டுக்காரருக்கு அன்னை தெரேசா ஒரு குறிப்பு அனுப்புவார்.

அந்தக் குறிப்பைப் பார்த்ததும் மைக்கேல் கோமஸுக்கு அழுகை பீறிட்டுக்கொண்டுவரும். உடனே அவர் அரிசியைக் கொடுத்து அனுப்பிவிடுவார். அன்னை தெரேசாவும் பின்னர்த் திருப்பித் தந்துவிடுவார்.

வேறொரு தடவை வியத்தகு நிகழ்ச்சி யொன்று நடைபெற்றது. கையிருப்பில் இருந்த அரிசி முழுவதும் தீர்ந்துவிட, 'இனி நாம் பட்டினிதான் கிடக்கவேண்டும்' என்று கன்னித் துறவியர் கவலையில் ஆழ்ந்திருந்தனர். அப்போது அதுகாறும் அவர்களுக்கு நேரிடையாக அறிமுகமே ஆகாத பெண்மணி ஒருவர் அரிசி மூட்டையுடன் அவர்கள் முன்னே வந்து நின்றார். அன்னை தெரேசாவின் அருட் செயல்களைக் கேள்வியுற்றுத் தாமும் ஏதாவது தரவேண்டும் என்னும் எண்ணத்துடன் அவர் வந்திருக்கிறார். அவர் கொண்டுவந்திருக்கும் அரிசி, தங்களது ஒரு நாளைய உணவுக்குப் போதுமானதாக இருக்குமா என்று அளந்து பார்க்கும் ஆர்வத் துடிப்பு கன்னித் துறவியருக்கு ஏற்பட்டுவிட்டது. தங்களிடமிருந்த தகரக் குவளையால் மூட்டையிலிருந்த அரிசியை அளந்தார்கள். அவர்கள் எத்தனை பேர் இருந்தார்களோ அத்தனை பேருக்கும் எவ்வளவு தேவையோ அவ்வளவு அரிசி அந்த மூட்டையில் மிகச் சரியாக இருந்தது. அதைக் கண்டு அவர்கள் எல்லாருமே திகைப்புக் கடலில் ஆழ்ந்தார்கள். இப்படித் தேவைக்குச் சரியான அளவிலேயே மூட்டை அரிசி இருப்பதாக அன்னை தெரேசா கூறியதும்

அந்தப் பெண்மணிக்கும் ஒரே திகைப்பாகப் போயிற்று. 'இந்த விந்தை எப்படி நிகழ்ந்தது?' என்று அவர் கண் கலங்கி வியந் தார்.

மழைக்காலத்தின்போது இன்னொரு விந்தை நிகழ்ச்சி நடந் தது. நோயாளிகள் படுத்துக்கொள்வதற்குரிய மெத்தைகள் பழுதடைந்து கிழிந்துவிட்டன. தாங்கமுடியாத குளிரில் தகுந்த சிறு மெத்தைகள் இல்லாமல் அவர்களைக் கிடத்த வேண்டியிருக்கிறதே என்று அன்னை தெரேசா வருந்தினார். உடனே ஒரு மாற்று ஏற்பாடு செய்ய முற்பட்டார். தாம் தலைக்கு வைத்துக்கொள்ளும் தலையணையில் உள்ள பஞ்சுப் பொதியை எடுத்து மெத்தைத் துணிகளில் வைத்துத் தைத்து விட எண்ணினார். அதற்காக நன்றாக இருந்த தமது தலையணையையே கிழித்துவிட முனைந்தார். அதற்குள் திடீரென்று அழைப்பு மணி அடித்தது. சில நொடிகளில் ஒரு மனிதர் அவரைச் சந்திப்பதற்கு வந்தார். அவர் வெறுங் கையுடன் வரவில்லை; சில படுக்கை மெத்தைகளையும் பாய்களையும் கொண்டுவந்திருந்தார். தமக்கு வெளிநாடு ஒன்றில் அலுவல் கிடைத்திருப்பதாகவும், கல்கத்தாவை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால் தம்மால் தரமுடிந்த அந்தப் பொருள்களைத் தந்துவிட்டுப் போகவே தாம் வந்திருப்பதாகவும் அவர் கூறினார். அவரைக் கண்டதும் அன்னை தெரேசாவும் அவரது அறப்பணி இயக்கக் கன்னி யரும் அடைந்த திகைப்புக்கு அளவே இல்லை.

### எல்லாச் சமயத்தவரும் ஈந்த நன்கொடை

இவ்வாறு நன்கொடை அளிக்க முன்வந்தவர்கள், பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்களாகவும் இருந்தார்கள். அன்னை தெரேசா ஒரு குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர் சமய வெறியோடு நடக்கவில்லை என்பதை இந்த நன்கொடைகள் மேலும் மெய்ப்பிக்கின்றன. இதற்கு எடுத்துக்காட்டாக எத்தனையோ நிகழ்ச்சிகளைக் கூறலாம்.

பார்ப்பனர் குலத்தைச் சார்ந்த ஆடவர்கள் தங்கள் வேத சமயத்தை விளங்கிக்கொண்டதற்கு அறிகுறியாக இளம் பருவத்திலேயே பூணூல் அணிந்துகொள்வதை ஒரு சடங்காக நடத்திவருகின்றனர். ஒருமுறை அப்படித் தங்கள் மகனுக்குப் 'பூணூல் விழா' நடத்திய ஒரு பார்ப்பனக் குடும்பத்தினர் அன்னை தெரேசாவிடம் வந்தனர்; தங்களுடைய மகனுக்கு நடைபெற்ற சடங்கினை ஒட்டி ஒரு குறிப்பிட்ட தொகையைக் காசோலை வடிவில் தந்து, குழந்தையை வாழ்த்தியருளுமாறு வேண்டிக்கொண்டனர். தாங்கள் வேறொரு சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தும், அறப்பணிகள் ஆற்றும் அன்னை தெரேசாவிடம் அவர்களுக்கிருந்த பெருமதிப்பையே அந்த நன்கொடை புலப்படுத்தியது.

அவ்வாறே இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர்களும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்துக்கு நன்கொடைகளை நல்கியிருக்கிறார்கள். தாங்கள் பின்னிய பனியன்கள் போன்றவற்றையும், தைத்த ஆடைகளையும் எண்ணற்ற இசுலாமியப் பெண்கள், மற்றவர்க்குப் பயன்படும் வண்ணம் அன்னை தெரேசாவிடம் அன்பளிப்புகளாக வழங்கியுள்ளார்கள். செல்வச் செழிப்புள்ள இசுலாமிய அதிகாரி ஒருவர் தம் மனைவியுடன் வந்து தமக்கு உரிமையுள்ள பண்ணைத் தோட்டத்தையே அறப்பணி இயக்கத்துக்கு நன்கொடையாக அளிப்பதாக அன்னை தெரேசாவிடம் கூறினார். தற்போது அறப்பணி இயக்கத்தின் தலைமைப் பீடமாக உள்ள 'அன்னை இல்லம்' அமைந்துள்ள பெரிய வீட்டின் மனைக்கட்டுப் பகுதியும் ஓர் இசுலாமியப் பெருமகன் அன்பளிப்பாக வழங்கியதே ஆகும்.

மேற்கு வங்கத்தின் முதலமைச்சராக ஆட்சிபுரிந்த டாக்டர் பி. சி. ராய் அவர்கள் அன்னை தெரேசாவிடம் வைத்திருந்த பெருமதிப்புக் குறித்து முன்னரே அறிந்திருக்கிறோம். அவர், பலதெய்வ வணக்கத்தையும் உருவ வழிபாட்டையும் ஏலாதவர். 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்பது தமிழ்நாட்டுச் சமயச் சான்றோர் திருமூலர் அறிவுறுத்திய இறைநெறியாகும். இதே கொள்கையைக் கொண்ட கடவுள்

வழிபாட்டு இயக்கம் ஒன்றை வங்காள மாநிலத்தின் சீர் திருத்தச் செம்மலான இராசா ராம் மோகன் ராய் தோற்று வித்தார். அதற்குப் 'பிரும்ம சமாசம்' எனப் பெயர். அந்த 'ஒரே கடவுள் இறைநெறி இயக்க'த்தைச் சார்ந்தவரே டாக்டர் பி. சி. ராய் அவர்கள். தாம் அவ்வாறு வேறொரு நெறியைப் பின்பற்றுகிறவராக இருந்தாலும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்க வளர்ச்சியில் அவர் மிகுந்த அக்கறை செலுத்தினார்; ஒரு மாநிலத்தின் முதலமைச்சர் என்னும் முறையில் அரசின் சார்பில் செய்யக்கூடிய உதவிகள் கிடைக்க வழிவகுத்ததோடு அவர் நிற்கவில்லை. தனிப்பட்ட முறையில் தமக்கு உரிமையுள்ள பொருள்களையும் நன் கொடைகளாக அவர் அளித்திருக்கிறார்.

அவர் ஒருமுறை அன்னை தெரேசாவிடம், ". . . என் னுடைய பணத்தை யார் யாரோ களவாடிச் செல்கிறார்கள். எனவே, உங்களுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு பணத்தையும் என்னிடமிருந்து எடுத்துக்கொள்ளுங்கள். உங்களுக்கு எது மிகச் சிறந்ததாகத் தோன்றுகிறதோ அந்த முறையிலேயே உங்கள் இல்லங்களை நடத்துங்கள். நீங்கள் என் பணத்தை எப்படிச் செலவழித்தாலும் அதற்கு நான் எந்தக் கணக்கும் கேட்கமாட்டேன். உங்களை நான் முழுமை யாக நம்புகிறேன்," என்று மனம் திறந்து கூறியுள்ளார்.

இதிலிருந்து 'பிரும்ம சமாச' நெறியைப் பின்பற்றிய டாக்டர் பி. சி. ராய் அவர்கள், கத்தோலிக்கக் கிறித்தவ சமயத்தவரான அன்னை தெரேசா அவர்களிடம் எத்துணை ஆழமான நம்பிக்கை வைத்திருந்தார் என்பது இனிது விளங்கு கிறது அன்றோ?

குப்தாவின் கொடை

அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்துக்கு அவ்வப் போது நன்கொடை வழங்குவோரில் டாக்டர் குப்தா என் பவரும் ஒரு குறிப்பிடத்தக்க பெருமகன் ஆவார். நெஞ் சத்தை நெகிழவைத்த ஒரு நிகழ்ச்சிதான் அவரை அவ்வாறு தனிசிறந்த நன்கொடையாளராக மாற்றியது. செல்வாக்

குள்ள குடும்பத்தைச் சேர்ந்த இளம்பெண் ஒருத்தி மகப் பேற்றுக்காக அவரது மருத்துவ மனையில் கொண்டுவந்து சேர்க்கப்பெற்றாள். அவளோ திருமணம் ஆகாமலே தாய்மை நிலையை எய்திவிட்டாள். அவள் பெற்றெடுத்த குழந்தையை ஏற்றுக்கொள்ள அவளுடைய குடும்பத்தினர் அறவே மறுத்து விட்டனர். எனவே, அந்தப் பிஞ்சுக் குழந்தையைப் பேணி வளர்க்கத் தகுதியான காப்பிடம் ஒன்றைத் தேடித்தருமாறு அந்தப் பெண்ணின் தாய் டாக்டர் குப்தாவை வேண்டிக் கொண்டார். அவருக்கு உடனே அன்னை தெரேசாவைப் பற்றிய எண்ணமே வந்தது. அவர் புரிந்துவரும் அறச்செயல் களைப்பற்றி முன்பே அறிந்துகொண்டிருந்த டாக்டர் குப்தா, அவரைச் சந்திப்பதற்காக அறப்பணி இயக்கத்தின் தலைமை யகத்திற்குச் சென்றார். அப்போது அன்னை தெரேசா அங்கே இல்லை. ஆயினும், அவருக்கு மாற்றாகப் பொறுப்பில் அமர்ந்திருந்த 'சகோதரி', டாக்டர் குப்தாவை அன்புடன் வரவேற்றார். அவரது வேண்டுகோளை ஏற்றுத் தாயுடன் வாழமுடியாத அந்தச் சேயை எப்போது கொண்டுவந்து ஒப்படைத்தாலும் எடுத்துக்கொள்வதாக உறுதியளித்தார். அவ்வாறே கைவிடப்பட்ட அந்தச் சேய், 'குழந்தைகள் காப்பகத்தில்' வளர்கின்ற வாய்ப்பைப் பெற்றது. அறப்பணி இயக்கத்தவரின் இந்த அருட்செயல் டாக்டர் குப்தாவின் உள்ளத்தை உருகுமாறு செய்தது. அன்று முதல் அந்த இயக் கத்துக்குத் தம்மால் இயன்ற அளவு நன்கொடைகள் வழங்கு வதற்கு அவர் உறுதிபூண்டார்.

ஒருநாள் அன்னை தெரேசாவிடம் அவர்,

''அன்னையே, எனக்குள்ள ஒரு நிலச் சொத்தை உங்கள் அறப்பணிக்கென்று ஒப்படைக்க விரும்புகிறேன். 'டம் டம்' விமான நிலையம் செல்லும் சாலையின் அருகில் இந்தச் சொத்து இருக்கிறது. என்னால் அங்கே பெரிய கட்டடம் எதையும் தனிப்பட்டமுறையில் கட்டித்தர இயலாது. என்றா லும், அதற்கு ஆகக்கூடிய செலவை நண்பர்கள் சிலரிடமும் நன்கொடைகள் பெற்று ஈடு செய்யமுடியும்,'' என்று கூறினார்.

டாக்டர் குப்தாவின் இந்த அறக்கொடையை அன்னை தெரேசா அகமகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார்.

**அயல் நாட்டினர் அளித்த கொடைகள்**

இந்தியாவில் உள்ளவர்கள் தாம் இவ்வாறு நன்கொடைகள் தருவதற்கு முன்வந்தார்கள் எனக் கூறமுடியாது. வெளி நாடுகளில் வாழும் பொதுநல நோக்காளர்களும் அன்னை தெரேசாவின் அறப்பணி இயக்கத்துக்குத் தாராளமாக அன்பளிப்புகளை அள்ளி வழங்கியிருக்கிறார்கள்.

அமெரிக்க நாட்டின் முன்னாள் குடியரசு தலைவர் ஜான் கென்னடியின் இளவலும், தற்போது அந்நாட்டின் நாடாளு மன்றத்தில் 'செனட்ட'ராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றிருப் பவருமான எட்வர்டு கென்னடி இந்தியா வந்தபோது, பங்களாதேஷ் மக்களுக்குப் புகலிடம் அளித்து அன்னை தெரேசாவின் இயக்கத்தினர் ஆற்றிய தொண்டுகளைக் கண்டு, தமது குடும்ப அறக்கொடை நிறுவனம் ஒன்றி லிருந்தே பரிசு வடிவில் நன்கொடை வழங்கினார் என்பது பற்றி முன்னரே படித்திருக்கிறோம்.

இவ்வாறு செல்வமும் செல்வாக்கும் படைத்த தலைவர்கள் மட்டுமன்றிப் பல்வேறு நாடுகளைச் சார்ந்த பள்ளி மாணவ மணிகளும் தங்களால் இயன்ற தொகைகளை அன்பளிப்பு களாக அனுப்பியவண்ணம் இருக்கின்றனர். டென்மார்க், ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளைச் சார்ந்த சிறுவர்கள் தங்கள் கைச்செலவுக்குப் பெற்றோரால் தரப்படும் பணத்தையும், பால் பருகுவதற்குச் செலவாகும் பணத்தையும் சேமித்து, அன்னை தெரேசாவினால் ஆதரிக் கப் பெறும் குழந்தைகளின் நலனுக்காக அனுப்பிவிடு கின்றனர்.

**போப்பாண்டவர் நல்கிய கொடை**

அன்னை தெரேசா பெற்ற நன்கொடைகளில் எல்லாம் தலைசிறந்ததாக உலகின் கவனத்தைக் கவர்ந்தது 1964-ல் போப்பாண்டவர் அளித்த நன்கொடையாகும். இந்தியாவில்

உள்ள நகரங்களிலேயே கட்டடக் கலையழகுக்குப் பெயர் பெற்று விளங்குவது பம்பாய் நகரம். அந்த ஆண்டில் அங்கே கத்தோலிக்கக் கிறித்தவ சமயச் சார்பில் மாநாடு ஒன்று நடை பெற்றது. அதில் கலந்துகொள்வதற்குத் தவத்திரு. ஆறாவது பால் என்னும் பெயரிய போப்பாண்டவர் எழுந்தருளினார். அவரை வரவேற்க அச்சமயம் இந்தியக் குடியரசு தலைவராக இருந்த டாக்டர் எஸ். இராதாகிருட்டினன் அவர்களே பம்பாய் சென்றிருந்தார். இதிலிருந்தே போப்பாண்டவர் அவர்களுக்குள்ள உலகந்தழுவிய உயர்ந்த செல்வாக்கை உணர்ந்துகொள்ளலாம். அவர் பம்பாய்க்கு எழுந்தருளிய போது, நூறாயிரக்கணக்கான மக்கள் கடல்போலத் திரண்டார்கள். அமெரிக்கக் கொடைவள்ளல் ஒருவர் தமக்கு அன்பளிப்பாகத் தந்த மிக அழகான படகுபோன்ற 'லிங்கன்' உந்து வண்டியில் அவர் பயணம் புரிந்தார். தாம் இந்தியாவை விட்டுப் புறப்படுவதற்கு முன்னர் அன்னை தெரேசாவை அழைத்து அவரிடம் அந்த விலையுயர்ந்த 'லிங்கன்' உந்து வண்டியை நன்கொடையாக வழங்கினார். அறப்பணி இயக்க வளர்ச்சிக்காக அவர் கொடுத்த அன்பளிப்பை உலக ஏடுகள் பல பாராட்டின; மேதகு போப்பாண்டவருடன் அன்னை தெரேசாவின் படத்தையும் அவை வெளியிட்டன.

அந்த உந்து வண்டியை உடனே விற்பனை செய்திருந்தால் இலட்சம் ரூபா கிடைத்திருக்கும். ஆனால், அதைக்கொண்டு மேலும் பல மடங்கு பணத்தைப் பெருக்கும் வழி ஒன்றை அவர் மேற்கொண்டார். பரிசு சீட்டுகள் மூலம் அதை விற்பதற்கு ஏற்பாடு செய்தார். ஒரு சீட்டின் மதிப்பு நூறு ரூபா என்று கட்டணம் விதித்து அவை விற்கப்பட்டன. அந்தக் குலுக்கல் சீட்டுகள் நான்கு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாவுக்கு விற்பனை ஆயின. அந்தப் பெருந்தொகையைக் கொண்டு மேலும் ஒரு தொழுநோயாளிகள் குடியிருப்பை அவர் ஏற்படுத்தினார்.

இந்திய அரசும் அன்னை தெரேசாவுக்குச் சில சலுகைகளை நன்கொடைகளாக அளித்திருக்கிறது. நாட்டில் ஆங்காங்கே எழுந்துள்ள அறப்பணி இயக்க இல்லங்களை அன்னை பார்வை

யிட்டுத் திரும்புவது வழக்கம். அந்தச் செலவைக் குறைக்கின்ற வகையில், இந்தியாவில் எங்கு வேண்டுமானாலும் கட்டணம் இன்றித் தொடர் வண்டியில் பயணம் புரிவதற்குரிய சலுகையை இந்திய அரசு அளித்துள்ளது. அதேபோல் 'இந்தியன் ஏர் லைன்ஸ்' விமானங்களில் இலவசமாகப் பயணம் புரிவதற்கும் இந்தியத் தலைமை அமைச்சர் சலுகை அளித்துள்ளார்.

### நெஞ்சைத் தொட்ட பிஞ்சுக் கைகள்

அன்னை தெரேசாவை நாடிவந்த நன்கொடைகளில், மனத்தை மெழுகாகக் கரையச் செய்யக்கூடிய சிலவும் அடங்கியிருந்தன.

ஒரு சமயம் அவர் கூட்டம் நிரம்பி வழியும் 'டிராம்' வண்டியில் கல்கத்தா நகருக்குள் பயணம் செய்துகொண்டிருந்தார். உட்கார்ந்து செல்வதற்கு அவருக்கு இருக்கை கிடைக்கவில்லை; எனவே, நின்றுகொண்டே சென்றார். உடனே ஓர் ஏழை மனிதர் எழுந்து நின்று அவர் அமர்வதற்கு இடம் கொடுத்தார். அதனுடன், அவருக்குத் தேவையான பயணச் சீட்டைத் தாமே காசு கொடுத்து வாங்கித் தருவதற்கு இசைவாரா என்றும் வேண்டினார். அன்னை தெரேசா புன்னகையோடு அவரது சிறிய நன்கொடையை ஏற்றுக் கொள்ள இசைந்தார். ''என் போன்ற ஏழைகளால் இதைத் தான் செய்யமுடியும்,'' என்றவாறே தமது வேட்டி நுனியில் முடிந்துவைத்திருந்த பத்துக் காசு நாணயத்தை எடுத்துப் பயணச் சீட்டை வாங்கிக் கொடுத்தார். அவர் உருவத்தில் ஏழை மனிதரே. ஆனால், உள்ளத்தால் ஏழை அல்லர்; உயர்ந்த செல்வரே என்பதை அன்னை தெரேசா உணர்ந்து கொண்டார்.

ஒருமுறை தம் இல்லங்களில் உறையும் நோயாளிகளுக்கு உணவுத் தட்டுப்பாடு ஏற்படக்கூடாது என்பதற்காக 'ஸ்டேட்ஸ்மன்' என்னும் ஆங்கில நாளேட்டில் அன்னை தெரேசா ஒரு விளம்பரம் செய்தார்.

'என் ஏழை மக்களுக்காக ஒரு பிடி அரிசியும் ஒரு கரண்டி சருக்கரையும் கல்கத்தா மக்கள் தரவேண்டும்' என்று அதில் வேண்டுகோள் விடுத்திருந்தார்.

அது வெளியான பிறகு ஒருநாள் ஒன்பது ஆண்டு நிரம்பிய சிறுமி ஒருத்தி தன் பெற்றோர்களுடன் அன்னை தெரேசாவிடம் வந்தாள். ''அன்னை அவர்களே, இந்த ஆண்டு என் பிறந்த நாள் பரிசாக என் அப்பா நூறு ரூபா தருவதாகக் கூறியிருந்தார். நீங்கள் நாளேட்டில் கொடுத்திருந்த விளம்பரத்தைப்பற்றி என் அப்பாவும் அம்மாவும் பேசிக்கொண்டிருந்ததை நான் கேட்டேன். உடனே, என் பிறந்த நாள் பரிசாகக் கிடைக்கும் பணத்தை அன்னை தெரேசா அவர்களிடமே தந்துவிடலாம் என்று அவர்களிடம் சொன்னேன். இன்று என் பிறந்த நாள். என் அன்புக் காணிக்கையைத் தங்களிடம் செலுத்திவிட்டுப்போகவே இப்போது வந்திருக்கிறேன்,'' என்றாள்.

அந்தச் சிறுமியின் ஈகை உள்ளத்தை எண்ணி அன்னை தெரேசாவின் கண்கள் கசிந்தன.

அடுத்து, ஆறே வயதுள்ள குழந்தை ஒன்று அவரைப் பார்க்க வந்தது. அதன் கையில் சருக்கரை நிரம்பிய கண்ணாடிப் புட்டி ஒன்று இருந்தது.

''அன்னையே, மூன்று நாள்கள் நான் காஃபியில் சருக்கரை போட்டுக்கொள்ளவில்லை. நீங்கள் கேட்டபடி, உங்களுக்காகச் சேமித்து இதைக் கொண்டுவந்திருக்கிறேன்,'' என்று அந்த மழலைச் செல்வம் கூறியது.

அந்தக் குழந்தையிடமிருந்து சருக்கரைப் புட்டியை வாங்கிக் கொள்ளும்போதே அன்னை தெரேசாவுக்குத் தோன்றிய உவகைக் கண்ணீரைத் தடுக்கமுடியவில்லை.

இவ்வாறெல்லாம் பலவகையான வழிகளிலும் பலதரப்பட்ட மக்களிடமும் நன்கொடைகளைத் திரட்டியே தமது அறப்பணி இயக்கத்தை அன்னை தெரேசா வளர்த்து வருகிறார்

# 11. தேடிவந்த பரிசுகள்

பரிசு என்பது ஒருவர் பெற்றுள்ள சிறப்புக்குத் தரப்படும் மதிப்பின் அடையாளமாகும். அது தன்னைப் பெறுகின்றவருக்குப் பேருவகை தருகிறது; தன்னைப் பெறாதவர்களுக்குத் தூண்டுகோலாகவும் அமைகிறது; ஒருவரது பெயரை விரைந்து விளம்பரப்படுத்தும் அரிய கருவியாகவும் பயன்படுகிறது. பரிசுக்கு அடிப்படை, அதைப் பெறுகின்றவருக்கு அமைந்துள்ள முதன்மையான தேர்ச்சியே. அதனால் தான் படிப்பிலோ, விளையாட்டுப் பந்தயங்களிலோ, இலக்கியப் படைப்புகளிலோ, அறிவியல் கண்டுபிடிப்புகளிலோ, பொதுநல அறப்பணிகளிலோ முதன்மையாகத் தேர்ச்சி பெறுகிறவர்கள் பரிசுகள் வழங்கப்பெற்றுச் சிறப்பிக்கப் பெறுகிறார்கள்.

பரிசு வழங்கும் முறை உலகில் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. தொன்மைச் சிறப்பு வாய்ந்த உரோமாபுரி நாட்டிலும் கிரேக்க நாட்டிலும் அந்நாளில் போர் மறவர்களும் விளையாட்டு வீரர்களும் பரிசுகள் வழங்கப்பெற்று உயர்த்தப்பட்டிருக்கிறார்கள். நம் தமிழ்நாட்டிலும் அவ்வாறு பரிசு வழங்குதல் பழங்காலத்திலிருந்தே நடைபெற்று வந்திருக்கிறது. இங்கே மறவர்களுக்கு மட்டுமன்றிப் புலவர்களுக்கும் பரிசில் வழங்கிச் சிறப்புச் செய்யும் பண்பை அந்நாளைய மூவேந்தரும் போற்றி வந்திருக்கின்றனர்.

அறப்பணி இயக்கத்தின் வாயிலாக ஈடில்லாத சிறப்புத் தொண்டுகள் பல செய்துவரும் அன்னை தெரேசாவைப் பரிசுகள் பல தேடிவந்ததில் வியப்பேதும் இல்லை. 1950-ல் தான் அவர் தமது இயக்கத்தை எளிய முறையில் கல்கத்தாவில் தோற்றுவித்தார். பன்னிரண்டு ஆண்டுகளில் அவர் அடக்கமாக ஆற்றிவந்த அறச் செயல்களின் அருமை

பெருமைகளை இந்தியா முழுமையும் உணரத்தொடங்கியது. பிலிப்பைன்ஸ் போன்ற வெளிநாடுகளும் விளங்கிக்கொண்டன.

### அன்னை அடைந்த முதல் விருது

நாட்டின் தலைசிறந்த பெருந்தலைவர்கள், பேரறிஞர்கள், அறிவியல் வல்லுநர்கள், கலைத் திலகங்கள், சீர்திருத்தச் செம்மல்கள், அறப்பணியாளர்கள் முதலானோரைச் சிறப்புச் செய்து விருதுகள் வழங்குவதை இந்திய அரசு ஆண்டுதோறும் மேற்கொண்டு வந்துள்ளது. அவரவருடைய தகுதி, முதிர்ச்சி வயதுக்கேற்ப இந்த விருதுகள் வகைப்படுத்தப்பட்டு வழங்கப் படுவதுண்டு. 'பாரத ரத்னா', 'பத்ம விபூஷண்', 'பத்ம பூஷண்', 'பத்ம ஸ்ரீ' என்னும் பெயர்களைக் கொண்டவை இவ்விருதுகள். இவற்றுள் மிக உயர்ந்தது 'பாரத ரத்னா' ஆகும்.

1962ஆம் ஆண்டு 'தாமரைத் திரு' என்னும் பொருள் உடைய 'பத்ம ஸ்ரீ' விருதுக்குரியவராக அன்னை தெரேசாவைத் தேர்ந்தெடுத்து இந்திய அரசு அறிவித்தது. தம்முடைய அளப்பரிய அறத்தொண்டுகளுக்காக அவர் பெற்ற முதல் பரிசு இந்த விருதுதான். இவ்வாறு விருதுக்குரியவர் என ஒருவரின் பெயர் அறிவிக்கப்படுமானால், அவரது உள்ளம் மகிழ்ச்சிக் கடலில் துள்ளிக் குதிப்பது இயற்கை. ஆனால், அன்னை தெரேசாவோ எத்தகைய இன்ப ஆர்ப்பரிப்புக்கும் இடம்தாராமல் அமைதியாகவே இருந்தார். அதனை ஏற்றுக்கொள்ளவும் அவர் மனம் இசையவில்லை. எனவே, தமது சமயத் தலைவரான கல்கத்தா நகரில் வாழும் தவத்திரு. தையர் என்னும் பேராயர் (பிஷப்) அவர்களை அணுகி, ''விருது வாங்குவதற்காக நான் புதுடில்லிக்குப் போக வேண்டா என்று நினைக்கிறேன்,'' என்று அன்னை தெரேசா கூறினார்; ஆனால், பேராயர் அதனை ஏற்கவில்லை. அந்த விருது அன்னை தெரேசா ஒருவருக்குமட்டுமே கிடைத்த ஒன்றாக எடுத்துக்கொள்ளக்

கூடாது என்றும் அவரது அறப்பணி இயக்கத்தில் பங்கு கொண்டு ஏழை மக்களின் ஊழியத்திற்குத் தங்களை ஒப்படைத்துள்ள கன்னித் துறவியர் அனைவருக்குமே அளிக்கப்பெற்ற சிறப்புப் பரிசு என்றும் அவர் எடுத்துரைத் தார். ''நீங்கள் உறுதியாக விருதுவாங்கச் செல்லத் தான் வேண்டும்,'' என்று அன்பாக அவருக்குக் கட்டளையிட் டார். அந்தப் பேராயரின் வாழ்த்துதலோடு புது டில்லி சென்று அப்போதைய இந்தியக் குடியரசு தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருட்டினன் கைகளிலிருந்து தமக்குக் கிட்டிய முதல் பரிசான 'பத்ம ஸ்ரீ' விருதை அன்னை தெரேசா பெற்றுக்கொண்ட நிகழ்ச்சிபற்றி முன்னரே அறிந்துள்ளோம்.

### பிலிப்பைன்ஸ் நாட்டின் பெரும் பரிசு

அதே ஆண்டில் பிலிப்பைன்ஸ் நாடு, அன்னை தெரேசா வுக்கு ஒரு பரிசு அளிப்பதாக அறிவித்தது. 'ராமோன் மாக்சாய்சாய் பரிசு' (Ramon Magsaysay Award) என்பது அதன் பெயர். பிலிப்பைன்ஸ் நாட்டின் ஆட்சித் தலைவ ராகக் கோலோச்சியவர் ராமோன் மாக்சாய்சாய். அவரது நினைவாக உலகில் சமுதாயப் பணிகளுக்காக உழைக்கும் சான்றோர்களுக்கு ஆண்டுதோறும் இந்தப் பரிசு அளிக்கப்படு கின்றது. இந்தியப் பெருந்தலைவர்களுள் ஆச்சாரிய வினோபா பாவே அவர்களும், ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்களும் இந்தப் பரிசைப் பெற்றிருக்கிறார்கள். நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட அந்தத் தியாகத் திருவிளக்கு களைப் போன்றே, அன்னை தெரேசாவுக்கும் பிலிப்பைன்ஸ் நாடு பரிசு வழங்கிச் சிறப்புச் செய்தமை இந்திய நாடே பெருமிதம் கொள்ளத்தக்கதாகும். அந்நாட்டு ஆட்சித் தலைவரும் அவர்தம் துணைவியாரும் பரிசு பெறச் சென்ற அன்னை தெரேசாவுக்கு மிகச் சிறந்த முறையில் வரவேற்புக் கொடுத்தனர். அந்தப் பரிசின்மூலம் கிட்டிய பெருந் தொகையை ஓர் அறப்பணியில் அவர் ஈடுபடுத்திவிட்டார்.

அந்தப் பரிசு அறிவிக்கப்படு முன்னரே, ஆக்ரா நகரில் ஓர் அறப்பணி இல்லம் ஏற்படுத்தவேண்டும் என்று அங்கிருந்த

கன்னித் துறவியர் எழுதியிருந்தனர். அதற்கு 50,000 ரூபா தேவை என்றும் குறிப்பிட்டிருந்தனர். ஆனால், அப்போது அன்னை தெரேசாவிடம் பணம் இல்லை. 'இந்தத் திட்டத்தை எப்படி நிறைவேற்றப்போகிறோம்?' என்று அவர் எண்ணிக்கொண்டிருந்த வேளையில்தான் பிலிப்பைன்ஸ் நாட்டு நாணய மதிப்புப்படி 10,000 டாலர்கள் கொண்ட "மாக்சாய்சாய்' பரிசு அறிவிக்கப்பட்டது. அந்தத் தொகை நம் இந்திய நாணயப்படி 50,000 ரூபாவுக்கு நிகரானது என்பது குறிப்பிடத்தக்கது; ஆக்ரா இல்லத்துக்கு எவ்வளவு தொகை தேவையென்று மதிப்பிடப்பட்டதோ அதே அளவுத் தொகை பிலிப்பைன்ஸ் நாட்டின் பரிசாக வந்தது வியப்புக் குரியது அன்றோ? இதனால், ஆக்ரா நகரில் அறப்பணி இல்லம் அமைப்பது அன்னை தெரேசாவுக்கு எளிதான வேலையாக விரைவில் ஈடேறியது.

இந்தப் பரிசுக்குப் பின்னர், ஒன்பது ஆண்டுகள் கழித்து உலக நாடுகள் அனைத்தும் அன்னை தெரேசாவை வியப்போடு விழித்து நோக்கின. குறிப்பாக, 'பங்களாதேஷ்' நடத்திய விடுதலைப் போராட்டத்தை ஒட்டி அங்கிருந்து இந்தியாவுக்கு ஓடிவந்த இலட்சக்கணக்கான மக்களுக்கு அவர்தம் இயக்கத்தினர் புரிந்த உதவிகள் எல்லா நாடுகளின் இதயத்தையும் தொட்டன. அவற்றின் விளைவாக 1971 ஆம் ஆண்டில் அடுக்கடுக்கான பரிசுகள் அருவிமேல் அருவி போல அன்னை தெரேசாவை நோக்கிப் பாய்ந்தோடி வந்தன.

அந்த ஆண்டு சனவரித் திங்களில் மேதகு போப் ஆண்டவர் 23ஆம் ஜான் அவர்களின் உலக அமைதிப் பரிசை அப்போதைய போப் ஆண்டவர் மேதகு ஆறாவது பால் அவர்கள், அன்னை தெரேசாவுக்கு வழங்கினார். அதே 1971-ல் செப்டம்பர்த் திங்களில் அமெரிக்க நாட்டு 'குட் சமாரிடன் பரிசு' அவரைத் தேடி வந்தது. அடுத்து, அக்டோபர்த் திங்களில் 'ஜான்-எஃப் கென்னடி அனைத்துலகப் பரிசு' அவருக்கு அளிக்கப்பட்டது. அந்தத் திங்களில்அமெரிக்கத் தலைநகராம்

வாஷிங்டனில் 'சிறப்பு டாக்டர்' பட்டம் அளித்து அன்னை தெரேசாமீது பாராட்டு மலர்கள் தூவினார்கள்.

### நேரு நினைவுப் பரிசு

1972 நவம்பர்த் திங்களில் நம் இந்தியத் தலைநகரிலேயே பெருமிதம் அளிக்கக்கூடிய பெரும் பரிசு ஒன்று அன்னை தெரேசாவுக்கு வழங்கப்பெற்றது. அதன் பெயர் 'ஜவகர்லால் நேரு உலக ஒப்புரவுப் பரிசு' என்பதாகும். நம் இந்திய நாட்டின் விடுதலைக்காக அரும்பாடுபட்ட தலைவர்களில் ஜவகர்லால் நேருவும் ஒருவர். காந்தியடிகளின் அடிச் சுவட்டில் அறப்போராட்டங்களில் ஈடுபட்டு ஒன்பது ஆண்டு களுக்குமேல் சிறை வாழ்வை மேற்கொண்டவர் அவர். விடுதலை பெற்ற இந்தியாவின் முதல் தலைமை அமைச்சரா கப் பதவி ஏற்றுப் பதினேழு ஆண்டுகள் தாம் மறையும்வரை அவர் ஆட்சியை நடத்தினார். அறிவியல் முன்னேற்றத்துக்கு ஆக்கம் அளிக்கும் பகுத்தறிவாளராகவும் அவர் விளங்கினார். இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர், ஆங்காங்கே பகை யுணர்ச்சி புகைந்தபோதெல்லாம் அந்தப் போர் நெருப்பினை அணைக்கும் தண்ணீராகவும் நேரு பாடுபட்டார். அமெரிக்க வல்லரசு ஒருபுறமும் சோவியத் ரஷிய வல்லரசு மறுபுறமும் எதிர் எதிராக விலகிச் சென்ற நிலையில் அந்த இரு அணிக ளிடமும் சிக்கிவிடாமலும் அதே சமயம் அவற்றுக்கிடையே இணைப்புப் பாலமாகவும் 'நடுநிலை நாடுகள் அணி' என்னும் புதிய அணி ஒன்றை அவர் தோற்றுவித்தார். அதனால் உலகின் பதற்ற நிலைகள் தணிந்து நாடுகளுக்கிடையே ஒப்புரவும் நட்புறவும் தழைக்கக்கூடிய அன்புச் சூழல் உருவாயிற்று. இவ்வாறு உலக அமைதிக்காக அரிய முயற்சிகள் மேற்கொண்ட அவரை 'ஆசியாவின் முடிசூடா மன்னர்' என்றும் 'உலகின் அமைதிப் புறா' என்றும் அனைத்து நாட்டுத் தலைவர்களும் கொண்டாடினர். உலக அரங்கில் இந்தியாவின் பெருமை பட்டொளி வீசிப் பறக்கு மாறு செய்த அவரது நினைவாகவே 'நேரு பரிசு' ஆண்டு தோறும் உலகச் சான்றோர்களுக்கு அளிக்கப்படுகின்றது.

அத்தகைய உயரிய பரிசை ஏழைகளை வாழவைக்கும் அறப் பணிகளுக்கென்றே தம் வாழ்வை ஒப்படைத்துக்கொண்டுள்ள அன்னை தெரேசாவுக்கு வழங்கியதன்மூலம் இந்தியா தனக்குத்தானே புகழ்முடி புனைந்து கொண்டது எனவும் சொல்லலாம்.

டெம்பிள்டன் பரிசு

*1972*-ல் இன்னொரு சிறப்புப் பரிசும் இங்கிலாந்து நாட்டி லிருந்து அன்னை தெரேசாவைத் தேடி வந்தது. 'டெம்பிள்டன் பரிசு' என்று அதற்குப் பெயர். இலண்டன் மாநகரில் நிகழ்ந்த அந்தப் பரிசளிப்பு விழாவுக்குப் பிரிட்டா னிய நாட்டின் பேரரசி எலிசபெத் அவர்களின் கணவரான இளவரசர் பிலிப் அவர்களே தலைமை தாங்க வந்திருந்தார். *34,000* ஆயிரம் பவுன்கள் மதிப்புடைய அந்தப் பெரும் பரிசை வழங்கிய அவர், அன்னை தெரேசாமீது மிக அழகான பாராட்டு மலர்களையும் தூவினார்:

"...உண்மையான அறப்பணி என்பதே அன்னை தெரேசாவின் வாழ்விலும் செயலிலும் சுடர்விட்டு ஒளி வீசக் காண்கிறோம். அவரது தூய தொண்டு நம்மிடம் அடக்கத்தையும் பணிபுரியும் ஆர்வத்தையும் தூண்டிவிடு கிறது; நமது உளமார்ந்த பாராட்டையும் பெறுகிறது."

*1978*-ல் பிரிட்டானிய அரசே 'ஆர்டர் ஆஃப் பிரிட்டிஷ் எம்பயர்' (OBE) என்னும் உயரிய விருது வழங்கிச் சிறப் பித்தது.

*1979* மார்ச்சுத் திங்களில் 'பால்சான் அனைத்துலக விருது' அன்னை தெரேசாவை நாடிவந்தது. இந்தப் பரிசு மூன்று இலட்சம் டாலர்கள் மதிப்புடையதாகும். இப் பரிசு உலக மக்களிடையே அமைதியையும் உடன்பிறப்புப் பாசத்தையும் வளர்ப்பதற்காக இத்தாலிய நாட்டினரும் சுவிட்சர்லாந்து நாட்டினரும் இணைந்து ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளையிலிருந்து வந்ததாகும்.

**நானிலம் போற்றும் நோபல் பரிசு**

இந்தப் பரிசுகள் அத்தனைக்கும் மேலாக மணிமுடி சூட்டுவது போன்று வேறொரு பரிசும் அன்னை தெரேசாவை நோக்கி ஆர்வத்துடன் ஓடிவந்தது. அதுதான் உலகம் முழுவதையும் கவர்கின்ற நோபல் பரிசு.

நார்வே நாட்டில் தோன்றிய ஆல்பிரட் பி. நோபல் என்பவர் புகழ்மிக்க அறிவியல் வல்லுநராகத் திகழ்ந்தவர். மலைப் பாறைகளைப் பிளந்து பாதைகளைச் செப்பனிடப் பயன்படும் 'டைனமைட்' என்னும் வெடிமருந்து அவரது அரிய கண்டுபிடிப்பாகும். அது போர்க்காலங்களில் அழிவுகளைத் தருவது கண்டு அவர் வருந்தினார்; ஆக்கப் பணிகளுக்கே அது பயன்படவேண்டும் என்றும் அவர் விரும்பினார். உலகில் என்றென்றும் அமைதியே தவழவேண்டும் என்பது அவரது வேட்கை. எல்லாத் துறைகளிலுமே மனிதர்கள் அரும் பெரும் சாதனைகளைப் புரிந்து முன்னேற்றப் பாதையில் பீடுநடைபோடவேண்டும் என்று அவர் பெரிதும் விழைந்தார். தமது எண்ணங்களுக்கெல்லாம் எழில் வடிவம் கொடுக்கும் முறையில் அறக்கட்டளை ஒன்றை அவர் ஏற்படுத்தினார். அந்நாளில் அதற்காக அவர் ஒதுக்கிவைத்த தொகை 90 இலட்சம் டாலர்கள். இந்தப் பெரு நிதியின் வட்டித் தொகையிலிருந்து ஆண்டுதோறும் மிகச் சிறந்த வல்லுநர்களுக்கும், படைப்பாளர்களுக்கும், இலக்கியச் சிற்பிகளுக்கும், அமைதிப் பணி ஆற்றுவோருக்கும் பரிசு வழங்கவேண்டும் என்று 'இறுதி முறி' (Will) எழுதி வைத்துவிட்டுச் சென்றுள்ளார். அதுவே உலகம் புகழும் 'நோபல் பரிசு' ஆகும்.

இலக்கியம் (Literature), இயற்பியல் (Physics), வேதியியல் (Chemistry), மருத்துவம் (Medicine), உலக அமைதி (World Peace) ஆகிய ஐந்து துறைகளிலும் அருஞ் செயல் புரிகின்றவர்களுக்கு நோபல் பரிசு அளிக்கப்படுகின்றது. ஆண்டுதோறும் நோபல் பெருமகனார் மறைந்த நாளான டிசம்பர் 10ஆம் நாள் இப் பரிசு வழங்கும் விழா நிகழ்கிறது. 1901ஆம் ஆண்டு முதல் அவரது எண்ணம் ஈடேறி வருகிறது.

1979ஆம் ஆண்டிற்குரிய உலக அமைதிக்கான நோபல் பரிசு அன்னை தெரேசாவுக்கு அளிக்கப்பட்டது. கடைப் பட்டவரும் கைவிடப்பட்டவரும் ஆகிய ஏழைகளுக்கும், இறப் போருக்கும், தொழுநோயாளிகளுக்கும், குழந்தைகளுக்கும் கைம்மாறு கருதாது அவர் ஆற்றிவரும் அறப்பணிகளுக் காகவே அந்தப் புகழ்மிக்க பரிசுக்குப் பொருத்தமானவராக அவர் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளார். தமக்குக் கிடைத் துள்ள அந்த நோபல் பரிசினால், அன்னை தெரேசாவுக்குப் பெருமை என்பதைவிட, அந்தப் பரிசுக்கே பெருமை என்று உலகச் சான்றோர் பலர் உவகையுடன் போற்றினர்.

நம் இந்திய நாட்டுக்கும் அன்னை தெரேசாவுக்கு வந்த நோபல் பரிசு அளப்பரிய பெருமிதத்தைக் கொடுத்துள்ளது. ஏனெனில், இந்தியக் குடிமகள் (Indian Citizen) என்னும் நிலையில்தான் அவர் அந்தப் பரிசினைப் பெற்றுள்ளார். இந்திய மண்ணில் இளமையிலேயே வந்து குடியேறி, இந்திய மக்களோடு இரண்டறக் கலந்து பழகி, இந்தியப் பெண்ணின் எளிய புடைவையையே உடுத்தி, முதலில் இந்தியருக்கு உழைத்தே இன்றைய உயர்நிலையை அவர் எய்தியிருக் கிறார். எனவே, இந்தியரில் ஒருவராகவே அவர் நோபல் பரிசைப் பெற்றிருக்கிறார் என நாம் எண்ணி எண்ணி மகிழலாம்.

அவருக்கு முன்னர் இந்தியப் பேரறிஞர் இருவர் இவ்வாறு நோபல் பரிசைப் பெற்றிருக்கின்றனர். முதலில் வங்காள நாட்டில் தோன்றிய மாபெரும் கவிஞர் இரவீந்திரநாத தாகூர் இலக்கியத்திற்குரிய நோபல் பரிசைப் பெற்றார். அடுத்து, தமிழ்நாட்டில் தோன்றிய சர். சி. வி. இராமன் இயற்பியலுக்குரிய நோபல் பரிசை அடைந்தார். எனவே, அன்னை தெரேசா நோபல் பரிசைப் பெறும் மூன்றாவது இந்தியர் ஆவார். அந்தப் பரிசைப் பெற்ற உலகப்பெண் மணிகளுள் இவர் ஏழாமவர் ஆவார்.

நோபல் பரிசுபற்றிய அறிவிப்பு வெளியானதும், அன்னை தெரேசா எத்தகைய ஆர்ப்பரிப்புகளுக்கும் இலக்காகாமல்

அடக்கமாகவே நடந்துகொண்டார். அப்போது அவர் விடுத்த செய்தி இதுதான்:

''...இந்த நோபல் பரிசின் வாயிலாக அன்பு ஒன்றே அமைதி தரும் என்பதை உலகம் அறிவிப்புச் செய்திருக்கிறது. இந்த உலகிலே ஏழைகள் வாழ்கிறார்கள் என்பதையும் அஃது உறுதிப்படுத்தி அறிவிக்கிறது. கல்கத்தாவில் மட்டுமின்றி உலகின் எந்தக் கோடியில் இருக்கும் ஏழைகளும் நம் உடன் பிறப்புகளே என்பதையும் மக்களுக்கு இப்பரிசு உணர்த்தி யிருக்கிறது. ஏழைகளுக்குத் தொண்டு புரிவது ஒன்றே உண்மையான கடவுள் பணியாகும்; அதுவே நமக்கு இன்பம் அளிக்கக்கூடிய இறுதிக் குறிக்கோளும் ஆகும். ஏழைகளுக்குப் பணிபுரியும் ஒரு கருவியாகவே நான் இயங்கிவருகிறேன். இந்தப் பரிசுப் பணத்தைக்கொண்டு அவர்களுக்காக மேலும் பல இல்லங்கள் எழுப்புவேன்!''

—அன்னை தெரேசாவின் அருள் பொழியும் இந்தச் சொற்கள் அவரது அடக்கத்தையும் ஏழைகளின் வாழ்வில் அவருக்குள்ள ஆழ்ந்த ஈடுபாட்டையும் இனிது புலப்படுத்துகின்றன அல்லவா?

1979ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் நோபல் பரிசைப் பெறுவதற்காக அன்னை தெரேசா ஸ்வீடன் நாட்டுக்குப் பயணம் புறப்பட்டார். அங்கே ஆசுலோ நகரில் உள்ள பல் கலைக்கழகக் கலையரங்கில் அவருக்குப் பரிசு வழங்கப் பட்டது. அந்த விழாவுக்குப் பிறகு பரிசு பெற்றவர்களுக்குப் பகட்டான முறையில் விருந்து அளிப்பது அந்த நாட்டு வழக்கம். அன்னை தெரேசாவோ அங்கும் ஒரு புரட்சியைச் செய்துவிட்டார்.

விருந்துக்கு ஏற்பாடு செய்ய முற்பட்டவர்களை அழைத்து, ''எனக்காக ஏன் இவ்வளவு பெருந்தொகையைச் செலவிட்டுப் பகட்டாக விருந்து வைக்கிறீர்கள்? அந்தத் தொகையை அப் படியே என் கையில் கொடுத்தீர்களானால், அதைக்கொண்டு எத்தனையோ ஏழைகளின் பசியை என்னால் ஆற்ற முடியுமே!'' என்றார்.

அவரது கனிவான வேண்டுகோளை யாரால்தான் புறக் கணிக்க முடியும்? அவர் விரும்பியவாறே அந்த ஆடம்பர விருந்து தவிர்க்கப்பட்டது. அதற்குச் செலவாகக்கூடிய் தொகை அன்னை தெரேசாவிடமே ஏழைகளின் ஏற்றத்துக் காக ஒப்படைக்கப்பட்டது. 'ஏழையின் சிரிப்பில் இறை வனைக் காண்போம்' என்றார் பேரறிஞர் அண்ணா. அவரது வாக்குக்கு ஏற்பவே இறைவனைக் காணும் முயற்சி யாளராக, ஏழைகளுக்காக அறப்புரட்சியை அன்னை தெரேசா நாள்தோறும் நடத்தி வருகிறார்.

நோபல் பரிசையே பெற்ற அவருக்கு நம் இந்திய அரசு இன்னொரு சிறப்பையும் செய்துள்ளது. அவரது முகத் தோற்றம் அமைந்த அஞ்சல் தலையை வெளியிட்டுள்ளது. உயிருடன் உள்ளபோதே ஒரு சில சான்றோர்க்கே இவ் வாறு அஞ்சல் தலைகள் வெளியிடப்பட்டுள்ளன. அந்த வகையிலும் அன்னை தெரேசா புகழ்மிக்கவராகத் தலை நிமிர்ந்து நிற்கிறார்.

# 12. பண்பு நலன்கள்

'அடக்கம் என்னும் பொன்னில் பதித்த அறிவு இரு மடங்கு ஒளியுடன் சுடர் வீசும். திறமையோடு அடக்கத்தையும் பெற்றுள்ள மனிதர் ஒரு நாட்டுக்கே நிகரான மாணிக்கம் ஆவார்' என்பது 'பென்' (Ben) என்னும் அறிஞரின் பொன் மொழி.

அன்னை தெரேசாவும் அடக்கத்தின் பிறப்பிடமாகவே என்றென்றும் வாழ்ந்து வருகிறார். அறிவுக் கூர்மைமிக்க ஆசிரியையாகவும் அவர் விளங்குகிறார். அதனுடன் அன்பு மழை பொழியும் அறப்பணியாளராகவும் அவர் திகழ்ந்து வருகிறார். அதனால்தான் கோடிக்கணக்கான ஏழைகளின் இதயத்தில் அவர் இடம் பெற்றிருப்பதைப்போலவே நாட்டையே ஆளுகின்ற அரசர்கள், ஆட்சித் தலைவர்கள், அமைச்சர்கள் முதலானோரின் மனத்திலும் மதிப்புமிக்க இடத்தைப் பெற்று மாணிக்கமாக ஒளி வீசுகிறார்.

### அடக்கத்தின் அளவுகோல்கள்

முதலில் ஒருவரது அடக்கத்தைக் காட்டும் அளவுகோல் பொதுவாக அவர் உடுத்தும் ஆடையே. உள்ளத்தால் உயர்ந்த சான்றோர்கள், உடலில் பகட்டான ஆடைகளை உடுத்துக்கொண்டு உயர்ந்த மனிதராய்க் காட்டிக்கொள்ள விரும்பார். உண்மையையே கடவுளாக வழிபட்டு உலக மக்கள் யாவரும் போற்றுகின்ற வகையில் உயர்ந்து நின்றவர் நம் 'இந்தியாவின் தந்தை' காந்தியடிகள். அவர் பகட்டான ஆடைகளை உதறியெறிந்துவிட்டு ஏழைகள் அணியக்கூடிய எளிய உடையையே அணிந்து வாழ்ந்தார். ஈரோடு நகரில் இலட்சக்கணக்கில் சொத்துகள் உள்ள ஒரு வணிகரின் குடும்பத்தில் பிறந்தவரே பெரியார் ஈ. வே. ராமசாமி அவர்கள்; ஆயினும், மூடநம்பிக்கைகளை ஒழித்துப் பகுத்தறிவோடு

முன்னேறுவதற்குரிய பாதையைக் காட்டித் திராவிட இன மக்களுக்கு எழுச்சியூட்டிவந்த அவர் எளிய உடையையே உடுத்திக்கொண்டிருந்தார். அயல்நாட்டவரின் அடிமைத் தளையிலிருந்து வியட்நாம் நாட்டை விடுவித்து அங்கே ஏழை—பணக்காரர் என்னும் ஏற்றத் தாழ்வு இல்லாதவாறு பொதுவுடைமைக் கொள்கைப்படி ஆட்சி நடத்தியவர் ஹோ—சி—மின் என்னும் தலைவர்; அவரும் எளிய ஆடைகளை அணிந்தே மக்களின் இதயத்தில் நிலையான இடம் பெற்றார்.

அத்தகைய புகழ்மிக்க சான்றோர்களைப்போலவே அன்னை தெரேசாவும், எளிய ஆடை அணிந்து உலகெங்கும் நடமாடி வருகிறார். இந்தியாவின் ஏழைக் குடிசையில் பிறந்த ஒரு பாட்டாளிப் பெண் எத்தகைய மலிவான எளிய சேலையை உடுத்துவாளோ, அப்படித்தான் நீலக்கரை போட்ட வெண்ணிறச் சேலையை அன்னை தெரேசாவும் உடுத்துகிறார். இவரது அடக்கப் பண்புக்கு இவர் பூணும் எளிய கோலமே சீரிய எடுத்துக்காட்டாகும்.

உணவு முறையிலும் ஒரு வறியவர் வாழ்க்கையையே அன்னை தெரேசா மேற்கொண்டு ஒழுகுகிறார். நாவுக்குச் சுவையாக அறுசுவை விருந்துகளை எந்த வேளையிலும் அவர் உண்ண விரும்பியதில்லை; இனிப்புப் பண்டங்களையும் அவர் ஆவலுடன் தின்றதில்லை. குழம்பை ஊற்றிக்கொண்டுதான் சோறு உண்ணவேண்டும் என்றும் அவர் குறியாக இருந்ததில்லை. பெரும்பாலும் அவர் கஞ்சியே குடிப்பார். காய்கறிகளைக்கொண்டு கூட்டு, பொரியல், வறுவல், துவட்டல் என்று வகைவகையாகச் செய்து தின்பதற்கும் அவர் எண்ணியதில்லை. இந்தியாவில் உள்ள ஏழை எளியவர்கள் கஞ்சிக்கு வழியின்றிக் கண்ணீர் வடிக்கும்போது தாம்மட்டும் குழம்போடும் காய்கறிகளோடும் உணவு அருந்துவதா என்றே அவர் கருதினார். எனவே, உணவு முறையில் கட்டாயமான ஓர் எளிமைப் போக்கையே அவர் கடைப்பிடித்தார். அந்தந்த உணவு வேளைகளில் உப்புப்போட்ட கஞ்சியைமட்டுமே அவர் அருந்தினார்.

தாம்மட்டும் இத்தகைய எளிய உணவு உட்கொள்வதோடு அவர் நிற்கவில்லை. தம்மைச் சார்ந்த அறப்பணி இயக்கக் கன்னித் துறவியரும் கஞ்சிமட்டுமே குடிக்கவேண்டும் என்று வரையறை வகுத்தார். ஆனால், இத்தகைய கடுமையான உணவுக் கட்டுப்பாடு அயராது உழைத்துக்கொண்டிருந்த அவர்களது உடல் நலத்தையே கெடுத்துவிட்டது. மருத்துவர் ஒருவர் வந்து, ''சத்துள்ள உணவை உட்கொண்டால்தானே உடலில் சோர்வு ஏற்படாமல் தொண்டாற்றமுடியும்?'' என்று எச்சரித்த பின்னரே அந்தக் கட்டுப்பாடுகளை ஓரளவு தளர்த்துவதற்கு அவர் உடன்பட்டார். உடல் பருக்கச் சுவை யாக உண்டு பழகிவிட்டவர்களால் அவ்வளவாக உழைக்க முடியாது; பட்டினியால் வாடுவோரின் துயரை உணராத ஒரு செல்வச் செருக்கும் அவர்களுக்கு வந்துவிடலாம். அத்தகைய மனப்போக்குக்கு ஆட்படாமல் தமது அறப்பணி இயக்கத்தினர் ஏழைகளை வாழ வைக்கும் எண்ணத்திலேயே உழைக்கவேண்டும் என்பதற்காகவே அன்னை தெரேசா கடுமையான உணவுக் கட்டுப்பாட்டைக் கையாண்டார் எனக் கொள்ளலாம். அவரது எளிமைப் பண்புக்கு இந்த உணவு முறையையும் ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

அவர் குடியிருக்கும் உறைவிடம் எளிமையானதே; அவர் பணிபுரியும் அலுவலகமும் எளிமைக்கோலம் கொண்டதே. அவரது அலுவல் அறை மிகவும் சிறியது. எல்லாப் பக்கங்களி லும் அதன் கதவுகள் திறந்தே இருக்கும். 'குளுகுளு' வசதி போன்ற பகட்டான ஏற்பாடு எதுவும் அதில் இல்லை. அறையின் நடுவே நீண்ட சதுரமான ஒரு மேசை இருக்கிறது. அதைச் சுற்றிலும் சிறுசிறு நாற்காலிகள் போடப்பட்டிருக் கும். அன்னை தெரேசா தமக்கென்று தனியாகப் பெரிய தாகவோ அழகிய வேலைப்பாடுகள் கொண்டதாகவோ நாற்காலி எதையும் வைத்துக்கொள்ளவில்லை. மற்றவர்கள் வந்து அமர்கின்ற நாற்காலிகளைப்போன்றே ஒரு சிறிய நாற் காலியில் அவரும் உட்கார்ந்திருப்பார். அவ்வாறு அமரும் போதும் அவரிடம் ஒருவகையான எளிமைப் பண்பு வெளிப் படும். அவர் எப்போதும் நாற்காலியின் முன்புறத்தில்

நிமிர்ந்தவாறே உட்காருவார்; அவரது முதுகு நேராகவே இருக்கும்; பின்புறம் சாய்வாக அமரும் போக்கு அவரிடம் இருந்ததில்லை. நெடுநேரம் உழைத்துக் களைப்புற்றபோதிலும், காய்ச்சலின் அறிகுறி புலப்பட்டபோதிலும் அவர் வசதியாகச் சாயாமல் நிமிர்ந்தேதான் உட்காருவார்.

பணத்தாலோ பதவியாலோ ஓரளவு செல்வாக்குப் பெற்றுவிட்ட மனிதர்கள், தங்களைக் காணவரும் பார்வையாளர்களைச் சந்திப்பதில் பல கட்டுப்பாடுகளை விதிப்பார்கள். தங்களைப்போலவோ, தங்களுக்கு மேலாகவோ செல்வாக்குப்பெற்ற பெருமனிதர்களுக்கே முதலிடம் தந்து சந்திப்பார்கள். ஆனால், அன்னை தெரேசாவோ உலகம் முழுவதும் செல்வாக்குப் பெற்றுள்ள நிலையிலும் பார்வையாளர்களைச் சந்திப்பதில் பாகுபாடு காட்டாமலே நடந்துகொள்கிறார்; எவரும் எந்த நேரத்திலும் எவ்வகைத் தடையும் இல்லாமல் அவரைப் போய்ச் சந்திக்கலாம். குறிப்பாக ஏழை மக்கள், உரிமையோடு சென்று யாதொரு தடையும் இன்றி அவரைப் பார்த்துப் பேசலாம்.

ஓர் ஏழையைப்போல் வாழ்வதையே அன்னை தெரேசா எப்போதுமே மேற்கொண்டிருக்கிறார். தம்மோடு சேர்ந்து பணியாற்றும் கன்னித் துறவியரும் அத்தகைய ஏழைமை உணர்வோடுதான் எந்நாளும் வாழவேண்டும் என வலியுறுத்துவார். அதனால்தான் அறப்பணி இயக்கத்தில் சேரவரும் கன்னியருக்குக் கடுமையான ஏழைமைப் பயிற்சியை அவர் அளிப்பது உண்டு. அவரைப்போல எளிய உடையே அணிந்து, எளிய உணவே உண்டு, எளிய குடியிருப்புகளிலேயே அவர்கள் தங்கவேண்டும். அந்தச் சகோதரிகள் மூன்று உடுப்புகளே வைத்துக்கொள்ளலாம். ஒன்றை அணியவும், இரண்டாவதைத் துவைத்துப்போடவும், மூன்றாவதை உலரவைக்கவுமாகவே அவர்களுக்கு அவை அனுமதிக்கப்பட்டன. அவர்கள் தங்கியுள்ள விடுதிகளிலும் வறுமையின் அறிகுறிகள் தெரிய வேண்டும். எளிமையான பொருள்களையே அவர்கள் பயன்படுத்தவேண்டும். தேவையான அளவுக்குமட்டுமே நாற்காலிகள், தட்டுமுட்டுப் பொருள்கள் ஆகியவற்றை வைத்துக்

கொள்ளவேண்டும். அவை மலிவானவையாகவும் இருக்க வேண்டும். கன்னித் துறவியர் இயன்றவரை நடந்துசென்றே பணியாற்றவேண்டும். டிராம் வண்டி, தொடர் வண்டி முதலானவற்றில் பயணம் புரிய நேர்ந்தால் கட்டணம் குறைந்த இருக்கைகளிலேயே செல்லவேண்டும். உறங்கும் போதுகூட, குடிசைகளில் வாழும் பெண்களைப்போலவே எளிமையான பாய்களில் படுக்கவேண்டும்.

### வேதநாயகனார் விளக்கும் அறப்பெண்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் மொழியில் பல அரிய படைப்புகளைத் தீட்டியவர்களுள் வேதநாயகர் அவர்கள் குறிப்பிடத்தக்க சான்றோர் ஆவர். அவர் மாயூரத் திலே நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தமிழில் முதன்முதலில் 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்னும் நெடுங்கதை நூலை (புதினம்) எழுதிய பெருமை அவரையே சாரும். அவர் பாடல்கள் புனைவதிலும் தமது ஆற்றலைப் புலப்படுத்தியுள்ளார். அன்னை தெரேசாவைப்போல அவரும் கத்தோலிக்க கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவரே. எனினும், எல்லாச் சமயங்களின் அடிப்படை நோக்கும் அறநெறி வாழ்க்கையே என்பதை அவர் தெளிவாக உணர்ந் தவர். எனவே, எல்லாச் சமயத்தவருக்கும் ஏற்புடையதாக சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் என்னும் பாடல்கள் அடங்கிய நூலை அவர் வெளியிட்டிருக்கிறார்.

அவர் அந்நாளில் தீட்டியுள்ள பண்ணோடு பாடக்கூடிய ஒரு பாடல் அன்னை தெரேசாவின் இன்றைய அறப்பணிகளை அப்படியே படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. பெண் குலத்தவருக்கு அறிவுரை கூறும் முறையிலேயே பெண் மதி மாலை என்னும் அந்த நீண்ட பாடலை அவர் தீட்டி யிருக்கிறார். அதில் 'பரோபகாரம்' என்னும் துணைத் தலைப்பின்கீழ் அவர் இயற்றியுள்ள வரிகள் வருமாறு:

'மதியிது மதியிது பெண்ணே—புண்ணிய
வதியல்ல வோநல்ல மகராசி கண்ணே!

. . . . . . . . . . .

. . . . . . . . . . .

'துக்கமுள் ளோரைநீ தேற்று—வரும்
குருடர் முடவர் பசி யாற்று; —மதியிது . . .

'தாய்போல் எளியவரைத் தாங்கு—வெறும்
வாயுற வும்மன வைரமும் நீங்கு; —மதியிது . . .

'பிணியுடையோரை நீ தேடு—கட்டத்
துணியுடன் காய்கறி சோறுநீ போடு; —மதியிது . . .'

இந்தப் பாடல் வரிகளைப் படிக்கும்பொழுது என்ன தோன்றுகிறது?

தமக்குப் பிறகு ஏறத்தாழ எண்பத்தைந்து ஆண்டுகள் கழிந்து தோன்றக்கூடிய ஒரு நங்கை, வறுமையினால் வருந்துவோருக்கும், நோயாளிகளுக்கும், புறக்கணிக்கப்பட்ட குழந்தைகளுக்கும் தாய்போலப் புகலிடம் தந்து பலவகையிலும் அறப்பணியாற்றுவார் என்பதை முன்கூட்டியே அறிவிப்புச் செய்ததுபோல் இந்த அழகிய பாடல் வரிகள் அமைந்துள்ளன அல்லவா?

### மணிமேகலையின் மறுவடிவம்

தமிழகத்தைப் பொறுத்தமட்டில், அறப்பணி ஆற்றிய சான்றோர்கள் பன்னெடுங்காலமாகவே வாழ்ந்து வந்திருக்கிறார்கள். அவர்களுள் கோவலனுக்கு மாதவிபால் பிறந்த மணிமேகலை கன்னித் துறவியாகவே வாழ்ந்து கொடையறம் புரிந்த பெருமைக்கு உரியவள். மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்னும் பெரும்புலவர், அம் மணிமேகலை நங்கையையே கதைத் தலைவியாக வடித்து ஒரு காப்பியமே தீட்டியிருக்கிறார்; அதற்கு மணிமேகலை என்றே பெயரும் சூட்டியிருக்கிறார்.

அந்தக் காவியத்தில் வரும் 'உலக அறவி புக்க காதை' என்னும் பாடல் பகுதி அன்னை தெரேசாவையும் அவரது

அறப்பணி இயக்கத்தையுமே கண்முன் நிறுத்துவதாக அமைந்துள்ளது.

ஆபுத்திரனால் கோமுகிப் பொய்கையில் வீசியெறியப்பட்ட அமுத சுரபி' என்னும் பாத்திரம் மணிமேகலையின் கைக்குக் கிட்டுகிறது. அதனைக் கையில் ஏந்தியவண்ணம், பசியாலும் பிணியாலும் நலிவோருக்கு உணவளிக்கும் அறப்பணியை மணிமேகலை மேற்கொள்கிறாள்; வழியில் காயசண்டிகை என்பவளின் பசிப்பிணியைப் போக்குகிறாள். அப்போது காயசண்டிகை, மணிமேகலையிடம்,

'தணிவில் வெம்பசி தவிர்த்தனை! வணங்கினேன்;
மணிமேக லை!என் வான்பதிப் படர்கேன்;
துக்கந் துடைக்கும் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கதில்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்
'உலக அறவி' ஒன்றுண்டு; அதனிடை
ஊரு ராங்கண் உறுபசி யுழந்தோர்,
ஆரு மின்மையின் அரும்பணி யுற்றோர்,
இடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்;
வடுவாழ் கூந்தல்! அதன்பால் போக!'

என்று கூறுகிறாள்.

இப்பாடல் வரிகள், படிக்கும்பொழுது, மணிமேகலை, அன்னை தெரேசாவையும், 'உலக அறவி' என்னும் அம்பலம், அறப்பணி இல்லங்களையும் நம் நினைவுக்குக் கொண்டு வருகின்றன அல்லவா?

அந்நாள் தமிழ்நாட்டின் அறச்செல்வி மணிமேகலையின் மறுவடிவமாகவே அன்னை தெரேசா நம் கண்ணுக்குக் காட்சி தருகின்றார். மணிமேகலை திருமணம் புரிந்து கொள்ளாமல் இறுதிவரை கன்னித் துறவியாகவே வாழ்ந்து வந்தாள். அன்னை தெரேசாவும் அங்ஙனமே கன்னித் துறவியாக வாழ்ந்துவருகிறார். மணிமேகலை தனக்கு மட்டுமே இன்பங்களை நாடி, சொத்துகளைத் தேடும்

தன்னலக்காரியாகத் தன் வாழ்க்கைத்தேரை ஓட்டிச் செல்ல வில்லை; அன்னை தெரேசாவும் தன்னல வெறியையே தகர்த்தெறிந்தவராகப் பொதுநலம் ஒன்றையே குறிக் கோளாய்க் கொண்டவராகத் தம் வாழ்க்கை வண்டியை இயக்கிச் செல்கிறார். மணிமேகலை பசிப்பிணி போக்கும் அறப்பணியைத் தெருவெல்லாம் நடந்துசென்று மக்களோடு ஒருத்தியாய்க் கலந்துநின்று செவ்வனே செய்தாள்; அன்னை தெரேசாவும் திக்கற்ற நோயாளிகள், குழந்தைகள், கைவிடப்பட்ட காரிகையர்—முதலானோரின் பசிப்பிணி போக்கும் அறப்பணியைத் தெருவெல்லாம் நடையாய் நடந்து மக்களில் தாமும் ஒருவராகக் கலந்துநின்று செம்மையான முறைகளில் செய்துவருகிறார்.

## இணையில்லாத தனிச்சிறப்புகள்

எல்லா மனிதரும் எட்டுத் திக்கிலும் கொண்டாடத்தக்க உலகப் புகழை எளிதில் எய்த இயலாது, ஒரு மனிதர் உலகமே போற்றும் வகையில் ஒளிவீசி நிற்கிறார் எனில், அவருக்கு எனச் சில தனிச்சிறப்புகள் அமைந்திருக்கவே வேண்டும். அன்னை தெரேசாவும் தமக்கென்று சில தனிச் சிறப்புகளுக்குத் தாயகமாக விளங்குகின்றவரே ஆவார்.

தமது பன்னிரண்டாம் அகவையிலேயே இந்தியாவில் வாழும் ஏழையரின் துயரம்பற்றிக் கேட்ட அளவில், இறைப் பற்றோடு அவர்களுக்கு ஏதேனும் தொண்டுபுரிய வேண்டும் என்று எண்ணினாரே—அந்த இளம்பருவப் பொதுப் பணி ஆர்வமே அன்னை தெரேசாவின் முதல் தனிச்சிறப்பு.

பெற்றோர், உற்றார், உறவினர் இவர்தம் அன்புப் பிணைப்பையே உதறிவிட்டுத் தனிப்பட்ட முறையில் வாழ்க்கை இன்பங்களையெல்லாம் துறந்துவிட்டுத் தாம் கன்னித்துறவி ஆன அளவில் நில்லாமல், தமது பிறந்த நாட்டையே துறந்துவிட்டு நெடுந்தொலைவுக்கு அப்பால் உள்ள அயல் நாடு ஒன்றுக்கு (இந்தியாவுக்கு) அந்த இளம் வயதிலேயே பயணம் புறப்பட்டாரே—அந்த இணையில்லாத துணிவு, அன்னை தெரேசாவின் அடுத்த பெருந்தனிச்சிறப்பு.

கிடைத்த பதவியை உடும்பாகப் பிடித்துக்கொள்வதோடு நில்லாமல், மென்மேலும் பதவிக் கனிகளை எட்டிப் பறிக்க ஏங்குவதே பொதுவான மனித இயல்பு. அன்னை தெரேசாவோ ஓர் உயர்நிலைப் பள்ளியின் முதல்வர் பதவியையே அடையும் அளவுக்கு உயர்ந்து நின்றவர்; என்றாலும், குடிசைவாழ் மக்களின் கொடுந்துயரை நீக்கும் குறிக்கோளோடு அந்த மதிப்பு மிகுந்த, பண வருவாயும் உள்ள முதல்வர் பதவியைத் துறந்துவிட்டு வெறுங்கையோடு வீதியிலே அடிவைத்தாரே—அந்தப் பதவித் துறப்பும் அன்னை தெரேசாவின் இன்னொரு தனிச்சிறப்பு.

கன்னியர் மடத்தைச் சார்ந்த எவரும் மடத்தைத் தாண்டி வெளியே வந்து மக்களோடு கலந்து பழக எண்ணுவதில்லை; மடத்தின் விதிகளும் இடம் கொடுப்பதில்லை. ஆனால், ஒவ்வொருவரும் உயிர்வாழும் நோக்கமே மற்ற உயிர்களுக்கு உற்றதுணையாக உதவுதல்தான் என்னும் உயரிய கருத்தை உள்ளத்தில் ஏந்தியவராகக் கன்னியர் மடத்தைவிட்டே வெளியேறத் துணிந்தாரே—திக்கற்ற மக்களுக்கெல்லாம் தக்க புகலிடமாக 'அறப்பணி இயக்கம்' என்னும் தனி அமைப்பு ஒன்றையும் உருவாக்கினாரே—அந்த 'அறப்புரட்சி' அன்னை தெரேசாவின் மற்றுமோர் தனிச்சிறப்பாகும்.

பிழைத்துக்கொள்ளக்கூடிய பிணியாளரிடம் பேரன்பு செலுத்தி அவர்களைப் பேணிக்காப்பதுதான் பொதுவான மனித இயல்பு. இறக்கப்போகும் மனிதரும் புறக்கணிப்புக்கு ஆளாகாமல் அமைதியாக, அன்பு மழையில் நனைந்தவர்களாகவே இறக்கவேண்டும் என்று எண்ணிச் செயலாற்ற முனைந்தவர் அன்னை தெரேசா. குறிப்பாக, பேணிக் காப்பார் எவருமே இன்றித் திக்கற்றவராகத் தெருவிலே மடியும் நோயாளிகள் தங்களைக் கவனிக்க எவரும் இல்லையே என்னும் ஏக்கச் சுமையோடு சாகாதவாறு அவர்களுக்கு என 'இறப்போர் நல விடுதியை' உலகில் முதன் முதல் ஏற்படுத்தியுள்ளாரே—அந்த இரக்கப் புரட்சி அன்னை தெரேசாவின் ஈடே இல்லாத இன்னுமொரு தனிச்சிறப்பாகும்.

தாம் நாகரிகம் தழைக்கும் மேனாடு ஒன்றில் பிறந்தவராயி னும், இந்திய நாட்டில் குடியேறியபின் இந்தியரைப் போலவே எளிய உடை உடுத்து, எளிய உணவு உண்டு, எளிய வீட்டிலேயே குடியிருந்து, ஓர் ஏழையைப்போலவே வாழ வேண்டும் என்று அடக்கத்தின் அணிகலனாகத் தம்மை ஒடுக்கிக்கொண்டு உறைகிறாரே—அந்த 'ஏழைகளின் தோழி நிலை' அன்னையின் தனிச்சிறப்புகளுக்கெல்லாம் மணிமுடி போன்றதாகும்.

இன்னும் எத்தனையோ தனிச்சிறப்புகளுக்கெல்லாம் தாயகமாகத் திகழும் அன்னை தெரேசா, மகளிர் குலத்துக்கு மட்டுமன்றி மனித குலத்துக்கே வழிகாட்டும் ஒளிவிளக்கு ஆவார்.

குற்றால அருவியில் குளிப்பாரை எத்தகைய கொடும்பிணி யும் ஒட்டாது ஓடிவிடும் என்பர் தமிழ்ச் சான்றோர். சிற்றேதும் தந்நலத்தோடு கொள்ளாமல் பார்முழுதும் அறப் பணி இயக்கத்தை வேரோடச் செய்துவரும் அன்னை தெரேசாவும் வற்றாத குளிர் அருவியாகவே திக்கற்ற நோயாளிகளையும் குழந்தைகளையும் வாழவைத்து வையப் புகழ் பெறுகின்றார்.

வானிலிருந்து பெய்யும் மழை மேடு, பள்ளம், காடு, கழனி என்றெல்லாம் பாகுபாடு பார்ப்பதில்லை. அறப்பணி இயக்கத்தைத் தோற்றுவித்துள்ள அன்னை தெரேசாவும் சாதி, சமயம், நாடு, மொழி என்னும் வேறுபாடுகளுக் கெல்லாம் இடங்கொடாமல் எல்லா ஏழைகளுக்கும், பிணி யாளர்களுக்குமே நடுநிலை பிறழாமல் நற்பணிகள் ஆற்றி வருகிறார்.

'மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!'

என்று இளங்கோவடிகள் தம்முடைய சிலப்பதிகாரக் காப்பி யத்தில் மழையைப் புகழ்ந்துள்ளார்.

'அன்னை தெரேசாவின் அறப்பணி வாழ்க!
அன்னை தெரேசாவின் அருட்பணி வாழ்க!'

என நாமும் உளம் மகிழ்ந்து வாழ்த்துவோமாக!

---

## பயிற்சி

பின்வரும் தலைப்புகள் குறித்து இரண்டு பக்கங்களுக்கு மிகாமல் கட்டுரை வரைக:

1. நேருவின் நெஞ்சம் நெகிழ்ந்த நிகழ்ச்சி.
2. பி. சி. ராயின் பிறந்த நாள் செய்தி.
3. இளமையில் அன்னை தெரேசாவிடம் எழுந்த பொதுப் பணி எண்ணம்.
4. அன்னையார் கண்ட கல்கத்தாக் காட்சிகள்.
5. புதிய பெயர்பூண்ட நிகழ்ச்சி.
6. 'உள்ளொளி நாள்' உருவான நிகழ்ச்சி.
7. அன்னையார் செய்த அறப்புரட்சி.
8. அன்னையாரை அடைந்த முதல் தொண்டர்.
9. ஏழைக்கு இலவசத் தொண்டு.
10. பணியாற்றத் தூண்டிய பிணியாளர்.
11. இறப்போர் நல இல்லத்தின் தோற்றமும் தொடக் எதிர்ப்பும்.
12. அரசியல் தலைவர் விடுத்த அறைகூவல்.
13. பூசாரி கண்ட காளி தேவி.
14. சேய்களுக்குத் தாயகம்—சிசு பவனம்.
15. சேய்நல விடுதி செய்யும் தொண்டுகள்.
16. தொழுநோயாளர் இல்லம்.
17. 'நான் தாகமாக இருக்கிறேன்.'
18. துணைவர்கள்—உடன் உழைப்பாளர்கள்.
19. விந்தையாக வந்த நன்கொடைகள்.
20. எல்லாச் சமயத்தவரும் ஈந்த நன்கொடை.
21. போப் ஆண்டவரின் புனிதக் கொடை.
22. நெஞ்சைத் தொட்ட பிஞ்சுக் கைகள்.
23. அன்னை தெரேசா பெற்ற பரிசுகளும் பாராட்டும்.
24. அன்னை தெரேசாவின் பண்பு நலன்கள்.
25. மணிமேகலையின் மறுவடிவம்.

